# சுவடிப் பதிப்புத் திறன்

## தொகுதி-1

பதிப்பாசிரியர்கள்

முனைவர் சா. கிருட்டினமூர்த்தி
முனைவர் தி. மகாலட்சுமி
முனைவர் சு. நிர்மலாதேவி
திரு. த. பூமிநாகநாதன்



INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை - 600 113

# சுவடிப் பதிப்புத் திறன்

## (தொகுதி - 1)

பதிப்பாசிரியர்கள்

முனைவர் சா. கிருட்டினமூர்த்தி
முனைவர் தி. மகாலட்சுமி
முனைவர் சூ. நிர்மலா தேவி
திரு. பூமிநாகநாதன்




உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சி.ஐ.டி. வளாகம், தரமணி
சென்னை 600 113.

டாக்டர் பா. சிவந்தி ஆதித்தனார் அறக்கட்டளை

கருத்தரங்கு - 1

---

# BIBLIOGRAPHICAL DATA


| | |
|---|---|
| Title of the Book | : Suvadi patipput thiran Part - 1 |
| Editors | : Dr. S. Krishnamoorthy<br>Dr. T. Mahalakshmi<br>Dr. S. Nirmala Devi<br>Mr. D. Boominaganathan |
| Publisher & © | : International Institute of Tamil Studies<br>C.P.T. Campus, Chennai 600 113. |
| First Edition | : 2002 |
| Publication No | : 425 |
| Language | : Tamil |
| Paper Used | : 18.6 kg TNPL Maplitho |
| Size of the Book | : 1/8 Demy |
| Printing type Used | : 10 points |
| No. of Pages | : vi+210 |
| No. of Copies | : 1200 |
| Price | : Rs. 50/- |
| Printed by | : United Bind Graphics<br>101-D, Royapettah High Road,<br>Mylapore, Chennai - 4<br>Ph: 4984693, 4661807 |
| Subject | : Manuscriptology |


---

முனைவர் சா. கிருட்டினமூர்த்தி
இயக்குநர்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
தரமணி, சென்னை 600 113

# பதிப்புரை

அச்சுக்கலை தமிழகத்தில் பரவத் தொடங்கிய காலக்கட்டத்தில், தமிழ்ச் சான்றோர்கள் காட்டிய ஆர்வம் காரணமாய்ச் சுவடியில் உறங்கிக் கிடந்த காப்பியம், சிற்றிலக்கியம், இலக்கணம் போன்ற எண்ணற்ற நூல்கள் வெளிவரத் தொடங்கின. இதன் விளைவாகச் சிறப்புறு சுவடிப் பதிப்பு நூல்கள் பல வெளிவந்திருப்பினும் பதிப்பாளர், சுவடி வரலாறு போன்றவற்றை உள்ளடக்கிய நூல் பதிப்பித்தல் என்ற கோட்பாட்டிற்கு அன்று அவ்வளவு முக்கியத்துவம் அளிக்கப்படவில்லை.

ஆயின் இன்று பதிப்புத் தொடர்பான ஒரு விரிந்த நோக்கு தமிழகத்தில் நிலவி வருகிறது. அவ்வகையில் பதிப்பு நூல்கள் பற்றிய ஒரு வரலாற்றுச் சிந்தனையில் கருத்தைச் செலுத்திச் சுவடித் துறையில் எந்த அளவிற்கு இவ்வீச்சு படர்ந்து படிந்துள்ளது என்பதனை ஆய்ந்து அறிதல் இன்றியமையாத் தேவையாகிறது. அத்தேவையை நிறைவு செய்யும் முயற்சியின் சிறு வெளிப்பாடாக இவ்வறக்கட்டளைப் பொழிவின் பொருண்மை அமைகிறது.

பதிப்பு வரலாறு, பதிப்புவகை, பதிப்புப்பணி, பண்டைய பதிப்பாசிரியர்கள், பதிப்பு முயற்சி, பதிப்புரை, பதிப்புச் சிக்கல், பாடவேறுபாடு, நிறுவன பல்கலைக்கழக நூலகப் பதிப்புகள், தலபுராண சித்த மருத்துவ நாட்டுப்புற (கதைப்பாடல்) இலக்கிய இலக்கண (யாப்பு)ப் பதிப்புகள், முன்னோடிகளின் சுவடித்திரட்டு, பழஞ்சுவடிகளின் இன்றைய நிலை, முதன்மை ஆதாரங்களின் இன்றியமையாமை, அச்சு நூல்களிலுள்ள பிழைகளையும் குறைகளையும் களைவதற்கான வழிமுறைகள், பதிப்பிக்க எடுத்துக் கொண்ட சுவடி பற்றிய துறை அறிவின் இன்றியமையாமை போன்ற பொருண்மைகள் தொகுக்கப் பெற்றுச் செப்பம் செய்யப் பெற்றுச் **சுவடிப் பதிப்புத் திறன்** என்ற பெயரில் இரு தொகுதிகளாக வெளியிடப் பெறுகின்றன. பல்துறை சார்ந்த சுவடிகள் எவ்வகையில் எங்ஙனமெல்லாம் நூல்களாகி உள்ளன என அறியவும், இனிவரும் பதிப்புகள் செம்மைபெற அமையவும் இந்நூல் உறுதுணை புரியும். இப்பொருண்மையின் தேவை கருதியும், நூலைப் பயன்கொள்வாரின் எளிமை கருதியும் இரண்டு தொகுதிகளாக வெளியிடப் பெறும் நிலையில் முதல்

தொகுதியில் மூன்று கட்டுரைகளும், இரண்டாம் தொகுதியில் ஐந்து கட்டுரைகளும் இடம் பெற்றுள்ளன. இந்நூல் சுவடியியல் ஆய்வாளர்களுக்கும், மாணவர்களுக்கும், தமிழ் ஆர்வலர்களுக்கும், நூற் பதிப்பாளர்களுக்கும் பெரும் பயன் நல்குவதாக அமையும் என்பதில் ஐயமில்லை.

**தமிழில் ஆவணங்கள்** என்ற கருத்தரங்கினை நிறுவனம் நடத்திய போது, கருத்தரங்கு சிறப்பாக அமைய **டாக்டர் பா. சிவந்தி ஆதித்தனார் நற்பணி மன்றம்** நிதியுதவி அளித்தது. அதனைத் தொடர்ந்து நிறுவப்பட்டதே இந்த டாக்டர் சிவந்தி ஆதித்தனார் அறக்கட்டளை. இதன் முதல் நிகழ்வு அறக்கட்டளைக் கருத்தரங்காக அமைகிறது. இவ்வறக்கட்டளை நிறுவ நிதியுதவி நல்கி உதவிய **டாக்டர் பா. சிவந்தி ஆதித்தனார்** நற்பணி மன்றத்திற்கும், இந்நிதியினைப் பெற்றுத் தந்து உதவிய **திரு. நெல்லை நெடுமாறன்** அவர்களுக்கும் அன்பு கலந்த நன்றியினைத் தெரிவித்துக் கொள்வதில் பெரிதும் மகிழ்ச்சியுறுகிறேன்.

இக்கருத்தரங்கில் கலந்து கொள்ள அழைத்த அழைப்பினை ஏற்றும், கட்டுரைகளைக் குறித்த காலத்தில் அனுப்பிக் கொடுத்தும், கருத்தரங்கப் பொழிவு சிறப்புற அமைய ஒத்துழைப்பு நல்கிய ஆன்றோர் பெருமக்களுக்கு என் இதயங்கலந்த பாராட்டுகள்.

நிறுவன வளர்ச்சிக்கு ஆக்கமும் ஊக்கமும் அளித்து வரும் நிறுவனத் தலைவரும், தமிழக அரசின் மாண்புமிகு கல்வித்துறை அமைச்சருமான **முனைவர் மு. தம்பிதுரை** அவர்களுக்கும், தமிழ் வளர்ச்சி பண்பாட்டுத்துறை மற்றும் அறநிலையத்துறைச் செயலாளர் **திரு. பு.ஏ. இராமையா இ.ஆ.ப.** அவர்களுக்கும், தமிழ் வளர்ச்சி பண்பாட்டுத் துறையின் கூடுதல் செயலர் **திரு. தா. சந்திரசேகரன் இ.ஆ.ப.** அவர்களுக்கும் என் நன்றிகளை உரித்தாக்குகிறேன்.

இந்நூல் உருவாவதற்கு உறுதுணையாயிருந்ததோடு மட்டுமன்றி நூலுக்கு மெய்ப்புத்திருத்தமும் செய்து உதவிய முனைவர் தி. மகாலட்சுமி, முனைவர் கூ. நிர்மலாதேவி, திரு. த. பூமிநாகநாதன் ஆகியோர்க்கும் நன்றி. இந்நூலினைச் சிறப்புற ஒளியச்சுக் கோப்புச் செய்து கொடுத்த திரு. சு. கண்ணன், திருமதி. இரா. வெண்ணிலா, ஆகியோர்க்கும் கவினுற அச்சிட்டுத் தந்த யுனைடெட் பைண்ட் கிராபிக்ஸ் அச்சகத்தார்க்கும் என் நன்றியும் வாழ்த்துகளும் உரியன.

**இயக்குநர்**

# பொருளடக்கம்

# 1. பதிப்பு முன்னோடிகளின் பதிப்புப்பணி

முனைவர் பூ. சுப்பிரமணியம்

நிலபுலம், வீடுவாசல், நகைநட்டு, ஆடையணி, ஆடுமாடு, மரம் செடி கொடி போன்றவை நம்முடைய சொத்துகளாகவே கருதப்பெறுபவை. கார் முதலான வாகனங்கள், நவீன சமையற் கருவிகள் முதல், தொலைக்காட்சி, குளிர்சாதனக் கருவிகள் வரையிலான ஆடம்பரக் கருவிகள் போன்றவையும் இக்காலச் சொத்துகளாகக் கருதப்பெறுகின்றன. இவற்றை அசையும் சொத்து, அசையாச் சொத்து (Movable property, Immovable property) எனவும் பகுத்துப் பேசுவதுண்டு.

## அறிவுச் செல்வம்

இந்தச் சொத்துவகைகளிலிருந்து வேறுபட்ட, மக்களுக்கே உரியதான, அரிய சொத்து ஒன்று உண்டு. அது வெறும் சொத்து மட்டுமன்று; அரிய செல்வமுமாகிறது. அதுவே அறிவுச்செல்வம் என்பதாகும். அறிவுச் செல்வம் என்பது எது? மனித உள்ளத்திலிருந்து உருவாகும் உற்பத்திப் பொருள் எதுவோ அதுவே அறிவுச் செல்வம் ஆகிறது. அது, தனிமனித உணர்விலிருந்து கற்பனையிலிருந்து, பட்டறிவிலிருந்து உருவாகிப் புதியதொரு படைப்பாக வெளியாகிறது. அப்படைப்பு,

*1.* புதியதொரு பொருள் படைப்பு அல்லது தொழில் சார்ந்த படைப்பாக வெளியாகுமானால் அது தொழிற் செல்வம் எனப்பெறுகிறது.

*2.* புதியதோர் இலக்கியம், இசை, ஓவியம், சிற்பம், திரைப்படம், புகைப்படம் என்னும் வடிவங்களில் ஒன்றாகப் படைக்கப்பெறுமானால் அஃது அறிவுச்செல்வம் அல்லது கலைச்செல்வம் என்னும் பெயரைப் பெறுகிறது.

## படைப்பு

உழைப்பால் பெறப்படும் Physical propertyயைக் காட்டிலும், அறிவின் ஆற்றலால் உருவாகும் கலைச்செல்வத்திற்கு அறிவு, உழைப்பு, காலம் என்ற மூன்றும் இன்றியமையாதனவாகின்றன. அறிவு ஆற்றலின் அடிப்படையில் உருவாகும் அக்கலைச்செல்வம் இரவு, பகல் என்று நோக்காத கடின உழைப்பால் வடிவெடுக்கிறது. காலம் செல்லச் செல்லச் சிறிது சிறிதாகப் பலதிருத்தங்களையும், மாற்றங்களையும் பெற்று முழுமையானதொரு படைப்பாக வெளியாகிறது. இது ஒரு கண்டுபிடிப்பு (Discovery) ஆகாது. கற்பனைத்

திறனால் வெளியாகும் புதியதொரு படைப்பே (Invention) உலகின் எந்தப் பகுதியிலும் வெளியாகாததொரு புதிய படைப்பு.

## படைப்பும் படைப்பாளரும்

ஒருவர் உள்ளத்திலிருந்து வெளியாகும் கலைச்செல்வங்கள் நாட்டு மக்களுக்கு ஏன்? உலக மக்களுக்கே பெரிதும் நன்மை பயப்பதாக அமையும். அத்தகு படைப்பாளர் ஒருவரின் படைப்புத்திறனை ஊக்குவித்தல் இன்றியமையாத ஒன்று. அதனால் நாட்டுமக்கள் அப்படைப்புகளை எளிமையாகவும் விரைவாகவும், மிகக் குறைந்த செலவில் பெற்றுப் பயனடைய முடியும். பல படைப்புகள் தோன்றும் வாய்ப்பும் உருவாகும். அது நாட்டின் செல்வத்தையும் செல்வாக்கையும் பெருக்கும்.

படைப்பாளர் ஒருவர் தாமே நாட்டிற்கு அறிமுகமாகி முன்னேற்றமடைவது என்பது அரிது. அவர்தம் கற்பனைத் திறனையும் வெளியீட்டையும் பாராட்டிச் சிறப்பிக்க நாடு முன்வர வேண்டும். வெளியீட்டாளர் தனி மனிதராகவோ ஒரு நிறுவனமாகவோ இருக்கலாம். அவர்கள் தம் புதிய படைப்புகளின் உழைப்புக்கேற்ற கைம்மாறுகளைச் செய்து ஈடுசெய்வதன் மூலம் அப்படைப்புகளை உலகறியச் செய்ய முடியும்.

## காப்புரிமை

படைப்பாளர்களின் இசைவு பெறாமல் அப்படைப்புகளை யாரும் பயன்படுத்த இயலாது என்ற நிலையை உருவாக்கி உறுதிப்படுத்தவும் வேண்டும். இந்த உருவாக்கமே காப்புரிமை எனப்பெறுகிறது. அவ்வுரிமை பாதுகாக்கப் பெறவும் வேண்டும்.

படைப்பாளருக்கு அளிக்கும் இந்த உரிமை எத்தகையது? உரிமை பெறும் வழிமுறைகள் யாவை? அந்த உரிமைகளைப் பாதுகாக்கும் வழிவகைகள் என்னென்ன? இத்தகு ஐயங்கள் கலைஞர்களுக்கும் வெளியீட்டாளர்களுக்கும் நிறுவனங்களுக்கும் ஏற்படுவது இயல்பே.

அதேசமயம் நாட்டில் உருவாகும் எந்தவகைக் கலைப்பொருளும் ஒருவருக்கே உரிமையுடையது என்பது பொருந்தாது. அந்தக் கலைப்படைப்பாளர் எங்கிருந்தோ தோன்றித் திடீரென அப்பொருளை உலகின் முன் கொட்டவில்லை. உலகில் பிறந்து, பலரோடு பழகி, பலநூல்களையும் பலர் அனுபவங்களையும் ஆழ்ந்தறிந்து, பலர் ஒத்துழைப்போடு உருவாக்கப்பெற்றதே அவர்தம் கலைச்செல்வம். எனவே, அதன் படைப்புரிமையில் அனைவருக்கும் பங்கு உண்டு அல்லவா? ஒருவருக்கே உரியது அவ்வுரிமை என்பது பொருந்துமா? இத்தகு வினாக்களும் எழாமலில்லை.

## நமது மரபுச்செல்வம்

'ஏர் நடந்தால் ஊர் நடக்கும்' என்ற அனுபவத்தைக் கண்டவர்கள் நம் மக்கள். நெடுநிலை மாடத்து நிலா முற்றத்தில் விளையாடி மகிழ்ந்தார்கள். இயற்கையினூடே இறைவனைக் காணும் மரபுப்படி குன்றுகளிலும் மலைச்சரிவுகளிலும் கோயில்களை உருவாக்கி வழிபட்டார்கள். மன்னர் மாளிகை தொடங்கிச் சிறுசிறு கிராமங்கள் வரை தமிழ் மருத்துவமுறைகளைக் கையாண்டு நோய்களைத் துரத்தினார்கள். உண்மைச் சோதிட முறைகளைக் கண்டிருந்தார்கள். இவ்வாறு தங்கள் அறிவாற்றலாலும் அனுபவ அறிவாலும் தோன்றிய எண்ணங்களை அவ்வப்போது எடுத்துக் கூறிப் பிறரறியுமாறு செய்தார்கள். அக்கருத்துகள் என்றும் நிலைபெறவேண்டும் என்ற பெருநோக்கில் அவற்றை ஓலைகளில் பொதிந்து வைத்தார்கள். அக்கருத்துகளாகிய அறிஞர்தம் கலைகள் பொதிந்து கிடக்கும் ஓலைச் சுவடிகளே நமது **மரபுச் செல்வங்களா**கின்றன.

## மரபுச் செல்வக் காப்புரிமை

நமது மரபுச் செல்வங்களின் செய்திகளை முழுமையாக அறிய வேண்டும் என்ற ஆர்வமின்மையால், அவற்றைப் பாதுகாக்க வேண்டும் என்ற நிலை மக்களிடையே உருவாகவில்லை. மாறாக அச்செல்வங்களின் அழிவும், இடமாற்றமும் நிகழ்ந்துள்ளன.

## மரபுச்செல்வ அழிவு

பாண்டிய நாட்டின் பெருநகரங்களுள் ஒன்றாக விளங்கியதும் முச்சங்கங்களுள் ஒன்றான இடைச்சங்கம் இடம் பெற்றிருந்ததுமாகிய கபாடபுரம் கடற்கோளினால் அழிந்தபோது தமிழ்ச்சங்கத்திலிருந்த *8149* சுவடிகளும் அழிந்தன. திருக்குரானுக்கு மாறான நூல்கள் மண்மேலிருக்கலாமோ என்ற வெறி உணர்வால் நமது நூற்சாலைகள் பல அக்கினி பகவானுக்குத் தத்தம் செய்யப் பெற்றன. மதுரையில் தேடித்தொகுத்து வைத்திருந்த ஓலைச் சுவடிகள், குதிரைக்கு வெந்நீர் காய்ச்சுவதற்காக இருநூறு நாட்கள் பயன்படுத்தப் பெற்றுள்ளன.

'பழைய ஏடுகளைக் கண்டகண்ட இடங்களில் போடக்கூடாதாம். நெய்யில் தோய்த்து ஹோமஞ்செய்துவிட வேண்டுமாம். இங்கு அப்படித்தான் செய்தார்கள்' என்பது கரிவலம்வந்த நல்லூர் தேவஸ்தானத்தில் நிகழ்ந்த செய்தி.

'எங்கள் வீட்டில் ஊர்க்காட்டு வாத்தியார் புத்தகங்கள் *(சுவடிகள்)* வண்டிக்கணக்காக இருந்தன. அவற்றில் என்ன இருக்கிறது என்பதை அறிய எனக்குத் திறமையில்லை. ஆடிப்பதினெட்டில் சுவடிகளைத் தேர்போலக் கட்டி

ஆற்றில் விடுவது சம்பிரதாயம் என்று முதிய மகளிர் சொன்னார்கள். நான் அப்படித்தான் செய்தேன்' என்பது திருநெல்வேலி, தெற்குப் புதுத்தெரு, வக்கீல் சுப்பையா பிள்ளை அவர்களின் கூற்று. இப்படிப் பலநிகழ்ச்சிகள், நடந்து முடிந்த அல்லது நடத்தி முடித்த நமது மரபுச் செல்வங்களின் அழிவை உணர்த்துவன.

## இடமாற்றம்

| | | |
|---|---|---|
| India Office Library London | - | 34 |
| British Museum ..... London | - | 99 |
| Royal Asiatic Society ..... London | - | 37 |
| Edinburg University ..... | - | 6 |
| Glascow University ..... | - | 10 |
| John Rylands Library Manchester | - | 11 |
| Cambridge University ..... | - | 20 |
| Federal Republic of Germany ..... | - | 31 |
| France ..... | - | 63 |
| Sweden ...... | - | 29 |

போன்ற பல வெளிநாடுகளிலுள்ள தமிழ்ச்சுவடிகள் மேலே கூறிய பல வகை அழிவுகளுக்குப் பலியாகாமல் தப்பியவை என்றாலும், இன்று நேரடியாக நமக்குப் பயன்படாத நிலையை அடைந்து விட்டவை.

## இடமாற்றச் சுவடிகளுக்கு ஓரிரு சான்றுகள்

வர்மசூத்திரம் என்னும் ஒருநூல் சென்னை, ஆசியவியல் நிறுவனத்தில் வெளியிடப்பெற்றுள்ளது. நானூறு பக்க அளவில், டாக்டர் **பூ.சுப்பிரமணியம்** அவர்களால் பதிப்பிக்கப்பெற்று வெளியாகியுள்ள இந்நூல் ஒரு சுவடிப்பதிப்பு வெளியீடாகும். இதற்கான மூலச்சுவடி,

Kyoto International Institute of Asian Studies, Kyoto, 619-02. JAPAN என்னும் நிறுவனத்தில் பாதுகாக்கப்பெற்று வரும் ஓலைச்சுவடியேயாகும். சென்னை, ஆசியவியல் நிறுவன இயக்குநராக இருந்த டாக்டர் ஷு. ஹிகோசகா அவர்கள் இச்சுவடியை நகல் (Xerox) எடுத்து இந்நிறுவனத்திற்குக் கொண்டு வந்தார்கள். அச்சுவடியை முறையாகப் பதிப்பித்து வெளியிடப் பெற்ற நூலே **'வர்மசூத்திரம்'** என்னும் இந்நிறுவன வெளியீடாகும்.

இந்த வர்மசூத்திரம் என்னும் தமிழ்ச்சுவடி ஜப்பான் நாட்டிற்குக் கொண்டு சென்றது போலவே பல நூற்றுக்கணக்கான தமிழ்ச்சுவடிகள் வெளிநாடுகளுக்குக் கொண்டு செல்லப் பெற்றுள்ளன.

குறுந்தொகை மூலமும் உரையும் என்னும் நூல் தஞ்சை, தமிழ்ப் பல்கலைக்கழகத்தின் வழி - *1985*இல் வெளியாகியுள்ளது. திரு. மு. சண்முகம் பிள்ளை அவர்கள் பலவகை இணைப்புகளுடன் பதிப்பித்திருக்கிறார்கள். ஒப்பிட உதவிய நான்கு சுவடிகளுள் இலண்டன், பிரிட்டிஷ் அருங்காட்சியகத்திலிருந்து பெற்ற தாள் சுவடியும் ஒன்று.

இது, டாக்டர் பர்னல் துரையவர்களின் தூண்டுதலால் *1884*இல் படியெடுக்கப்பெற்று, மதுரை முத்துப்பிள்ளையவர்களால் பார்வையிடப்பெற்ற சுவடி. டாக்டர் பர்னல் துரை அவர்கள் இலண்டன் பிரிட்டிஷ் அருங்காட்சியகத்திற்கு அனுப்பி வைத்திருக்கிறார். இச்சுவடி தமிழ்ப் பல்கலைக்கழகப் பதிப்பிற்குத் துணைபுரிந்துள்ளது. இன்றும் வெளிநாடுகளில் தமிழ்ச் சுவடிகள் இருந்து வருகின்றன என்பதற்கு இதுவும் ஒரு சான்றாகிறது.

## பதிப்புப்பணி - பொது

பதிப்பித்தல் என்பது அச்சிட்டு வெளியிடுதல் என்றே பலராலும் பலநிலைகளிலும் பேசப்பட்டுவருகிறது. ஆனால் பதிப்பிக்கும் பணிக்கும், அச்சிடும் பணிக்கும் மிகுதியான வேறுபாடுகள் உண்டு. அப்படியானால் அந்தப் **பதிப்புப்பணி** என்பதுதான் எது? நூலை வெளியிடும் பணிகளுள் சிறப்பிடம் பெறுகின்ற பதிப்புப் பணியைப் பற்றி விளக்குமுன் பொதுநிலை பற்றி அறிய வேண்டியுள்ளது.

ஒரு நூலை உருவாக்கி, அச்சிட்டு வெளியிடும் முயற்சியில் ஆறு நிலைகள் இடம் பெறுகின்றன. நூலுக்கு வேண்டிய கருத்துகளைத் திரட்டித் தொகுத்து, ஏதோ ஓரளவில் தமது மொழிநடையில் நூல் செய்திகளை உருவாக்குவது என்பது முதற்பணி. அம்முயற்சியில் ஈடுபட்டு நூலை உருவாக்குவோர் நூலாசிரியர் எனப்படுகிறார்.

அந்த நூற் செய்திகள் செய்யுள் நடையில் இயற்றப்பெறுமேயானால் அந்த நூல் எளியோருக்கும் பயன்படுமளவில் செய்யுளுக்குரிய உரை எழுதி, மேலும் தேவையான விளக்கவுரை, மேற்கோள்கள், எடுத்துக்காட்டுகள் ஆகியவற்றோடு நூலுக்கு வேண்டிய விளக்கம் தந்து நூலை எளிமைப் படுத்துவோர் உரையாசிரியர் எனப்பெறுகிறார்.

மூன்றாவது பணியே பதிப்புப்பணி. இதுபற்றிய விளக்கம் விரிவாக அமைவதால், பிற பணிகளைப் பற்றிக் கூறிய பிறகு இறுதியில் தனியாகக் கொடுக்கப்பெறுகிறது.

நூலாசிரியர் உருவாக்க, உரையாசிரியர் உரைவிளக்கம் தர, நூலாக எவ்வாறு வெளிவரவேண்டுமோ அவ்வாறு பதிப்பாசிரியர் முறைப்படுத்தித்தர,

அதை அச்சிட்டு வெளியிட வேண்டும் என்று முனைவோர் நான்காவது நிலையினராகிய வெளியீட்டாளர் ஆகிறார். அவர் நூலாசிரியரியரிடமும் உரையாசிரிடமும் வேண்டிய இசைவுபெற்று வெளியிடும் பணியை மேற்கொள்ளுகிறார். அச்சிடுவதற்கான முழுச்செலவுகளையும் அவர் ஏற்கிறார். அதாவது அச்சுகோக்கும் செலவு அல்லது கணிப்பொறியின் வழிப் பதிவுசெய்யும் செலவு, தாள், அட்டை, அட்டைப்படமும் பிறபடங்களும் தயாரித்தல், அச்சிடுதல், கட்டமைப்புச் செய்தல் போன்றவற்றிற்கான செலவினங்களை ஏற்றுக்கொண்டு, நூலை விற்பனைக்குத் தயாராக்குவது வெளியீட்டாளரின் பணியாகும்.

வெளியிடுவோர் நூலை அச்சிடுவதற்கான பலவகைச் செலவினங்களை மட்டுமே ஏற்கிறார். வெளியீட்டாளர் நூலாசிரியரிடமிருந்து பெற்றுத்தந்த முழுமையான நூல்வடிவத்திற்கான கையெழுத்துப்படிச் செய்திகளை அச்சுக்கோத்தோ கணிப்பொறியில் பதிவுசெய்தோ அச்சிட்டு நூல்வடிவம் பெறச் செய்வோர் அச்சிடுவோர் என்னும் ஐந்தாமிடத்தைப் பெறுகிறார். அச்சிடுவது என்பதும் ஒரே முறையில் எளிதாக முடித்துவிடக்கூடிய செயல் அன்று. அச்சுக்கோத்து அல்லது கணிப்பொறியில் பதிவு செய்து எடுக்கும் அச்சுப்படிவம் முழுமையானதாக அமைந்துவிடமுடியாது. கையெழுத்துப்படி அல்லது தட்டச்சுப்படியைப் பார்த்து அச்சுக்கோக்கும் போது அல்லது பதிவு செய்யும் போது பல எழுத்துப்பிழைகள் ஏற்படலாம்; சொற்கள் பல இணைந்தும் பிரிந்தும் அமையலாம்; சில எழுத்துகள் அல்லது சொற்கள் திரும்பத் திரும்பக் கூடுதலாக இடம் பெற்றுவிடக்கூடும்; சில விடுபட்டுப்போகவுங் கூடும். மூலப்படியின் குறைபாட்டால் நிறுத்தற்குறிகள் பல இல்லாமற் போகலாம்; தேவையான இடங்களில் உரிய குறிகள் இடப்படாமல் தவறான குறிகள் இடம்பெற்று விடுவதும் உண்டு. பொருள் அடிப்படைக்கு ஏற்பப் பத்திப்பிரிப்பு முறை அமையாமற் போகலாம். பல பத்திகளுக்குரிய செய்திகள் பக்கக்கணக்கில் ஒரே பத்தியாக இடம் பெற்றிருக்கும் அல்லது வேண்டாத முறையில் இரண்டுவரி மூன்றுவரியாக, முடிவுபெறாத வரிகள் ஆகிய அளவில் ஒரு பத்தியாகப் பிரிந்து நிற்கவும் கூடும்.

அச்சு எழுத்து அமைப்பில் சில பெரிய அளவு எழுத்துகள் இடையிடையே இடம் பெற்றுவிடக்கூடும். தொடர்களின் இடையில் எண்கள் இடம்பெறுமேயானால் அவை பெரிய அளவில் அமைந்துவிடும் அல்லது சிறியதாகவும் அமையும். இயல் தலைப்புகள், உட்தலைப்புகள், பத்தித்தலைப்புகள் போன்றவற்றின் எழுத்து அளவுகளும் ஒன்றுக்கொன்று மாறிக் காணப்படும். அதாவது நூலுள் அமையும் உட்தலைப்புகள் *12* புள்ளியில் இடம்பெறவேண்டும் என்று முடிவு செய்து அவ்வாறே உட்தலைப்புகள் அனைத்தையும் *12* புள்ளியில் அமைக்கும் முறை கையாளப்பெறும். திடீரென்று ஒரு உட்தலைப்பு, செய்திகள்

அமையும் *10* புள்ளி எழுத்திலேயே அமைந்து விடுவதுண்டு. அல்லது மேலே இயல் தலைப்பில் கொடுக்கப்பெற்ற *14* புள்ளி எழுத்தே உட்தலைப்பிலும் இடம்பெற்று விடுவதுமுண்டு.

சொல்லுக்குச்சொல் இடைவெளி அமைய வேண்டும். அந்த இடைவெளி ஓர் எழுத்து அமையும் இடத்தில் பாதி அளவாக இருக்கும். முற்றுப்புள்ளி போன்ற புள்ளிகளையடுத்து ஓர் எழுத்துக்குரிய முழு இடம் இடைவெளியாக அமையலாம். அச்சுப்படியில் இந்த முறை மாறுபட்டுச் சொல்லுக்குச் சொல் இடைவெளியில்லாமலும் இரண்டு மூன்று எழுத்துகளுக்கான இடைவெளியோடும் சிலவரிகள் அமைந்துவிடும். வரிக்கு வரி விடப்படும் இடைவெளியும் ஒரேமாதிரியாக இல்லாமல், ஒருசில வரிகள் மிக நெருக்கமாகவும், ஒருசில வரிகள் மிகுதியான இடைவெளி பெற்றும் அமைவது உண்டு. பத்திகளின் தொடக்கவரி சிறிது உள்ளே தள்ளி அமையாமல் பிறவரிகளுக்குச் சமமாகவே அமையும். ஒரு பக்கத்தின் இறுதிவரியில் உட்தலைப்பு, பத்தித்தலைப்பு போன்ற ஏதேனும் ஒன்று மட்டும் இடம் பெற்று அதன் தொடர்ச்சி அடுத்த பக்கத்தில் இடம்பெறும்.

செய்யுட்களாயின் முறையான அடி அமைப்பும் சீர் அமைப்புமின்றி அமையக்கூடும். அதாவது செய்யுள், உரைநடைப்பகுதியின் தொடக்க வரி அமைப்புக்குச் சிறிது உள்ளடங்கியதாக இருக்கவேண்டும். முறையான சீர்கள் பிரிக்கப்பட்டு இடைவெளி விட்டு அமைய வேண்டும். பாட்டின் முடிவில் உரிய நிறுத்தற்குறி அமைய வேண்டும். பெரும்பாலும் இம்முறைகள் மாற்றம் பெற்று அமைதல் கூடும். செய்யுட்களின் எழுத்துகள் உரைநடை எழுத்தினும் சிறிது பெரியதாகவோ மாறுபட்டோ அமைதல் வேண்டும் என்னும் அமைப்பு முறைகளில் வேறுபட்டு அமைந்து விடக்கூடும்.

நூல்தலைப்பு, இயல்தலைப்புகள், உட்தலைப்புகள், பத்தித்தலைப்புகள், பாடல்களுக்கான பொருள் தலைப்புகள் போன்றவை முடிவு செய்யப்பட்ட எழுத்து அளவுகளுக்கு விஞ்சியனவாக அல்லது குறைந்தனவாக அல்லது மாறிமாறி இடம்பெற்று விடக்கூடும். ஒவ்வோர் இயலின் முடிவிலும் 'இயல் முற்றும்' 'முற்றிற்று' என்னும் சொற்கள் இயலுக்கு இயல் எழுத்து அளவு மாறியதாக அமைந்துவிடக்கூடும். சில இயல்களில் விடுபட்டுமிருக்கலாம். பாட்டு, உரைநடை, விளக்கவுரை, குறிப்புரை, எடுத்துக்காட்டுகள் போன்ற அனைத்துப்பகுதிகளும் அதற்குத் தேர்ந்தெடுக்கப்பெற்ற எழுத்து அளவுகளில் மாறுபட்டிருக்கக்கூடும்.

அச்சிடும் பணியை மேற்கொள்ளுவோர் இத்தகு பலவகைப் பிழைகளும் வேறுபாடுகளும் மாறுபாடுகளும் ஏற்பட்டுவிட்ட முறைகளை நுட்பமாகக் கவனித்துச் சரி செய்வது என்பது இயலாத ஒன்று. எனவே அச்சிடுவோர் நூலாசிரியரையோ பதிப்பாசிரியரையோ நாடவேண்டியுள்ளது.

அல்லது அச்சுப்படிதிருத்துவதில் முழு அனுபவம் பெற்றவர்களைப் பணிக்கு அமர்த்திக் கொள்ள வேண்டியுள்ளது. முறையான ஒருவரை நாடி ஒரு முறைக்கு இருமுறை, மும்முறை அச்சுப்படியைத் திருத்தச் செய்து, அவர்கள் குறிப்பிட்டுக்காட்டும் பிழைகளையும் பிற அமைப்புகளையும் சரி செய்து அச்சுப்படி தூய்மையடையும் வரை உழைக்க வேண்டியவர்களாகிறார்கள். திருத்தங்கள் முடிந்தபின் அச்சிட்டுத் திட்டமிட்டபடியான எண்ணிக்கையில் நூல்வடிவாக்கிக் கட்டமைப்புச் செய்து நூலாக்கித் தருகிறார்கள். பல வண்ணப்படங்களுடன் கூடிய அட்டையாக இருந்தால் அட்டைத்தயாரிப்பைத் தனி அச்சகத்தார் மேற்கொள்ளுவதும் உண்டு.

அச்சிட்டு நூலை உருவாக்கும் பணியில் அச்சுக்கோப்போர், அச்சுப்படி திருத்துவோர், அச்சிடுவோர் போன்றவர்களைத் தவிர, அச்சிட்ட தாள்களை நூல்வடிவாக்குவதில் கட்டமைப்பாளர் (Binder) பணிமுக்கிய இடம் பெறுகிறது. அப்பணியில் பக்கங்கள் மாறாதவாறு தாள்களை மடித்துத்தருவோர், தைப்போர், கட்டமைப்புச் செய்வோர், ஓரங்களை வெட்டி ஒழுங்குபடுத்துவோர் (Cutting) உள்ளிட்ட பலருடைய உழைப்பும் இணைந்து நிற்கிறது.

ஒரு நூலை முழுமையாக அச்சிட்டு உருவாக்கிப் பல நூற்றுக்கணக்கான படிகளைத் தயாரித்த பிறகு அவற்றை விற்றுப் பலருக்கும் பயன்படுமாறு செய்தல் வேண்டும். அதே சமயம் வெளியீட்டாளர் செலவு செய்த பணத்தையும் நூல் விற்பனையின் மூலம் எடுத்தாக வேண்டியுள்ளது. விற்பனைக்கென்று தனியே ஓர் இடத்தைத் தேர்ந்தெடுத்துப் புத்தகங்களைப் பலருங்காணுமாறு செய்தும், மேலும் பலவாறு விளம்பரம் செய்தும் நூல்களை விற்கும் பொறுப்பை ஏற்போர் விற்பனையாளர் என்னும் ஆறாம் நிலையினர் ஆகின்றனர்.

ஒரு நூலை உருவாக்கி அச்சிட்டு விற்பனை செய்யும் பணிகளில் மேலே குறிப்பிடப்பெற்ற ஆறுநிலையினரைத் தவிர, நூலைச்சிறப்பிக்கும் பணிக்கு மேலும் பலருடைய உதவியும் தேவைப்படுகிறது. அதாவது, நூலின் மூலக்கருத்தாகிய கருப்பொருளை நூலின் பார்வையிலேயே விளங்கச்செய்வது நூலுக்கு உயிரூட்டும் உத்தியாகும். அட்டைப் படத்தின் மூலம் அந்த உத்தியை நிறைவு செய்யலாம். மேலும் சொற்களாலும் சொற்றொடர்களாலும் மட்டும் தெளிவுபடுத்த முடியாத சில கருத்துகளும் பொருள்களும் உருவங்களும் நூலுள் இடம் பெறக்கூடும். அக்கருத்துகளையும் பொருள்களையும் உருவங்களையும் விளக்கிக்காட்டி, நூலைப்படிப்போர் தம் உள்ளத்தில் நன்கு பதிய வைக்க வேண்டியது ஆசிரியர்களின் பொறுப்பாகிறது. அவ்வகை விளக்கங்களுக்குத் துணைபுரிவனவும் ஓவியங்களே. ஆசிரியர்கள் கூறும் கருத்துகளுக்கு ஏற்ற வகையில் வரைந்து கொடுப்பதற்கு ஓவியரின் துணை இன்றியமையாததாகிறது.

ஓவியரின் உணர்வுபூர்வமான படங்களால் நூல் மேலும் அழகும் விளக்கமும் பெற்றுச் சிறப்படைகிறது. இதே நிலையை உருவாக்குமளவில் வரைபடங்கள் பலவும் துணைபுரிகின்றன. அவற்றிற்கும் ஓவியம் அல்லது வரைபடவல்லுநர் துணை தேவைப்படுகிறது.

நூலில் இடம்பெறும் அணைக்கட்டுகள், கட்டிடங்கள், கோயில்கள், நினைவுச்சின்னங்கள் முதலான இடங்களை ஆங்காங்கு அமைத்துக்காட்ட வேண்டிய கட்டாயம் ஆசிரியர்களுக்கு உண்டு. நூலுள் இடம் பெறும் பல நிலைத் தலைவர்கள், சான்றோர்கள், முன்மாதிரியாக விளங்கும் அன்பர்கள் போன்றவர்களின் உருவங்களும் நூலுள் இடம்பெற வேண்டியுள்ளது. எடுத்துக்காட்ட வேண்டிய மிருகங்கள், பறவைகள் போன்ற பலவகை உயிரினங்களின் உருவங்களும் ஆங்காங்கு இன்றியமையாதனவாகின்றன. இலை, பூ, காய், பழம், செடி, கொடி, மரம் போன்றவற்றின் உண்மை வடிவங்களும் நூற்பொருள் விளக்கத்திற்குத் தேவைப்படுகின்றன. இவை அனைத்தும் ஓவியரின் கைவண்ணத்தால் உருவாக்கப்படுவதைக்காட்டிலும் உண்மை உருவங்களின் நிழற்படங்களால் நூலின் பெருமை உயர்வடைவது உறுதி. இவ்வகைப் படங்களைப் பெறப் புகைப்பட வல்லுநர்களின் திறமையை நாடவேண்டியுள்ளது. நூல் அச்சாகும் நிலையில் இவ்வாறு பலருடைய உழைப்பும் தேவைப்படுகிறது. இவைமட்டுமன்றி அச்சுக்குரிய கையெழுத்துப்படியைத் தயாரிக்கும் முன்பும் பலருடைய உதவியும் உழைப்பும் தேவைப்படுகின்றன. நூலாசிரியர் ஒருவரே பல செய்திளையும் திரட்டி நூலை எழுதி முழுமைபெறச் செய்துவிடமுடியாது. கருத்துகளைத் திரட்டுவதில் நூலாசிரியருக்குத் துணைபுரிவனவற்றை மூன்று வகைப்படுத்தலாம்.

*1.* ஆசிரியரின் சொந்தத்திறன் - தாம் இயற்றவிருக்கும் நூற்பொருளில் ஆசிரியருக்கு ஆழ்ந்த அறிவு இருப்பது முதல் துணையாகி அவருக்குப் பேருதவி புரிகிறது. அதாவது தம்மிடம் நிறைந்து கிடக்கும் பலவகை நூலறிவும், பட்டறிவுகளும் தாம் ஒரு நூலை இயற்ற வேண்டும் என்ற ஆர்வத்தைத் தோற்றுவிக்கின்றன. அந்த நூற் பொருள்களையும் பட்டறிவுகளையும் நினைத்து நினைத்து மகிழும் உள்ளமும், அவற்றைப் பலருக்கும் எடுத்துச் சொல்லும் ஆற்றலும் புதியதொரு நூலை இயற்றும் ஆர்வத்தை மேலும் வளர்க்கின்றன. இந்த இரண்டு பண்புகளும் வளருவதற்கான அடிப்படைக்காரணம் மற்றொன்று உண்டு. அதுவே அவருக்கு இருக்கும் இயற்கையான நினைவாற்றல். நினைவில் மிதக்கும் பலவகை நூல் கருத்துகளும், அனுபவக்கருத்துகளும் அவ்வப்போது பலவகை எண்ணங்களைத் தூண்டி மேலும் பலப்பல புதிய கருத்துகளைத் தோற்றுவிக்கின்றன. அப்புதிய கருத்துகள் அவர்தம் ஆய்வுத்திறனை வெளிப்படுத்துவனவாகின்றன. இத்தகு பலவகைச் சொந்தக்

கருத்துகள் வாழ்க்கையில் ஏற்படும் பலவகை அனுபவங்களோடு இணைந்து நின்று ஒரு புதிய நூலை உருவாக்குவதில் முதல் துணையாகின்றன.

*2.* துணைநூல்கள் - ஆசிரியர் தம் உள்ளக் கருத்துகளை நூல் வடிவில் எடுத்துச் சொல்லும்போது பலவகை உத்திகளைக் கையாள வேண்டியுள்ளது. தாம் எழுத விரும்பும் நூலின் கருப்பொருளை முதலில் உறுதிப்படுத்திக் கொள்ளுகிறார். பிறகு அதன் பலவகைப் பிரிவுகளையும் சிந்தித்துச் செய்திகளைத் திரட்டத் தொடங்குகிறார். தம்முடைய கருப்பொருளுக்கு ஏற்ற பிறர் தம் கருத்துகளை அறிந்து ஏற்றவற்றைத் திரட்டித் தொகுக்கப் பல ஆசிரியர்களின் நூல்கள் துணைபுரிகின்றன. அவற்றைத் தொகுத்துக்கொண்ட பிறகு அவற்றுள் தம் கருத்துக்கு உடன்பாடான கருத்துகளை ஆங்காங்குச் சுட்டித் தம் கருத்துகளை விரித்தும் தொகுத்தும் தருகிற முறையைக் கையாண்டு நூலை எழுதுகிறார். திரட்டியவற்றுள் தம் கருத்துக்கும் உலக நடைக்கும் ஒவ்வாத, மாறுபட்ட கருத்துகள் இருக்குமேயானால் அவற்றைக் காரண காரியங்களுடன் மறுத்துக் கூறுவது சிறந்த நூலாசிரியரின் பண்பாகிறது.

மேலும் தம்கருத்தை உலக வழக்குக்கு ஏற்பப் பொருத்திக்காட்டி நிலைநிறுத்தத் துணிவது அடுத்த உத்தியாகும். பிறர் கருத்துகள் ஏதும் இல்லாதவிடத்துத் தமது கருத்துகளைத் தக்க சான்றுகளுடன் எடுத்துக்கூறி அவற்றை நிலைநிறுத்தச் செய்வது ஆசிரியருக்கே உரிய தனித்திறனாகும். இவ்வாறு பலவகை உத்திகளைக் கையாண்டு ஒரு நூலை எழுதிமுடிப்பதற்குப் பிறர்தம் நூல்கள் துணையாகின்றன. இந்த நூல்களைத் தவிர இடத்திற்கு ஏற்ற பொருத்தமான சொற்களை, சொற்றொடர்களை அமைக்கவும், வேண்டியவிடத்து விளக்கந்தந்து தெளிவுபடுத்தவும் பலவகை அகராதிகளும் நிகண்டுகளும் துணைபுரிகின்றன.

*3.* சான்றோர் துணை - நூலுக்கான அடிப்படைச் செய்திகளையும் நிகழ்ச்சிகளையும் நேரில் பார்த்தும் கேட்டும் அறிய வேண்டும் என்று விரும்பிக் களப்பணி மேற்கொண்டு, பல இடங்களுக்கும் சென்று வரவேண்டிய நிலை ஆசிரியருக்கு ஏற்படக்கூடும். அவ்வாறு சென்று நண்பர்களையும் சான்றோர்களையும் அணுகுவது உண்டு. அப்போது அவர்கள் நூலாசிரியரின் ஐயங்களுக்கும் வினாக்களுக்கும் ஏற்ற முறையில் தங்களுக்குத் தெரிந்த செய்திகளைத் தந்தும், அவற்றிற்கான அடிப்படைச் சான்றுகளைக் காட்டியும் துணைபுரிகிறார்கள். மேலும் பல செய்திகள் கிடைக்குமிடங்களைச் சுட்டிக்காட்டியும், அப்பொருள் வல்லுநர்களை அறிமுகப்படுத்தியும் துணைநிற்கிறார்கள். துணைநூல்கள், ஆய்வேடுகள் போன்றவற்றைக் கொடுத்து உதவுவோர் சிலர். அதே நிலையில் துணைநிற்கும் நூலகங்கள் சில.

நூலாசிரியர் நூலை உருவாக்கி முழுவடிவம் பெறச்செய்த பிறகு, அந்த எழுத்துப்படியினை முழுமையாகவும் ஆழ்ந்தும் படித்தறிந்து அந்நூலுக்கான திருத்தமுறைகளை எடுத்துக்காட்டி, நூல் சிறப்படையத் துணைபுரிவோருள் ஓரிருவர் அவர்களின் கருத்துரைகளுக்கு ஏற்ப, நூலுள் மாற்றங்களைச் செய்யலாம். அதாவது, நூலுக்குப் புறம்பான செய்திகளிருப்பின் அவற்றை நீக்கி அமைக்க வேண்டிவரும். சில செய்திகள் மீண்டும் மீண்டும் வெவ்வேறு இடங்களில் இடம் பெற்றிருக்கக்கூடும். உரிய இடத்தில் மட்டும் பொருந்தச் செய்து, பொருந்தாத இடத்தில் நீக்க வேண்டும். நூலுக்கும் உலக வழக்குக்கும் ஏலாத அல்லது தகுதியுடையதாக இல்லாத பல சொற்களும் சொற்றொடர்களும் அமைந்துள்ளன என்பதை அறிஞர்கள் சுட்டிக்காட்டினால் அவற்றைத் தகுதியுடையனவாகத் திருத்தி அமைக்க முயற்சி செய்ய வேண்டும். இவ்வாறு அவர்கள் கண்டறிந்து சுட்டுவனவற்றில் கருத்து வேறுபாடுகளும் மாறுபாடுகளும் அமையலாம். அவ்வாறு அமைவனவற்றுள் குறைக்க வேண்டியவையோ சேர்க்க வேண்டியவையோ நீக்க வேண்டியவையோ இருக்குமாயின் அவற்றை முறையே குறைத்தும், சேர்த்தும், நீக்கியும், நூலைச் சரிசெய்ய வேண்டிவரும். திருத்தி அமைக்க வேண்டியவை எனவும், முறைப்படுத்திச் சரிசெய்ய வேண்டியவை எனவும் காரண, காரியங்களோடு எடுத்துக்காட்டுவார்களாயின், அவற்றைத் திருத்தி, முறைப்படுத்த வேண்டிவரும். இவ்வாறு பல்லாற்றானும் நூல் தூய்மையடையத் துணைபுரியும் சான்றோரும் நூல் வெளியீட்டில் துணை நின்றவர்களாகின்றனர்.

நூலாசிரியரின் தனித்திறமைகள் நூலை இயற்றி உருவாக்குகின்றன. அந்த உருவாக்கத்திற்குப் பலவகை நூல்களும் நூலகங்களும் துணையாகின்றன. செய்தியைத் திரட்டுவதில் பல நண்பர்களும் சான்றோர்களும் உதவிபுரிகிறார்கள். எழுதி முடிக்கப்பட்ட நூற்செய்திகளும் அத்துறை வல்லுநர் உதவியால் பலவகைத் திருத்தங்களைப் பெற்று முழுமையடைகின்றன. இச்செய்திகள் அனைத்தும் நூலாசிரியருக்குத் துணையாவனவாகும்.

பதிப்புப்பணியைக் குறித்து விளக்கப்படும் இப்பகுதியில் பதிப்பாசிரியருக்குத் துணை நிற்பனவற்றையல்லவா சுட்டவேண்டும்? இங்கே குறிப்பிட்டவை யாவும் மற்றொன்று விரித்தல் என்னும் குற்றத்தின் பாற்படாதா? இத்தகு வினாக்களுக்கு இடமேற்பட்டு விடுகிறது அல்லவா?

நூலாசிரியர் தம் நூலறிவாலும், பட்டறிவாலும், நினைவாற்றலாலும் ஆய்வுத்திறனாலும் அரியதோர் நூலை இயற்றுகிறார். ஒட்டுமொத்தமாக இயற்றப்பெறும் அந்த நூற்செய்திகளை முறைப்படுத்தி நூல்வடிவில் அமைக்கும் பதிப்பாசிரியருக்கு - சிறப்பாகச் சுவடிப்பதிப்பாசிரியருக்கு இந்த மூவகைத்திறனும் மிகுதியாகவே இருத்தல் தேவைப்படுகிறது.

சுவடிச்செய்திகளைப் படித்துப் புரிந்துகொள்ளப் பெருந்திறன் அவசியமாகிறது. நூல் செய்யுள் நடையாயிருப்பின் அப்பாடல்களை இனங்கண்டு அடிகளாகப் பிரித்து அமைத்தலுக்குச் செய்யுளிலக்கண அறிவு அவசியமாகிறது. அந்த இலக்கணத்தின் துணையால் சீருந்தளையும் பொருந்த அடிகளைப்பிரித்து அமைத்து அச்சில் பார்த்தவுடன் அது என்ன பாடல் என்பதைப் புரிந்துகொள்ளுமாறு உருவாக்க முடிகிறது. நூல்வடிவான பிறகு அனைவரும் அந்தப் பாடல்களைப் படித்துப் புரிந்து கொள்ளுமளவில் உரையெழுதி நூலை எளிமைப்படுத்தும் செயல் பதிப்பாசிரியரைச் சேர்ந்தது. அப்பாடல்களில் அமையும் பொருள் விளங்காத கடினச் சொற்கள், இலக்கண முறையால் தொகை நிலையாகவும் தொடர்நிலையாகவும், செய்யுள் நடைக்கு ஏற்பப் பலவாறு மாறியுந் திரிந்தும் அமையும் சொற்கள் போன்றவற்றிற்கான பொருளமைதியை இடத்திற்கேற்ப அமைத்துக்காட்டும் குறிப்புரை, விளக்கவுரைகள், எடுத்துக்காட்டுகள், ஒப்புமைப்பகுதிகள் ஆகியவற்றைத் தயாரித்து அமைக்கும் பதிப்பாசிரியரின் பணிக்கு நூலாசிரியரின் திறமையைக் காட்டிலும் பலமடங்கு திறமையும் ஆழ்ந்த நூலறிவும் இன்றியமையாதனவாகின்றன.

முதலில் நூலுள் ஐயம் ஏற்படுமேயானால் நூலாசிரியரை அணுகி ஐயத்தைக் கேட்டறிய முடியாத நிலையே சுவடிப் பதிப்பாசிரியருக்கு அமைகிறது. எனவே முழுமையாக நூற்பொருளை அவரே அறிய வேண்டியவராகிறார். இந்த நிலையில் நூலில் இடம்பெறும் ஆசிரியரின் உள்ளக்கருத்துகள் யாவை? நூலுள் விவரிக்கப்படும் செய்திகள் எத்தகையன? அவை என்ன நோக்கமுடையவை? யாருக்காகச் சொல்லப்பெற்றவை? என்ன பயன் தருபவை? என்பனபோன்ற வினாக்களுக்குரிய விடைகளையும் அறிந்து உணர்த்த வேண்டிய கட்டாயம் பதிப்பாசிரியருக்கு ஏற்படுகிறது.

சுவடியிலிருந்து படியெடுப்பது என்பது பதிப்பாசிரியரின் முதற்பணியாகும். ஆயினும் தொடர்ந்து நூலை முறைப்படுத்தி முழுமையாக்கும் மேற்குறிப்பிட்ட அனைத்துப்பணிகளும் பதிப்பாசிரியருக்குரியனவே ஆகின்றன. இத்தகு செயல்களுக்குத் துணைநூல்கள் பல இன்றியமையாதனவாகின்றன. சான்றோர் பலரின் துணையும் தேவைப்படுகிறது. எனவேதான் பதிப்புப்பணி பற்றிய இத்தலைப்பில் ஆசிரியருக்குரிய துணைகளாக இந்த மூன்றும் சுட்டப்பெற்றன.

ஒருநூலை எழுதி வெளியிடுவதில் மேலே ஆறுவகை நிலைகள் சுட்டப்பெற்றன. ஒருவர்தாமே நூலாசிரியராகவும் உரையாசிரியராகவும் இருந்து பதிப்பு முறையில் நெறிப்படுத்தி நூலை முழுமையாக்கவும் முடியும். அவரே அச்சகம், கணிப்பொறி முதலான வசதிகளைச் செய்துகொண்டு, சொந்தச்செலவில் நூலை வெளியிட்டுத் தாமே விற்பனையை மேற்கொள்ளவும்

முடியும். இப்படி ஒருவரே ஆறுநிலைகளையும் மேற்கொள்ளுவதுபோல இருவர், மூவராகவும் மேற்கொள்ளுவதுமுண்டு. அதாவது நூலை எழுதி முழுமையாக்கும் பணியை ஒருவரும், அச்சிட்டு விற்பனை செய்யும் பணியை மற்றொருவருமாக மேற்கொள்ளவும் இயலும்.

## பதிப்புப்பணி - சிறப்பு

நூலை உருவாக்கி அச்சிட்டு வெளியிடும் செயலில் அமையும் ஆறு நிலைகளில் மூன்றாவது இடத்தைப் பெறுவதாகக் குறிப்பிட்ட பதிப்புப்பணி நூல் வெளியீட்டில் சிறப்பிடம் பெறுகின்ற ஒன்று. எனவேதான் ஐந்து வகை நிலைகளையும் தொடக்கத்தில் விளக்கிவிட்டு இறுதியாக இப்பணி விளக்கப்படுகிறது.

பதிப்புப்பணி என்பதுதான் என்ன? தொடக்கத்திலேயே இந்த வினாவை எழுப்பி, இந்த வினாவிற்கு விளக்கம் தருமுன் பொதுநிலைபற்றிச் சில செய்திகள் எடுத்துக்காட்டப் பெற்றன. இப்பகுதியில் அந்த வினாவிற்கு விரிவான விளக்கம் இடம்பெறுகிறது. அச்சிட்டு வெளியிடப்பெறும் ஒருநூல் அச்சு வடிவில் எவ்வாறு அமையவேண்டுமோ அவ்வாறே கையெழுத்துப்படியில் முழுமையாக முறைப்படுத்தித் தூய்மையாக உருவாக்கித்தருவதே பதிப்புப்பணியாகும். 'பதிப்பு வேலை என்பது என்ன? இதற்கு ஆசிரியர் ஒருவர் தரும் விளக்கத்தை இங்கு அப்படியே நோக்குதல் பொருத்தமுடையதாக இருக்கும்.

To edit means to present anything in a disciplined manner to arrange, to annotate or otherwise prepare author's work for publication. (M.L. Chakkaraborti, 1975, p.318)

— உள்ளத்தைக் கொணர்தல் - முன்னிலவுவதை வெளிக்கொணர்தல் என்பதற்குச் சுவடியை அச்சேற்றுவதைக் கொள்ளலாம். அச்சுவடியைத் தேடி; .... பெயர்த்தெழுதி; ..... பாங்குடன் திருத்தி ..... செம்பதிப்பாக விதிப்படி அளித்தலே பதிப்பு வேலையாகும். அச்சக வாசலையடையும்வரை நிகழ்கின்ற அனைத்து வேலைகளுமே பதிப்பு வேலைகள் என்று கொள்ளத்தகும்'' என்பது பதிப்பாசிரியர்களும் அவர்தம் கடமைகளும்' என்னும் கட்டுரையில் இடம்பெறும் ஓர் எடுத்துக்காட்டு. இந்த எடுத்துக்காட்டில் 'ஆசிரியர் ஒருவர் இயற்றிய நூலை வெளியிடுவதற்கு ஏற்றவகையில் ஒழுங்குபடுத்தித் தயாரிப்பதே பதிப்புப்பணியாகும்' என்பது தெளிவுபடுத்தப்படுகிறது. இதை எடுத்துக்காட்டுகின்ற அதே கட்டுரையில், பதிப்பித்தல் என்பதன் விளக்கமாக,

*1.* முந்தைய படைப்பாளர்களின் படைப்புகளை வெளியிடுதல்.

*2.* அந்தப் படைப்பையே பதிப்புப் பொருளாகக் கொண்டு அதைப் பதிப்பிற்கு உருவாக்கம் செய்தல்

என்பன போன்று ஐந்து கருத்துகள் கூறப்பெறுகின்றன. அவற்றுள் பதிப்பித்தல் என்பதற்கு வெளியிடுதல், பதிப்பிற்கு உருவாக்கம் செய்தல் என்னும் விளக்கங்களே தரப்படுகின்றன. பதிப்பித்தல் என்பது பதிப்பிற்கு உருவாக்கம் செய்தல் என்னும் கருத்து அச்சிற்கு உருவாக்குதல் என்னும் பொருளில் அமைகிறது. இந்தக்கருத்துத் தொடரில் அச்சிடுதல் என்பதற்கும் பதிப்பித்தல் என்னும் சொல்லே பயன்படுத்தப்பெறுகிறது. இந்தக்கருத்துக்களைத் தொடர்ந்து,

"மேற்கருத்துகளைப் பொதுமைப்படுத்தி நோக்கும்பொழுது,

அ. தானே புதிய படைப்பை உருவாக்குதல்
ஆ. முன்புள்ள பிறர் படைப்பை வெளிப்படுத்திக் காட்டுதல்
இ. தொகுப்புக் கூறுகளை வகைப்படுத்திக் காட்டுதல்

போன்றவை பதிப்பித்தலின் செயலாக அடங்குமென்பதை உணரலாம்" என்னும் ஒரு தொகுப்பு அமைப்பும் இடம் பெறுகிறது. இப்பகுதியில் புதிய நூலை இயற்றுதல், பிறர் நூலை வெளியிடுதல் ஆகியவையும் பதிப்புப்பணிகள் ஆகும் என்னும் கருத்துகள் இடம் பெறுகின்றன.

"பதிப்பிற்கு உருவாக்குதல் பதிப்பு வேலை என்று கொண்டால் அதனை வெளியிடுதல் வெளியீட்டுப் பணியாகும். பதிப்பித்தல் வேறு; வெளியிடுதல் வேறு." என்னும் கருத்தும் தொடர்ந்து அக்கட்டுரையில் இடம்பெறுகிறது. 'பதிப்பிற்கு உருவாக்குதல் பதிப்பு வேலை' என்னுந் தொடரில் பதிப்பு என்னும் சொல், முதலில் வெளியிடுதல் அல்லது அச்சிடுதல் என்னும் பொருளில் அமைகிறது. மேலும்,

''சுயமாக உருவாக்கி வெளியிடுவதும், முன்னுள்ளவற்றை வெளியிடுவதுமே பதிப்பு என்று கொள்ளப்படும்" *(பக். 72)* என்னும் தொடர் வெளியிடுவதே பதிப்புப்பணி என்பதைத்தான் தெளிவாக எடுத்துக்காட்டுகிறது.

"நூல் பதிப்பாசிரியர்களுள், இருப்பவற்றை வெளிக்கொணருபவரும், புதியன படைப்பவரும் என இருதிறத்தோர் உள்ளனர்" *(பக். 81)* என்னும் வரிகள் பதிப்பாசிரியர் நூலாசிரியர் என்னும் இருதிறத்தாரையும் பதிப்பாசிரியர் என்றே கூறுகின்றன.

நூலாசிரியர் (Author), பதிப்பாசிரியர் (Editor) என்னும் இருதிறத்தாரின் பணிகள் வெவ்வேறானவை. ஒருகருப்பொருளை அடிப்படையாகக் கொண்டு ஒரு நூலைப் புதிதாக உருவாக்கித் தருபவர் நூலாசிரியர். நூலாசிரியர் ஒருவர் இயற்றிச் சுவடி அளவில் கிடப்பனவற்றைத் தூய்மையாகப் பெயர்த்தெழுதி, நூலைப்படிப்போருக்குப் பயன்படுமாறு அந்நூலுக்கு வேண்டிய விளக்கங்களைத் தந்து எளிமைப்படுத்தி அப்படியே அச்சிடும் அளவிற்கு முழுமையாக்கித் தருபவரே பதிப்பாசிரியர் ஆகிறார். இந்த இருவேறு பணிகளும் வெவ்வேறானவை என்பதில் தெளிவு பெறுதல் வேண்டும்.

## பதிப்புவகை

இக்கால நூலாசிரியர்கள் தங்கள் எண்ணங்களையும் கருத்துகளையும் பிற செய்திகளையும் திரட்டித் தொகுத்து எழுதி உருவாக்கித்தரும் நூல்களைப் பதிப்பிப்பது; பழந்தமிழர்தம் எண்ணங்களும் கருத்துகளும் அனுபவங்களும் பொதிந்து கிடக்கும் கருவூலங்களாகிய சுவடிகளில் உள்ள நூல்களைப் பதிப்பிப்பது; சுவடிப்பதிப்புகளாகவும், தாமே எழுதி வெளியிட்டனவாகவும் அமைந்த பழைய நூல்களை மறுபதிப்பாகப் பதிப்பிப்பது என்னும் அடிப்படையில் பதிப்புப்பணி மூன்று வகைப்படுகிறது.

## இக்கால நூல்பதிப்பு

இந்த மூன்று பணிகளுள் இக்கால நூலாசிரியர்கள் பெரும்பாலும் தாங்களே பதிப்பாசிரியர் பணிகளை மேற்கொண்டு விடுவதும் உண்டு. அவர்கள் தங்கள் படைப்புகளை முறைப்படுத்தி அச்சுக்குக் கொடுத்து விடுவார்கள். அத்தகு நூல்களுக்குப் பதிப்பாசிரியர் ஒருவர் அவசியமில்லை என்ற நிலை உருவாகி விடுகிறது. ஆனால் நூலாசிரியர்களில் ஒருசிலர் தங்கள் படைப்புகளை நூலாகும் அமைப்பில் இல்லாமல் ஒட்டுமொத்தமான செய்தித் தொகுப்பாக எழுதிக் கொடுத்துவிடுவர். அப்படிக் கொடுக்கப்பெறும் நூலையும் முறைப்படுத்தித் தூய்மை செய்யும் பணியையும் பதிப்பாசிரியர் மேற்கொள்ள வேண்டியவராகிறார். இருந்தாலும் அந்த எழுத்துப்படிகளில் எழுத்துப்பிழை, சொற்பிழைகளோ கையெழுத்துப் புரியாமையால் ஏற்படும் ஐயங்களோ ஏற்படக்கூடும் சொல்லமைப்பிலும் சொற்றொடரமைப்பிலும் ஐயங்கள் ஏற்படலாம் பாட்டுநடையில் பிழைகளோ வேறுபாடுகளோ காணப்படலாம். கருத்து வேறுபாடுகள், உரைகளில் விளக்கம் போதாத இடங்கள் போன்றவை இருக்கக்கூடும். இத்தகு பிழைகளையும் ஐயங்களையும் ஆசிரியரிடம் நேரில் சுட்டிக்காட்டி அவருடைய இசைவுடன் வேண்டிய திருத்தங்களைச் செய்து தம்பதிப்புப்பணியை எளிமையாக்கிக் கொள்ளும் வாய்ப்பு பதிப்பாசிரியருக்குக் கிடைக்கும். பதிப்பாசிரியரின் பிறபணிகள் குறித்துச் சுவடிப்பதிப்பில் விரிவாக

அமைகின்றன. அவையே இக்கால நூல்பதிப்புப்பணிக்கும் பொருந்துமாதலின் இங்குத் தனியே விவரிக்கப்பெறவில்லை.

## சுவடிப்பதிப்பு

சுவடிகளில், சிறப்பாக ஓலைச்சுவடிகளில் முடங்கிக் கிடக்கும் செய்திகள் யாவை? அவற்றைப் பதிப்பித்து, நூலாக அச்சிட்டு வெளியிடுவது அவசியந்தானா? அவசியமானால் அப்பணியை நிறைவேற்றுதவற்கு உரியவர் யார்? பதிப்பித்து வெளியிடத்துணிந்தால் அப்பணியின் அடிப்படைக் கொள்கைகள் யாவை? சுவடிப்பதிப்புகள் எவ்வாறு அமையவேண்டும்? பதிப்புப்பணியின் பலவகை நிலைகள் என்று குறிப்பிடத்தகுந்த நிலைகள் எவையேனும் உள்ளனவா? அந்தப் பலவகை நிலைகளிலும் ஏற்படும் சிக்கல்கள் யாவை? அந்தச் சிக்கல்களை விடுவிப்பதற்கான எளிய வழிமுறைகள் உண்டா? அந்த வழிமுறைகளின்படி நூலைப் பதிப்பிப்பதில் எதிர்ப்புகள் ஏற்பட வழியுண்டா? அனைவராலும் ஏற்றுக்கொள்ளத்தக்க வழிமுறைகள் என்று எவையேனும் உள்ளனவா? பதிப்பாசிரியர் ஒவ்வொருவரும் கையாளும் வெவ்வேறு வகையான பதிப்பு முறைகளில் நூல்கள் வெளியாகும்போது படிப்போருக்கு அவை பயன்படுவனவாக அமையும் வாய்ப்பு ஏற்படுமா? எவ்வாறாயினும் சுவடிப்பதிப்புகள் ஒரே மாதிரியான அமைப்பில் எளியவர் முதல் அனைவருக்கும் பயன்படும் அளவில் அமைய, என்னென்ன அமைப்பு முறைகளைக் கையாளலாம்? இத்தகு வினாக்களுக்கு விரிவான விடைகளை அறியும்போது, சுவடிப்பதிப்புப் பணிகளைப் பற்றிய பொதுக்கொள்கைகள் தெளிவாக வெளியாகிவிடும்.

## சுவடிச்செய்தியறிதலின் இன்றியமையாமை

சுவடிகளில் என்னென்ன பொருள் பற்றிய செய்திகள் எழுதப் பெற்றுள்ளன என்பதை அறிவது பதிப்புப் பணிக்கு அடிப்படையான தேவையாகிறது. ஒவ்வொரு சுவடியிலுமுள்ள பொருளைப்பற்றி அறிந்த பிறகு, பதிப்பாசிரியர் தம்மால் எந்தச் சுவடியை நல்லமுறையில் பதிப்பித்து வெளியிட முடியும் என்பது பற்றிச் சிந்திக்க வேண்டியவராகிறார். சுவடியில் உள்ள அப்பொருளில் தமக்கு அறிவாற்றலும் அனுபவமும் உண்டா? அப்பொருள் அனைவருக்கும் தெளிவாக விளங்குமாறு உரை, விளக்கவுரை போன்றவற்றை எழுதிச் சேர்க்கத் தம்மால் முடியுமா? ஐயம் ஏற்படுமிடங்களைத் தெளிவுபடுத்திக் கொள்ளுவதற்குரிய துணைநூல்கள் உள்ளனவா? அவற்றைத் தேடிப் பெறமுடியுமா? ஐயங்களைத் தீர்க்குமளவில் துணைபுரிய அத்துறை வல்லுநர்கள் இருக்கிறார்களா? அவர்களை நாடமுடியுமா? நாடினாலும் உதவி செய்வார்களா? என்பன போன்ற அடிப்படைச் செய்திகளைச் சிந்தித்து முடிவெடுக்க வேண்டிய பொறுப்புடையவராகிறார் பதிப்பாசிரியர். அந்தச் சுவடியில் எழுதப்பெற்றுள்ள

நூலைத் திறம்பட, எளிமையாக, அனைவரும் படித்துப் பயன்பெறுமளவில் பதிப்பித்து வெளியிடமுடியும் என்ற துணிவு பதிப்பாசிரியர் ஒருவருக்கு ஏற்படுகிறது. இந்த முடிவு முதற்கட்ட முடிவேயாகும்.

### முதற்கட்ட முடிவுக்குத் துணைநிற்பன - 1 சுவடி

சுவடிப்பொருள் யாது என்பதை அறிய வேண்டிய நிலை எப்போது ஏற்படுகிறது? ஒரு சுவடி கையில் கிடைத்த பிறகு அல்லவா? எனவே, முதற்கட்ட முடிவாகிய, இதனைப் பதிப்பித்து வெளியிடமுடியும் என்னும் பதிப்பாசிரியரின் துணிவுக்கு மூல காரணமாயிருப்பது சுவடியேயாகும். இந்த முடிவின் அடிப்படையில் பதிப்பாசிரியர் தாம் வெளியிட விரும்பும் மூலச்சுவடிகளையும், ஒப்பிட்டுத் திருத்தம் மேற்கொள்ளுவதற்கான துணைச்சுவடிகளையும் திரட்ட வேண்டியவராகிறார்.

### சுவடி திரட்டுவதில் முன்னோடிகளின் பணி

பெரும்பாலான பதிப்பாசிரியர்கள், அச்சுக்கலை தோன்றுமுன் அல்லது தாங்கள் கற்ற நூல்கள் அச்சு வடிவம் பெறாததன்முன் சுவடிகளை வைத்தே கற்க வேண்டியவர்களானார்கள். அச்சுக்கலை தோன்றியபிறகு தாங்கள் கற்றுத் தேறிய அல்லது தாங்கள் விரும்பிய நூல்களை அச்சிட்டு வெளியிட விரும்பினார்கள். அப்பணிக்குத் தாங்கள் படித்த அல்லது தங்களிடமிருந்த சுவடிகளையே பெரும்பாலும் பயன்படுத்தியுள்ளார்கள். அத்தகு சுவடிகளைப்பற்றிய செய்திகள் எதுவுமே அச்சு நூல்களில் இடம்பெறவில்லை.

தமிழர்தம் மரபுச் செல்வங்களாகிய சுவடிச்செய்திகள் அந்தச் சுவடிகளோடு அழிந்துபடாமல் காக்க வேண்டும் என்னும் ஆர்வத்தோடு சுவடிப் பதிப்புப்பணியை மேற்கொண்ட அறிஞர்கள் சிலர் தங்கள் பணிக்குத் துணைநின்ற சுவடிகளைப்பற்றியும், பிற ஊக்குவிப்புகளைப் பற்றியும் தங்கள் வெளியீடுகளில் நன்றி உணர்வோடு குறிப்பிட்டிருக்கிறார்கள்.

### திருக்குறள் சுவடிகள்

திரு. F.W. எல்லிஸ் அவர்கள் கி.பி. *1812*இல் வெளியிட்ட திருக்குறள் அறத்துப்பால் (அறப்பால்) என்பதே சுவடிப்பதிப்பு வெளியீடாக வெளிவந்த முதல் அச்சு நூலாகும் என்பர்.

சென்னையிலிருந்த ஆங்கில அலுவலர்களுக்குத் தென்னிந்திய மொழிகளைக் கற்பிக்க முடிவு செய்தார்கள். சென்னை மாவட்ட ஆட்சியராக இருந்த திரு. F.W. எல்லீஸ் அவர்களும், சர்வேயராகப் பணியாற்றிய திரு. காலின் மெக்கன்சி அவர்களும் சென்னைக் கல்விச் சங்கம் என்னும் ஓர்

அமைப்பை நிறுவி அதன் மூலம் தென்மொழிகளைக் கற்பிக்க ஏற்பாடு செய்தார்கள். தமிழ் கற்பிக்கும் நோக்கில் ஆங்கில மொழிபெயர்ப்புடன் வெளியான நூலே இந்தத் திருக்குறள் அறத்துப்பால் என்பது இந்த வெளியீட்டிற்கான மூலச்சுவடி பற்றிய செய்தி ஏதும் இந்நூலின் வழி அறிய இயலவில்லை.

இதே ஆண்டில் திருக்குறள் மூலபாடம் - நாலடியார் மூலபாடம் என்னும் இரண்டு நூல்களின் முழுப்பகுதிகளையும் ஒரே நூலாகத் திரு. ஞானப்பிரகாசன் அவர்கள் அச்சிட்டு வெளியிட்டுள்ளார்கள். இவற்றைச் சுவடிகளிலிருந்து எடுத்துப் பதிப்பித்தளித்தவர் திருநெல்வேலி **அம்பலவாணதேசிகர்** அவர்கள். இதிலும் சுவடிகளைப் பற்றிய செய்திகள் கிடைக்கவில்லை.

*1861*இல் வெளியான நல்லூர் **ஆறுமுகநாவலர்** அவர்களின் திருக்குறள் வெளியீட்டில் பல பிரதிரூபங்களைக்கொண்டு பரிசோதித்து வெளியிடப்பட்டது என்ற செய்தி மட்டுமே கிடைக்கிறது.

திரு. வ. உ. சிதம்பரனார் அவர்கள், திருக்குறள் மணக்குடவர் உரைச் சுவடி ஒன்றினைத் தேடிக் கண்டுபிடித்திருக்கிறார். அதை வெளியிடவேண்டும் என்னும் முயற்சியில் ஈடுபட்டுச் சென்னை, அரசினர் சுவடி நூலகச் சுவடி ஒன்றோடு ஒப்பிட்டு ஆய்வு செய்திருக்கிறார். மேலும் பல வகையில் முயற்சி செய்து டாக்டர் உ.வே. சாமிநாதையர் அவர்களிடமிருந்தும் ஒரு சுவடியைப் பெற்று ஒப்பிட்டு ஆய்வு செய்து நூலாக வெளியிட்டிருக்கிறார்.

பெரும்புலவர் தண்டபாணிதேசிகர் அவர்கள் *1950*இல் வெளியிட்ட திருக்குறள் உரைவளம் என்னும் நூலுக்கு,

*1.* தருமபுர ஆதீன நூலகச் சுவடி

*2.* திரு. சைவ எல்லப்ப நாவலர் அவர்களின் வீட்டுச்சுவடி

*3.* திரு. சோமசுந்தர தேசிகர் அவர்களின் தாள் சுவடி

*4.* ஈரோடு, திரு. வேரா. தெய்வசிகாமணிக்கவுண்டர் அவர்களின் *2* சுவடிகள் என ஐந்து சுவடிகள் ஒப்பிடப்பெற்று ஆய்வு செய்யப்பெற்றுள்ளன.

**தொல்காப்பியச் சுவடிகள்**

திருத்தணிகை சரவணப் பெருமாளையர் அவர்களின் பெயரன் திரு. துரைசாமி ஐயர் அவர்களின் சுவடி ஒன்று; புரசைவாக்கம் சாமுவேல் பண்டிதர் அவர்களின் சுவடி ஒன்று; தொல்காப்பியம் வரதராச முதலியார் அவர்களின்

சுவடி ஒன்று போன்ற *12* சுவடிகளைத் தேடி ஆராய்ந்து, *1855*இல் திரு. சி.வை. தாமோதரம் பிள்ளையவர்கள் பதிப்பித்து வெளியிட்ட நூல் தொல்காப்பியப் பொருளதிகாரம் - நச்சினார்க்கினியர் உரையாகும்.

மதுரைத் தமிழ்ச்சங்கத்தின் சார்பில் சுவடி தேடிச்சென்றபோது, ஆழ்வார் திருநகரி, தாயவலந்தீர்த்தான் கவிராயர் வீட்டில் தொல்காப்பியம், செய்யுளியல் - நச்சினார்க்கினியர் உரை, இரண்டு சுவடிகள் கிடைத்தன. அவற்றை அடிப்படையாகக் கொண்டு திரு. ரா. இராகவையங்கார் அவர்கள் செய்யுளியல் பதிப்பை மேற்கொண்டார்கள். திருமயிலை வித்துவான் சண்முகம் பிள்ளையவர்கள் தமிழ்ச்சங்கத்திற்குக் கொடுத்த தொல்காப்பியச் சுவடியில் இருந்த செய்யுளியல் பகுதியும் ஒப்பிடப்பெற்று *1917*இல் செய்யுளியல் தனிநூலாகத் தமிழ்ச்சங்கத்தில் வெளியிடப்பெற்றது.

சென்னை, தமிழ்ச்சங்க வெளியீடாக *1920*இல் தொல்காப்பியம், பொருளதிகாரம் இளம்பூரணர் உரையை (அகத், புறத்-இயல்கள் *2* மட்டும்) திரு. கா. நமச்சிவாய முதலியார் அவர்கள் ஆய்வு செய்து பதிப்பித்துள்ளார்கள். இப்பதிப்பிற்கு,

*1*. திரு. அருவரத விநாயகம் பிள்ளை அவர்களின் ஏடு ஒன்று.

*2*. மேற்படி பிள்ளையவர்கள் பெயர்த்து எழுதிய தாள் சுவடி ஒன்று.

*3*. திருமயிலை சண்முகம்பிள்ளை சுவடி ஒன்று

*4*. திரு.சே. சிவஞானம் பிள்ளை சுவடி ஒன்று - என்னும் நான்கு சுவடிகள் ஒப்பிடப்பெற்று ஆய்வு செய்யப்பெற்றுள்ளன.

பேராசிரியர் கந்தசாமி அவர்கள் மதுரைத் தமிழ்ச்சங்கத்தில் கல்வி பயிலுங்கால், தொல்காப்பியம், சேனாவரையர் உரையடங்கிய அச்சங்கச்சுவடி ஒன்றை வைத்துப் பயின்று வந்தார்கள். பிறகு திருவாவடுதுறை ஆதீனமடத்தில் பயிலும்போது அந்த ஆதீனச் சுவடி ஒன்றை வைத்துப் படித்து வந்தார்கள். இந்த இரண்டு சுவடிகளிலும் இருந்த பாடவேறுபாடுகளை நுணுகி ஆய்ந்து நூல்வடிவில் பதிப்பித்துத் தர, அதை *1923*இல் சைவசித்தாந்த நூற்பதிப்புக்கழகம் வெளியிட்டுள்ளது.

தொல்காப்பியம் முழுவதற்குமுரிய ஏட்டுச்சுவடி ஒன்றையும், எழுத்ததிகாரம் அச்சுநூல் ஒன்றையும் திரு. தி.த. கனகசுந்தரம்பிள்ளையவர் களிடமிருந்து பெற்று, எழுத்ததிகாரத்திற்கு மட்டும் பதவுரை முதலியன அமைத்துத் திரு. வ.உ. சிதம்பரனார் அவர்கள் பதிப்பித்து *1928*இல் வெளியிட்டுள்ளார்கள்.

தஞ்சை, சரசுவதிமகால் நூலகச் சுவடி ஒன்றும், அரித்துவாரமங்கலம் திரு. வா. கோபாலசாமி ரகுநாத ராசாளியார் அவர்களிடம் இருந்த சுவடி ஒன்றும், டாக்டர் உ.வே.சா. அவர்களின் சுவடி ஒன்றுமாகிய மூன்று சுவடிகளையும் ஆய்ந்து பெருமுயற்சிக்குப் பின் அது தெய்வச்சிலையார் உரையென்றறிந்து தொல்காப்பியம் சொல்லதிகாரம் தெய்வச்சிலையார் உரை என்ற நூலை *1929*இல் கரந்தைக்கவியரசு அரங்கவெங்கடாசலம் பிள்ளையவர்கள் பதிப்பித்துக் கரந்தைத் தமிழ்ச்சங்கத்தின் வழி வெளியிட்டுள்ளார்கள்.

திரு. வ. உ. சிதம்பரனார் அவர்கள் தொல்காப்பியம் பொருளதிகாரத்தின் அகத்திணை, புறத்திணை இயல்களை ஏற்கெனவே *1928*இல் வெளியிட்டிருந்தார்கள். எனவே அவை நீங்கலாகப் பிற ஏழு இயல்களையும் இரண்டு பகுதிகளாக முறையே *1933, 36*களில் வெளியிட்டார்கள். இப்பதிப்பிற்குத் திரு. ச. வையாபுரிப்பிள்ளை, திரு. த.மு. சொர்ணம்பிள்ளை, திரு. தி.நா. சுப்பிரமணிய ஐயர், திரு. தி.த. கனக சுந்தரம்பிள்ளை, திரு. ரா. ராகவையங்கார், மயிலாப்பூர் திரு. வி. துரைசாமிஐயர் ஆகிய அறுவரிடமிருந்த சுவடிகளை முயன்று பெற்றுத் தம்மிடமிருந்த சுவடியோடு ஆய்வு செய்துள்ளார் திரு. வ.உ.சி. அவர்கள்.

பலவகையான ஆய்வுநெறிகளின் அடிப்படையில் திரு. சி. கணேசஐயர் அவர்கள் எழுதிய அரிய உரை விளக்கக்குறிப்புகளுடன் கூடிய வெளியீடு ஒன்று *1943*இல் வெளிவந்துள்ளது. அது திருவாளர்கள் சி.வை.தா., ச. வையாபுரிப்பிள்ளை ஆகியோரின் பதிப்புகளை அடிப்படையாகக் கொண்டு, மேலும் பல திருத்தங்களும் விளக்கங்களும் பெற்றுள்ளது.

## இலக்கியச் சுவடிகள்

பாட்டு, தொகை, காப்பியம் என்னும் தமிழ் இலக்கிய வகைகளில் சீவகசிந்தாமணி என்னும் சமண இலக்கியமாகிய காப்பியமே முதன் முதலில் அச்சாகியுள்ளது. Rev.H. பவர் அவர்கள் திருநெல்வேலி திரு. இ. முத்தையா பிள்ளை அவர்களின் துணைக் கொண்டு *1968*இல் நாமகள் இலம்பகத்தை மட்டும் வெளியிட்டிருக்கிறார்கள். *1845* அளவில் திரு. எச். துறு அவர்கள் தொடங்கிய சீவகசிந்தாமணிப் பதிப்புப்பணி, பல இடையூறுகளுக்கிடையே தடைப்பட்டு இறுதியில் முதல் இலம்பகம் மட்டும் *1868*இல் வெளியாகியிருக்கிறது. அடுத்து முதல் ஐந்து இலம்பகங்களைத் திரு. ப. அரங்கசாமிபிள்ளை அவர்கள் பதிப்பித்து *1883*இல் வெளியிட்டிருக்கிறார்கள்.

சீவகசிந்தாமணி முழுமையான நூலாக *1887*இல் வெளிவந்தது. இது டாக்டர் உ.வே. சாமிநாதையர் அவர்களின் முதற்சுவடிப்பதிப்பு வெளியீடு என்பது

குறிப்பிடத்தக்கது. இப்பதிப்பிற்கு நச்சினார்க்கினியர் உரையுடன் கூடிய சுவடிகள் 19ம், மூலம் மட்டும் உள்ள சுவடிகள் 4ம் ஆக இருபத்து மூன்று சுவடிகளைத் திரட்டிய பணி, பதிப்பாசிரியரின் முதற்கட்டப் பணிக்குச் சிறந்த எடுத்துக்காட்டாகிறது.

இலக்கியச் சுவடிப்பதிப்புகளில் இரண்டாம் இடம் பெறுவது சிலப்பதிகாரம் ஆகும். இந்நூலின் புகார்க்காண்டம் மட்டும் 1876இல் வெளிவந்தது. இதன் பதிப்பாசிரியர் திரு. ஈ. சீனிவாச ராகவாச்சாரியார் அவர்கள். "சேரமான் பெருமாள் நாயனார் இயற்றிய சிலப்பதிகாரம்" என்றே குறிப்பிடப்பெற்றுள்ளது. கிடைத்த சுவடி பற்றிய செய்தி ஏதும் இல்லை.

1880இல் இதே புகார்க்காண்டத்தைச் சோடசாவதானம் சுப்பராயச்செட்டியார் அவர்கள் உரையுடன் பதிப்பித்து வெளியிட்டிருக்கிறார்கள். அவர்களிடமிருந்த சுவடியுடன் திரு மயிலை திரு. அண்ணாமலை உபாத்தியாயர் அளித்த சுவடி ஒன்றும் இந்தப் பதிப்புப் பணிக்குத் துணைபுரிந்துள்ளது.

1892இல் வெளிவந்த சிலப்பதிகாரம் -அடியார்க்கு நல்லார் உரை என்னும் நூலே முழுமையான முதற்பதிப்பு வெளியீடு என்பது குறிப்பிடத்தக்கது. இதற்குத் திருவாவடுதுறை ஆதீனச் சுவடி முதல் ஆழ்வார் திருநகரி பெரிய திருவடிக்கவிராயர் சுவடி ஈறாகப் பதினான்கு உரையோடு கூடிய சுவடிகளும், எட்டு மூலம் மட்டும் உள்ள சுவடிகளுமாக இருப்பத்திரண்டு சுவடிகள் கிடைத்தன என்று கூறுவது தவறு. திருவாவடுதுறை ஆதீனம், தருமபுர ஆதீனம், திருவண்ணாமலை ஆதீனம், செங்கோலமடம் ஆகிய ஆதீன மடங்கள், சென்னை, தஞ்சை ஆகிய இடங்களிலுள்ள சுவடி நூலகங்கள், ஆழ்வார் திருநகரி முதல் மதுரை ஈறாகச் சுமார் முப்பது ஊர்களிலுள்ள தமிழ்ப்புலவர்களின் வீடுகள் ஆகியவற்றிற்கு நேரில் சென்றும், இங்கிலாந்து, பாரிசு நகரம் ஆகிய இடங்களிலுள்ள சுவடி நூலகங்களுக்குக் கடிதம் மூலம் தொடர்பு கொண்டும் டாக்டர் உ.வே.சா. அவர்கள் தேடியலைந்து திரட்டிய சுவடிகள் என்று கூறுவதே உண்மை.

'கலித்தொகை மூலமும் உரையும்' என்னும் சுவடிப்பதிப்பு நூல் முதன் முதலில் திரு. சி.வை. தாமோதரம் பிள்ளையவர்களால் 1887இல் வெளியிடப்பெற்றது. இதற்கு யாழ்ப்பாணம் வி. கனகசபைப்பிள்ளை அவர்களின் சுவடி முதலாகத் திருவாவடுதுறை ஆதீனச்சுவடி ஈறாக, நச்சினார்க்கினியர் உரையுடன் கூடிய சுவடிகள் ஆறும், மூலச்சுவடிகள் ஆறுமாகப் பன்னிரண்டு சுவடிகளைப் பலவாறு முயன்று திரட்டியுள்ளார் திரு. சி.வை.தா. அவர்கள்.

திரு. இ.வை. அனந்தராமையர் அவர்கள், *1924, 25, 31* ஆகிய மூன்று ஆண்டுகளில் மூன்று பகுதிகளாகக் கலித்தொகையைப் பதிப்பித்து வெளியிட்டிருக்கிறார்கள். இந்தப் பதிப்புப்பணிக்கு டாக்டர் உ.வே.சா. அவர்கள் அளித்த இரண்டு சுவடிகளும் ஓர் அச்சுநூலும் அடிப்படையாக அமைந்தன.

திரு. சி.வை. தாமோதரம் பிள்ளையவர்கள், திருவாவடுதுறை ஆதீனச்சுவடியும், திரு. மகாலிங்க அய்யர், கரூர் திரு. வேங்கடராம ஐயங்கார், திரு. அனந்தவிசய முதலியார் திரு. கனசபைப்பிள்ளை போன்ற பலரிடமிருந்து பெற்ற சுவடிகளுமாக எட்டுச் சுவடிகளை ஆய்வு செய்து சூளாமணி என்னும் இலக்கியத்தை *1889*இல் பதிப்பித்து வெளியிட்டுள்ளார்கள்.

*1889*இல் பத்துப்பாட்டைப் பதிப்பித்து வெளியிட்ட டாக்டர் உ.வே. சாமிநாதையர் அவர்கள், திருநெல்வேலி திருப்பாற்கடனாதன் கவிராயர் வீடு, ஆழ்வார் திருநகரியில் பல புலவர்கள் வீடுகள், தருமபுர ஆதீன நூலகம் போன்ற பல இடங்களுக்குச் சென்று தேடிப் பன்னிரண்டு சுவடிகளைப் பெற்றுத் தம் பதிப்புப்பணியை மேற்கொண்டிருக்கிறார்.

'மணிமேகலை - அரும்பதவுரையுடன்' என்னும் நூல் *1898*இல் டாக்டர் உ.வே.சா. அவர்களின் பதிப்பு வெளியீடாக வெளிவந்தது. இப் பதிப்புப் பணிக்குத், திருவாவடுதுறை ஆதீனம், எட்டயபுரம் பெரிய அரண்மனை, மதுரைத் தமிழ்ச்சங்கம், சென்னை அரசினர் சுவடி நூலகம் ஆகிய இடங்களிலிருந்தும், மிதிலைப்பட்டி அழகிய சிற்றம்பலக் கவிராயர், திருநெல்வேலி திருவம்பலத்தின்னமுதம் பிள்ளை, சேலம் இராமசாமி முதலியார், திருமயிலை சண்முகம்பிள்ளை போன்ற பலரிடமிருந்தும் பன்னிரண்டு சுவடிகளைத் திரட்டி ஆய்வு செய்திருக்கிறார் டாக்டர் உ.வே.சா. அவர்கள்.

*1894*இல் டாக்டர் உ.வே.சாமிநாதையர் அவர்கள் தாம் பதிப்பித்து வெளியிட்ட 'புறநானூறு - மூலமும் உரையும்' என்னும் நூலுக்காக, எட்டு மூலச்சுவடிகளும், பதின்மூன்று உரையுடன் கூடிய சுவடிகளுமாக இருபத்தொரு சுவடிகளைத் திரட்டியிருக்கிறார்.

*1903*இல் வெளிவந்த ஐங்குறுநூறு டாக்டர் உ.வே.சா அவர்களின் பதிப்புப்பணியால் உருவானதாகும். இப்பதிப்புப்பணிக்குத் திருவாவடுதுறை ஆதீனச்சுவடி ஒன்றும் திரு. கேஸம் வேலுப்பிள்ளை, திருமயிலை சண்முகம்பிள்ளை, ஆழ்வார் திருநகரி தே. இலட்சுமண கவிராயர், தென்காசி சுப்பையாபிள்ளை ஆகிய நால்வரிடமிருந்து பெற்ற நான்கு சுவடிகளும் துணை நின்றுள்ளன.

கம்பர் விலாசம் வே. இராச கோபாலையங்கார் அவர்கள் பதிப்பித்து *1923*இல் வெளியிட்ட அகநானூறு - மூலமும் உரையும் என்னும் நூலுக்கு மதுரைத் தமிழ்ச்சங்க நூலகச் சுவடி அடிப்படையாயிற்று. இச்சுவடியைத்

திரு. பொ. பாண்டித்துரைத் தேவர் அவர்கள் விலை கொடுத்து வாங்கித் தமிழ்ச் சங்க நூலகத்திற்கு அளித்திருக்கிறார்கள். இச்சுவடியைத் தவிர, சென்னை அரசினர் சுவடி நூலகச் சுவடியும், திருநெல்வேலி நெல்லையப்பக் கவிராயர் முதலான சான்றோர் அறுவரிடமிருந்து பெற்ற ஆறு சுவடிகளும் ஆக ஏழுசுவடிகள் ஆய்வுப்பணிக்குக் கிடைத்திருக்கின்றன.

*1904*இல் டாக்டர் உ.வே.சா. அவர்கள் வெளியிட்ட பதிற்றுப்பத்து என்னும் நூலுக்குத் திருவாவடுதுறை ஆதீனச்சுவடி ஒன்று, அரசினர் சுவடி நூலகச்சுவடி ஒன்று, திரு. தே. இலட்சுமண கவிராயர், திரு. ஜோம் வேலுப்பிள்ளை, திரு. தித. கனகசுந்தரம் பிள்ளை, திருமயிலை சண்முகம் பிள்ளை ஆகிய சான்றோர் நால்வரளித்த நான்கு சுவடிகள் ஆக ஆறுசுவடிகள் ஆய்வுசெய்யப் பெற்றுள்ளன.

குறுந்தொகை மூலமும் உரையும் என்னும் நூல் *1915*இல் திருக்கண்ணபுரம் திருமாளிகைச் சௌரிப் பெருமாள் அரங்கனார் அவர்களால் வெளியிடப்பெற்றுள்ளது. இந்த நூல் வெளியீட்டில் ஆர்வங்கொண்ட திரு. அரங்கனார் அவர்கள், முதலில் சென்னை அரசினர் சுவடி நூலகச் சுவடியைப் படியெடுத்து வந்தார். திரு. முத்துரத்தின முதலியார் அவர்கள் ஒரு சுவடியை வரவழைத்துக் கொடுத்துதவினார். மதுரைத்தமிழ்ச்சங்க நூலகத்திற்குச் சென்று அங்கிருந்த சுவடியை ஒப்பிட்டுப் பார்த்துப் பாடவேறுபாடுகளைக் குறித்துக் கொண்டார். பிறகு மிதிலைப்பட்டி, செவ்வூர் ஆகிய இடங்களுக்கும் சென்று ஏடு தேடியிருக்கிறார். இதே குறுந்தொகையை *1937*இல் டாக்டர் உ.வே.சா. அவர்கள் பதவுரை விளக்கவுரைகளுடன் பதிப்பித்து வெளியிட்டிருக்கிறார்கள். இதற்குத் திருவாவடுதுறை ஆதீன நூலகச்சுவடி முதலாகப் பத்துச் சுவடிகளைத் திரட்டியுள்ளார்; அனைத்தும் மூலச்சுவடிகளே.

பரிபாடல் என்னும் நூலைப் பரிமேலழகர் உரையுடன் *1918*இல் டாக்டர் உ.வே.சா. அவர்களே பதிப்பித்து வெளியிட்டுள்ளார்கள். இதற்குத் திருவாவடுதுறை ஆதீனம், தருமபுர ஆதீனம் ஆகியவற்றிலிருந்தும், ஆழ்வார் திருநகரி தே. இலட்சுமண கவிராயர், ரா. ராகவையங்கார் ஆகியோரிடமிருந்தும் ஏழு சுவடிகளைத்திரட்டி ஆய்வு செய்திருக்கிறார்.

டாக்டர் உ.வே.சா. அவர்களின் வெளியீடுகளில் ஒன்று பெருங்கதை. பத்துப்பாட்டுச் சுவடியைத் தேடத் திருநெல்வேலி, கவிராச நெல்லையப்பப்பிள்ளை, கவிராச ஈசுவரமூர்த்திபிள்ளை ஆகியோர் வீடுகளுக்குச் சென்றிருந்தார் டாக்டர். உ.வே.சா. அவர்கள். அங்குக் கொங்குவேள்மாக்கதை என்று எழுதிய ஒரு சீட்டுடன் காணப்பட்டது ஒரு சுவடி. பலவகை நினைவாற்றலால் அச்சுவடி உதயணன் கதை என்பதை அறிந்தார். பிறகு திரு. திருப்பாற்கடனாத கவிராயர் வீட்டிலிருந்து

பெருங்கதைச்சுவடி ஒன்று கிடைத்தது. இவற்றைக் கொண்டு பலவகையான நெருக்கடிகளுக்கிடையில் இந்நூலைப் பதிப்பித்து வெளியிட்டுள்ளார் டாக்டர் உ.வே.சா. அவர்கள்.

சைவசித்தாந்த சமாசத்தின் மூலம் *1940*இல் வெளிவந்துள்ள, சங்க இலக்கியம் என்னும் நுல் திரு. ச. வையாபுரிப்பிள்ளையவர்களின் பெருமுயற்சியால் உருவாகியுள்ளது. இரண்டு பகுதிகளாக வெளிவந்துள்ள இந்நூலின் ஆய்வுக்குச் சுமார் *50* சுவடிகள் திரட்டப்பெற்று ஒப்பிடப்பெற்றுள்ளன.

## துணைநின்ற சுவடி இல்லங்கள்

சுவடி தேடித் திரட்டும் பணியில் ஈடுபட்ட பதிப்பாசிரியர்களுக்குத் துணைபுரியும் வகையில் தமிழ்தம் மரபுச்செல்வங்களாகிய சுவடிகளைத் திரட்டிப் பாதுகாத்து வைத்திருந்த சான்றோர் பலர்; சுவடி நூலகங்களாகவே விளங்கிய சான்றோர் இல்லங்கள் பல; சமய ஆதீனங்களும் மடங்களும் சில; அரசினர் நூலகங்கள், தனியார் நிறுவன நூலகங்கள் என்னும் வகையிலான சுவடி நூலகங்கள் சில; இவ்வாறான பல இடங்களும் பதிப்பாசிரியர்களுக்கு உதவிபுரிந்துள்ளன.

திருநெல்வேலி அம்பலவாணக்கவிராயர், கவிராச நெல்லையப்பப்பிள்ளை, கவிராச ஈசுவரமூர்த்திப்பிள்ளை ஆகியோர் வீடுகள் சுவடி நூலகங்களாகவே விளங்கின. பல சுவடிகளையும் பதிப்பாசிரியர்கள் பெறுவதற்கு அவ்வில்லங்கள் துணைபுரிந்துள்ளன. திரு. அம்பலவாணக் கவிராயர் அவர்களின் மாணாக்கர்களாகிய திருவம்பலத்தின்னமுதம் பிள்ளை, திருப்பாற்கடனாதன் கவிராயர் ஆகியோர் இல்லங்கள் சங்க இலக்கியச் சுவடிகளின் உறைவிடமாகவே விளங்கியுள்ளன. இவற்றைப் போலவே, மிதிலைப்பட்டி அழகிய சிற்றம்பலக்கவிராயர் இல்லச் சுவடிகள் மிகப்பழமை வாய்ந்தவையாகவும், சிறந்த புலமையாளர்களால் எழுதப்பெற்றுத் திருத்தமானவையாகவும் விளங்கின. திருமயிலை சண்முகம்பிள்ளை யவர்களிடமிருந்து ஒரு சுவடியையேனும் பெறாத பதிப்பாசிரியர்களே இல்லை என்று நூல் வெளியீடுகளிலிருந்து அறிய முடிகிறது. மயிலாப்பூர் திரு. அண்ணாசாமி உபாத்தியாயர், ஆழ்வார் திருநகரி திரு. தே. இலட்சுமண கவிராயர், திரு. தேவர்பிரான் கவிராயர், திரு. பெரிய திருவடிக்கவிராயர் போன்ற பலரும் சுவடி வழங்கிய வள்ளல்களாகின்றனர்.

சுவடிகள் பலவற்றைத் திரட்டிவைத்துப் பாதுகாத்து வந்ததோடு அல்லாமல், கம்பராமாயணம் முழுவதையும் மூன்று படிகள் தாமே எழுதித்தொகுத்து வைத்த பெரும்புலவர், திருசிரபுரம் மீனாட்சிசுந்தரம் பிள்ளை என்னும் பெயரையுடைய நடமாடும் சுவடி நூலகமாகும். இவர் இராமாயணம்

மட்டுமன்றித் தொல்காப்பியம், பத்துப்பாட்டு, சிலப்பதிகாரம், சீவகசிந்தாமணி போன்ற பழம் பெரும் நூல்களையும், இடைக்கால, பிற்கால இலக்கியங்களையும் படியெடுத்துத் திரட்டி வைத்த பெருமகனாராவார். இத்தகு சான்றோர்களைத் தவிர, பதிப்பாசிரியர்களுக்குச் சுவடி கொடுத்துதவிய சான்றோர் பலரைப் பதிப்பாசிரியர்களின் நன்றியுரைகளால் அறியமுடிகிறது. அவர்களுள் சிலர்:

1. சென்னை - அட்டாவதானம் திரு. சபாபதி முதலியார்
திரு. கா.ரா. நமச்சிவாய முதலியார்
திரு. மழவை மகாலிங்கையர்
திரு. முத்துக்குமாரசாமி முதலியார்
திரு. வ.உ. சிதம்பரம் பிள்ளை
திரு. தொழுவூர் வேலாயுத முதலியார்

2. யாழ்ப்பாணம் - திரு. ம.வி. கனகசபைப்பிள்ளை
திரு. குமாரசாமி செட்டியார்
திரு. நல்லூர் கைலாசம் பிள்ளை
திரு. சுவாமிநாத பண்டிதர்

3. திருசிரபுரம் - திரு. அண்ணாசாமிப்பிள்ளை
திரு. தியாகராச செட்டியார்

4. சேலம் - திரு. இராமசாமி முதலியார்

5. திருத்தணிகை - திரு. சரவணப் பெருமாளையர்

6. தேரழுந்தூர் - சக்கரவர்த்தி இராசகோபாலாச்சாரியார்

7. களக்காடு - திரு. சாமிநாததேசிகர்

போன்ற சுவடி வள்ளல்கள் பலர் பழம்பெரும் பதிப்பாசிரியர்களால் சிறப்பிக்கப் பெறுகின்றனர்.

## பதிப்பாசிரியர்களுக்குத் துணைநின்ற சுவடி நிறுவனங்கள்

| | சென்னை | உள்ள தமிழ்ச்சுவடிகளின் எண்ணிக்கை |
|---|---|---|
| 1. | அரசினர் சுவடி நூலகம் | 15000 |
| 2. | ஆசியவியல் நிறுவனம் | 1400 |
| 3. | உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம் | 480 |
| 4. | டாக்டர் உ.வே.சா. நூலகம் | 3200 |
| 5. | அடையாறு நூலகம் (பிரம ஞானசபை) | 1500 |

| | | |
|---|---|---|
| 6. | மைய, இந்திய மருத்துவ ஆய்வு மையம் | 2400 |
| 7. | இந்திய மருத்துவ இயக்குநரகம் | 900 |
| 8. | தொல்லியல் துறை | 150 |

**பல்கலைக்கழகங்களும் பிற நிறுவனங்களும்**

| | | |
|---|---|---|
| 1. | அண்ணாமலைப் பல்கலைக்கழகம் | 430 |
| 2. | மதுரைக் காமராசர் பல்கலைக்கழகம் | 316 |
| 3. | தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சை | 3000 |
| 4. | சரசுவதிமகால் நூலகம், தஞ்சை | 2250 |
| 5. | சாந்தலிங்க அடிகளார் தமிழ்க்கல்லூரி, பேரூர் | 520 |
| 6. | தமிழ்ச்சங்க நூலகம், மதுரை | 486 |
| 7. | அரசு அருங்காட்சியகம், ஈரோடு | 113 |
| 8. | கலைமகள் கல்வி நிலையம், ஈரோடு | 180 |

| ஆதீன மடங்கள் | | | உள்ள சுவடிகள் |
|---|---|---|---|
| 1. | அம்பலத்தடியார்மடம் | - சிதம்பரம் | 200 |
| 2. | ஈசானிய மடம் | - சிதம்பரம் | 200 |
| 3. | மௌனசுவாமிகள் மடம் | - சிதம்பரம் | 250 |
| 4. | சித்தாமூர் மடம் | - சித்தாமூர் | 190 |
| 5. | குமாரதேவர் மடம் | - துறையூர் | 740 |
| 6. | குமாரதேவர் மடம் | - விருத்தாசலம் | 84 |
| 7. | பொம்மபுர ஆதீனமடம் | - மயிலம் | 100 |
| 8. | போரூர் மடம் | - திருப்போரூர் | 50 |
| 9. | சங்கராச்சாரியார் மடம் | - காஞ்சீபுரம் | 400 |
| 10. | தொண்டைமண்டல ஆதீன மடம் | - காஞ்சீபுரம் | 93 |
| 11. | சங்கராச்சாரியார் மடம் | - கும்பகோணம் | 130 |
| 12. | தருமபுர ஆதீன மடம் | - தருமபுரம் | 481 |
| 13. | திருவாவடுதுறை ஆதீனமடம் | - திருவாவடுதுறை | 1267 |

இவற்றைத் தவிர, பல மாவட்டங்களிலும் தனியார் பலரிடமும், ஆந்திரா, கேரளா, திருவேந்திரம், கர்நாடகா, பாண்டிச்சேரி, கல்கத்தா, திருப்பதி, பூனா, ஐதராபாத் போன்ற வெளி மாநிலப்பல்கலைக்கழகம் போன்ற

நிறுவனங்களிலும் பதிப்பித்து வெளியிட வேண்டிய தமிழ்ச்சுவடிகள் பல பொதிந்து வைக்கப்பெற்றுள்ளன. இவற்றுள் பல நிறுவனச்சுவடிகள் பழம்பெரும் பதிப்பாசிரியர்களின் பதிப்புப் பணிகளுக்குப் பெரிதும் துணையாய் இருந்திருக்கின்றன என்றாலும் இன்றைய நிலையில் கேட்பாரற்றுக் கிடக்கும் இவற்றுள் இன்னும் அச்சாகி வெளிவராதவை பல நூறு சுவடிகள் உள்ளன என்பதைப் பதிப்பாய்வாளர் பலரும் அறிந்துள்ளனர்.

## பதிப்புப் பணிக்குரிய குறிக்கோள்கள்

பலவகையான முயற்சியால் சுவடிகளைத்தேடி அவற்றை ஆய்ந்து பதிப்பித்து வெளியிடும் பணியில் பலருக்கும் பலவகையான குறிக்கோள்கள் இருந்துள்ளன. அக்குறிக்கோள்களுள் ஒன்றிரண்டைத் தவிர பிற அனைத்தும் பதிப்பாசிரியர்களின் கூற்றுகளாலேயே அறிய வருகின்றன.

*1.* திருக்குறள் அறத்துப்பால் திரு. எல்லீஸ் அவர்களால் *1812*இல் வெளியிடப்பெற்றுள்ளது. இப்பணியின் குறிக்கோளை உணர முடிகிறது. ஆங்கில அதிகாரிகளுக்குத் தென்னிந்திய மொழிகளில் பயிற்சி தரவேண்டிய இன்றியமையாமை ஆங்கில அரசுக்கு ஏற்பட்டது. அதனால் சென்னைக் கல்விச்சங்கம் என்னும் ஓர் அமைப்பை நிறுவினர். புலவர்கள் பலரை அமர்த்தி மொழிப்பயிற்சி அளித்தனர். அவ்வாறு மொழிப் பயிற்சியளிக்க இன்றியமையாதவை நூல்களே என்பதை உணர்ந்து தமிழ் நூல்களைப் பதிப்பித்து வெளியிடத் தொடங்கினர். அவற்றுள் முதலாவதாக வெளிவந்தவை திருக்குறளும் நாலடியாரும் ஆகும். ஆங்கிலேயர் மொழியறிவு பெற வேண்டும் என்ற குறிக்கோளின் அடிப்படையிலேயே அந்நூல்கள் ஆங்கில மொழிபெயர்ப்புடன் வெளியிடப்பெற்றன. இச்செயலுக்கு அவர்தம் உண்மை ஆர்வம் காரணம் என்று எண்ண முடியாது. ஆனால் அவர்தம் செயல்திறன் வெளியாகியுள்ளது எனலாம்.

*2.* திரு. ஞானப்பிரகன் அவர்கள் *1812*இல் வெளியிட்ட திருக்குறள் - நாலடியார் மூலம் என்னும் நூலை ஆய்வு செய்து பதிப்பித்தவர் திரு. அம்பலவாண கவிராயர் அவர்கள். நூல்வெளியீட்டின் குறிக்கோள் பற்றி அவர்களே முன்னுரையில் குறிப்பிடுகிறார்கள்.

"கற்றுணர்ந்த தமிழாசிரியர்கள் அருமையின் இயற்றிய இலக்கண விலக்கியங்களாகிய அரிய நூல்களெல்லாம் இந்நாட்டில் அச்சிற் பதிப்பிக்கும் பயிற்சியின்றிக் கையினாலெழுதிக்கொண்டு வருவதில், எழுத்துக்கள் குறைந்தும் மிகுந்தும் மாறியும், சொற்கள் திரிந்தும் பொருள் வேறுபட்டும்— பிழைகள் மிகுதியும் உண்டாகின்றவாதலால், பிழைகளின்றிச் சுத்த பாடமாக நிலைக்கும்படி— அச்சிற்பதிக்கப்பட்டன" இக்குறிக்கோள் மிகமிகப் பொதுவான கருத்துடையதேயாகும்.

*3. 1885*இல் தொல்காப்பியப் பொருளதிகாரத்தையும் *1887*இல் கலித்தொகையையும் திரு. சி.வை. தாமோதரம் பிள்ளையவர்கள் வெளியிட்டுள்ளார்கள். அவற்றின் விரிவான முன்னுரைகளில், சி.வை.தா. அவர்களின் குறிக்கோள்களாகப் பல செய்திகள் இடம்பெறுகின்றன. தம் வெளியீடுகளில் பிழைகள் மலிந்துள்ளன என்று குறை கூறுவோரை நோக்கிக் கூறியனவாகவும் சில செய்திகள் அமைகின்றன. அவர் தம் குறிக்கோள்களின் சுருக்கம்.

சுவடிப்பதிப்புநூல் வெளியிடுவோர் பெரும்பாலும் பொருள் வருவாய் கருதியே வெளியிடுகின்றனர். விரைவில் விலைபோகும் விநோத நூல்கள், பள்ளி, கல்லூரிகளில் கற்பிக்கத் தேர்வுசெய்து வைக்கப்பெறும் பகுதிகள் போன்றவற்றையே வெளியிடுகின்றனர். சங்கமருவியநூல்கள் முழுமையாக அவர்கள் கண்களில் பட்டில. எனவே, அழிந்துபோகும் சுவடிகளை இயன்றமட்டும் தேடிப்பெற்று, தொல்காப்பியம் சொல், பொருள், வீரசோழியம், இறையனாரகப்பொருள் போன்றவற்றைப் பல சுவடிகளைக்கொண்டு ஆய்வு செய்து வெளியிட்டேன் என்பன திரு. சி.வை.தா. அவர்களின் குறிக்கோள் கூற்றுகள்.

வழுக்கள் இருப்பினும் அடியோடு அழிந்து போகிற நூலைப் பாதுகாப்பதே அவரது முதல் நோக்கமாக இருந்தது.

*4.* திரு. சி.வை.தா. அவர்களின் வெளியீட்டிற்குப்பின் *1924*இல் கலித்தொகையைப் பதிப்பித்து வெளியிட்டுள்ள திரு.இ.வை. அனந்தராமையர் அவர்கள், சி.வை.தா அவர்களின் வெளியீட்டை ஊன்றிப்படிக்கும்போது பலவிடத்திலும் மூலமும் உரையும் செய்திகளும் பொருந்தாமை அறிந்தேன்; முயன்று அவற்றின் உண்மைப்பொருள்களை அறிந்தேன்; புதிய புதிய செப்பங்களும் திருத்தங்களும் கிடைக்கும்போது புதிய பதிப்பு இன்றியமையாததே என்னும் நோக்கில் இப்பதிப்பை வெளியிடுகிறேன் என்று தம் குறிக்கோள்களைக் குறிப்பிடுகிறார்.

*5.* கரலிகிதங்களாலாகிய வழுக்களை நீக்கி அச்சிட்டுத்தருக எனப் புலவர் பெருமக்கள் பலரின் வேண்டுகோளுக்கிணங்கத் தொல்காப்பிய எழுத்ததிகாரம் *(நச்சர்உரை)* திருமழவை மகாலிங்கையர் அவர்களால் *1847*இல் வெளியிடப்பெற்றுள்ளது. இவ்வாறே 'என் ஆசிரியர் திருமயிலைச் சண்முகம் பிள்ளையவர்கள் கட்டளையைத் தலைமேற்கொண்டு இதுவரை வெளிவராதனவாகிய தொல்காப்பியச் சொல்லையும் பொருளையும் - இளம்பூரணர் உரையுடன் வெளியிட முயன்றேன்' என்கிறார் திரு. கா. நமச்சிவாய முதலியார் *(தொல்.பொருள்.இளம்)*.

6. 'இராமநாதபுரம் சமஸ்தானம், பொன்னுசாமித்தேவர் வேண்டுகோளின்படி யாழ்ப்பாணத்து நல்லூர் ஆறுமுக நாவலர் அவர்களால் வெளியிடப்பட்ட பதிப்பு' என்பது திருக்குறள் பரிமேலழகர் உரையின் முன்னுரைச் செய்தி.

7. பழைய இலக்கியங்களைக் கற்பாரும் கற்பிப்பாரும் இல்லையே என்ற ஏக்கத்தை இயல்பாகவே பெற்றிருந்த சேலம் இராமசாமிமுதலியார் அவர்களைச் சந்திக்கிறார் டாக்டர் உ.வே.சாமிநாதையர் அவர்கள். இருவரிடையே வினாவிடைகள் நிகழ்கின்றன. முதலியார் அவர்களின் வினாக்களுக்கேற்ப,

நான் 'மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்களிடம் பாடம் கேட்டவன்; குடந்தையந்தாதி... மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ்... திருவிளையாடற்புராணம்... சிவஞானபோதம் கம்பராமாயணம்... என்னும் நூல்களையெல்லாம் பலமுறை பயின்றிருக்கின்றேன் என்று அடுக்குகிறார் உ.வே.சா. அவர்கள். எதற்கும் அசையாத முதலியார் அவர்கள் இறுதியாகக் கேட்ட சீவக சிந்தாமணியைப் படித்திருக்கிறீர்களா? மணிமேகலை, சிலப்பதிகாரம் படித்திருக்கிறீர்களா? என்பன போன்ற வினாக்கள் உ.வே.சா. அவர்களுக்குப் பெருந்தூண்டுகோல்களாக விளங்குகின்றன.

சிந்தாமணியுரையாவது நீங்கள் பதிப்பிக்கிறதாவது? இது அட்டாவதானம் சபாபதி முதலியார் அவர்களது எதிர்ப்புரை. நானும் என் ஆசிரியர் காஞ்சீபுரம் திரு. சபாபதி முதலியார் அவர்களும் இதைப் பதிப்பிக்க முயற்சி செய்தோம். திரு. துறுபாதிரியார் அவர்கள் இதைப் பதிப்பிக்க ஒரு விளம்பரம் செய்தார். திரு. போப், திரு. ஆறுமுகநாவலர், மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை போன்ற பலரும் பலவாறு முயற்சித்துக் கைவிட்டு விட்டனர் என்பன போன்ற அட்டவதானம் சபாபதி முதலியார் அவர்களின் எதிர்ப்புரைகள் உ.வே.சா அவர்களுக்கு மேலும் ஊக்கமளிக்கின்றன.

சுவடி அளவிலேயே ஆங்காங்கு மறைந்து கிடந்த தமிழர் மரபுச் செல்வங்கள், இவ்வாறான பலவகைக் குறிக்கோள்களின் அடிப்படையில் பேரார்வமும் முயற்சியும் உடைய சான்றோர்களால் பதிப்பிக்கப் பெற்று வெளியிடப்பெற்றுள்ளன.

## முதற்கட்ட முயற்சிக்குத் துணைநிற்பன - ஊக்கமும் ஆக்கமும்

'பொருள் லாபத்தைக் கருதி இப்பணியை நான்மேற்கொள்ளவில்லை. நட்டம் வராமலிருந்தாலே போதும். இதுவரைநான் வெளியிட்ட நூல்களால் எனக்குண்டான பொருள் நட்டம் கொஞ்சமல்ல' (திரு. சி.வை.தா. அவர்கள்).

'நற்றிணையில் பிறந்து தமிழறிவு உடையவரான செல்வர்கள், இப்பதிப்புப் பணிக்காக ஒருவர் எவ்வளவு காலம் உழைத்திருக்க வேண்டும்

என்பதை எண்ணிப் பார்த்து இந்நூலின் விலையைக் குறுந்தொகையாக மதித்துத் தங்கள் தகுதிக்கேற்ப இதில் ஐந்து, பத்துப் பிரதிகளைப் பெற முடிவுசெய்து ஐங்குறுநூறும் பதிற்றுப்பத்துமாகிய சிறு தொகைகளை முன்பணமாகக் கொடுத்து உதவுவார்களாயின் இந்தக் கலித்தொகை முழுவதும் விரைவில் வெளிவரும், (திரு. இ.வை. அனந்த ராமையர் அவர்கள்)

பதிப்புப்பணியில் ஈடுபட்டோர் அனைவருமே இத்தகு நிலைக்கு ஆளானவர்களே. இதையறிந்த சான்றோர் பலர் பொருளுதவி செய்து ஊக்குவித்துள்ளார்கள்.

*1.* திரு. சி.வை.தா. அவர்களின் தொல்காப்பியப் பொருளதிகார வெளியீட்டிற்கு *(1885)* மைசூர், தலைமை மன்ற நீதிபதி திரு. அ. இராமச்சந்திர ஐயர் அவர்கள் *125* ரூபாயும், சென்னை மாநிலக்கல்லூரிக் கணக்கியல் துறைப்பேராசிரியர் இராவ்பகதூர் பூ. அரங்கநாத முதலியார் அவர்கள் நூறு ரூபாயும் கொடுத்து ஊக்குவித்துள்ளனர்.

*2.* திரு. சி.வை.தா. அவர்களின் கலித்தொகைப் பதிப்புச் செலவு முழுவதையும் புதுக்கோட்டை மன்னரின் அமைச்சர் திரு. அ. சேஷைய சாஸ்திரியார் அவர்களே ஏற்றுக் கொண்டிருக்கிறார்கள் *(1887)*.

*3.* புதுக்கோட்டை நீதிபதி திரு. ம. அண்ணாமலைப்பிள்ளையவர்களின் பொருளுதவியால் தொல். எழுத்ததிகாரத்தை வெளியிட்டுள்ளார் திரு. சி.வை.தா. அவர்கள் *(1891)*.

*4.* திருக்குறள் மணக்குடவர் உரையைப் பதிப்பித்து வெளியிட்ட திரு. வ.உ. சிதம்பரனார் அவர்களுக்குத் தென்னாப்பிரிக்காவில் இருந்த இந்திய அன்பர்கள் பொருளுதவி செய்திருக்கிறார்கள் (நூலின் இணைப்புச்செய்தி - *1917*).

*5.* தொல். சொல். தெய்வச்சிலையார் உரையை வெளியிட்ட கரந்தைக் கவியரசு அரங்க வேங்கடாசலம் அவர்களுக்குப் பண்டிதமணி கதிரேசச்செட்டியார் அவர்கள் பலவான்குடி கும.சு. குமரப்பச்செட்டியார் அவர்களிடமிருந்து முழுத்தொகையையும் பெற்றுத் தந்திருக்கிறார்கள்.

*6. 1892*இல் டாக்டர் உ.வே. சாமிநாதையர் அவர்கள் வெளியிட்ட 'சிலப்பதிகாரம் - அடியார்க்கு நல்லார் உரை' என்னும் நூலின் வெளியீட்டுச் செலவுகளுக்காகத் திருவாவடுதுறை, திருப்பனந்தாள், குன்றக்குடி ஆகிய ஆதீனத்தலைவர் பெருமக்களும், கொழும்பு திரு. பொ. குமாரசாமி முதலியார், கும்பகோணம் திரு. சாது சேஷையர் போன்ற பெருமக்களும் பொருளுதவி புரிந்துள்ளனர். வெளியீட்டுச் செலவினங்களில் சிக்கித்தவித்த டாக்டர் உ.வே.சா அவர்களின் ஒரு செயல் பதிப்பாசிரியர்களின் உள்ளத்தை உருக்குவதாய் அமைகிறது.

*1892*இல் சிலம்பு வெளிவந்தது. இராமநாதபுரம் மன்னர் பாஸ்கர சேதுபதி அவர்கள் நவராத்திரி விழாவுக்கு டாக்டர் உ.வே.சா. அவர்களை வரவழைத்தார். அவர்களின் பணியைப் பாராட்டி இரண்டு பட்டுத் துப்பட்டிகளைப் பரிசாக வழங்கினார். பணமாக நூறு ரூபாயையும் அளித்தார். அவற்றைப் பெற்றுக்கொண்ட உ.வே.சா. அவர்கள் திருவாவடுதுறை வந்து, திரு. அம்பலவாண தேசிகர்அவர்களைக் கண்டு பரிசு பற்றி உரைத்தார். தேசிகரும் மகிழ்ந்து பாராட்டினார். அந்தப் பாராட்டைப் பற்றிய மகிழ்ச்சி எதுவுமே இன்றிச் 'சிலப்பதிகாரம் அச்சிட்ட கடன் தீர்ந்தபாடில்லை. இந்தப் பாட்டாடைகளை வைத்துக்கொண்டு நான் என்ன செய்யப்போகிறேன்' என்று கூறி மயங்கி நின்றார். அவர் கருத்தையறிந்த தேசிகர் அவர்கள் அந்த ஆடைகளை எடுத்துக் கொண்டு முந்நூறு ரூபாய் கொடுத்தார். உ.வே.சா. அவர்களும் மகிழ்ச்சியோடு கடன்களைத் தீர்த்தார்.

*7*. கம்பர் விலாசம் வே. இராசகோபாலையங்கார் அவர்கள் பதிப்பித்து வெளியிட்ட அகநானூற்று *(1923)* வெளியீட்டுச் செலவினங்களுக்காக,

சென்னை நீதிபதி திரு. டி.வி. சேஷகிரி ஐயர், சென்னைப் பல்கலைக்கழகப் பேராசிரியர் டாக்டர் எஸ். கிருஷ்ணசாமி ஐயங்கார், சென்னை - திரு. கா.ரா. நமச்சிவாய முதலியார், சென்னை, குமாரசாமிநாயுடு & சன்ஸ் மேலாளர் திரு. ஆதிகேசவலுநாயுடு, சென்னை, குமாரசாமிநாயுடு & சன்ஸ் மேலாளர் திரு. ஜெயராமநாயுடு, சேதுவேந்தர் திரு. பாஸ்கரசேதுபதி, ஆண்டிப்பட்டிப் பெருநிலக்கிழார் திரு. பெத்தாட்சி செட்டியார், மதுரை வழக்கறிஞர் திரு. டி.சி. சீனிவாச ஐயங்கார், தஞ்சை வழக்கறிஞர் திரு. கே.எஸ். சீனிவாசபிள்ளை ஆகியோர் பொருளுதவி செய்திருக்கிறார்கள்.

*8*. அரித்துவார மங்கலம் திரு. வி.கோபாலசாமி இரகுநாத ராசாளியார், இராவ்பகதூர் கே. கிருஷ்ணசாமி ஐயங்கார், முத்துப்பேட்டை திரு. சி. அருணாசலம் செட்டியார், பாலக்காடு திரு. ஐ. சின்னசாமிப்பிள்ளை, தோவி திரு. க.ப. சிதம்பரதேவர், திரு. சிதம்பரசபாபதிப் பிள்ளை, திரு. கே. சுந்தரராமையர், திரு. டி.ஏ. பாலகிருஷ்ண உடையார் ஆகிய சான்றோர் பலரின் பொருளுதவியால் *1914*இல் பின்னத்தூர் திரு. அ நாராயணசாமி ஐயர் அவர்கள் நற்றிணையைப் பதிப்பித்து, அச்சிட்டு வெளியிட்டிருக்கிறார்கள்.

*9*. சென்னைப் பல்கலைக்கழகப் பாடநூற் குழுவின் தலைவராக இருந்துவந்த திரு. டி. சிவராம சேதுப்பிள்ளை அவர்களின் பரிந்துரையின்பேரில், டாக்டர். உ.வே.சா. அவர்கள் பதிப்பித்து வெளியிட்ட குறுந்தொகைக்குச் சென்னைப் பல்கலைக்கழக நிதியுதவியாக *1500* ரூபாய் கிடைத்தது. 'இதுவரை என்னுடைய நூல் வெளியீடுகளுக்கு இத்தகு பேருதவி கிடைத்ததில்லை' என்பதை மகிழ்ச்சியோடு குறிப்பிடுகிறார் டாக்டர் உ.வே.சா. அவர்கள்.

பதிப்பு முன்னோடிகள் தங்கள் வெளியீட்டு நூல்களின் வழி நமக்கு வழிகாட்டியுள்ளனர் என்பதைக் காட்டிலும், சுவடிப்பதிப்புப் பணிகளுக்காக என்னென்ன பாடுபட்டிருக்கிறார்கள் என்னும் வழிமுறைகளே முதற்கட்டப் பணிகளாகி நமக்கு வழிகாட்டிகளாய் அமைகின்றன என்பதை இச்செய்திகள் நமக்குப் புலப்படுத்துகின்றன.

சிந்தாமணியை ஆய்வு செய்யத் தூண்டியவர் சேலம் திரு. இராமசாமிமுதலியார் அவர்கள். விரைந்து வெளியிடத் தூண்டியவர் திரு. சி.வை. தாமோதரம் பிள்ளையவர்கள். சமணசமயக்கோட்பாடுகளைத் தொகுத்துரைத்து விளக்கியவர் வீடூர் சந்திரநாத செட்டியார் அவர்கள். பதிப்புக் கொள்கைகளையும் நூல் அமைப்பு முறைகளையும் எடுத்துக் காட்டியவர் தோழுந்தூர் சக்கரவர்த்தி இராசகோபாலாச்சாரியார் அவர்கள். உடனிருந்து ஒப்புநோக்கித் திருத்தம் செய்து உதவியவர் திருமானூர் கிருஷ்ணையர் அவர்கள். சுவடிகள் பலவற்றைக் கொடுத்தும், பிறரிடமிருந்து தருவித்துக் கொடுத்தும் உதவியவர் திருவாவடுதுறை ஆதீனத்தலைவர் சுப்பிரமணிய தேசிகர் அவர்கள் - என்றெல்லாம் தொகுத்துரைத்து நன்றி பாராட்டும் டாக்டர் உ.வே.சா. அவர்களின் கூற்று, பதிப்புப்பணியில் என்னென்ன செயற்பாடுகள் மேற்கொள்ளப் பெறுகின்றன என்பதைத் தெளிவுபடுத்துவதாகும்.

இந்தப் பதிப்புப்பணிக்கு அடிப்படையாக அமைந்தவையே நம் முன்னோர்கள் ஓலைகளில் வடித்து வைத்துச் சென்றுள்ள நமது மரபுச் செல்வங்கள். .

நம்நாட்டு இலக்கிய, இலக்கணங்கள் மட்டுமல்லாமல், உழவுத்தொழில் தொடங்கி, ஓவியம் கட்டடம், கோயில், சிற்பம், சோதிடம், மரக்கலம், மருத்துவம், மாந்திரீகம், வர்மம் போன்ற கலைகள் பலவும் நம்நாட்டுப் பண்டைய மரபுச் செல்வங்களாகப் போற்றத்தக்கவை; பாதுகாக்கப்படவேண்டியவை. இந்த அரியநோக்கங்களை அடிப்படையாகக் கொண்டவையே முன்னோடிகளின் பதிப்புப் பணிகள்.

## பதிப்பில் திருத்தங்கள்

*"முன்னோர் மொழிபொருளே யன்றி யவர்மொழியும்*
*பொன்னேபோல் போற்றுவர் பொறப்புலவர் - அன்னோர்*
*நடையிடைமைத் தம்வழியே நாட்டி மொழிமாற்றல்*
*கடையிடையர் மாட்டுவினை காண்"*

என்னும் செய்யுளில் கூறியபடி, சுவடிகளில் காண்பதைத் தங்கள் கருத்திற்கேற்பத் திருத்தி வெளியிடுவது என்பது, விபரீத அறிவினையுடைய மத்திமர்க்கும், சந்தேக ஞானத்தையுடைய அதமர்க்கும் உரிய தொழில் ஆகும் என்பதை பதிப்பாசிரியர்கள் பலரும் காரணகாரியங்களுடன் உணர்ந்து கூறுவர்.

"இந்தப் பொத்தகத்திலெழுதிய தெய்வப்புலமைத் திருவள்ளுவ நாயனாரருளிச்செய்த திருக்குறள் பாடமும் நாலடியார் மூலபாடமும் திருவள்ளுவ மாலையும் ஆக மூன்று சுவடியும் வெகு மூலபாடங்கள், உரைபாடங்கள், அதற்குக் கருவியாக வேண்டும் இலக்கண இலக்கியங்களெல்லாம் வைத்துப் பரிசோதித்துப் பாடம் தீர்மானம் செய்து, ஒரெழுத்து, ஒருசொல் நூதனமாகக் கூட்டாமற் குறையாமல்– தீர்மானம் பண்ணி– சரி பார்த்த பாடமாகையால்– பாடங்களிலெவ்வளவேனுஞ் சந்தேகப்பட வேண்டுவதின்று"

*(திருக்குறள் - நாலடியார் மூலம்) 1812* இப்படிக்கு, திருநெல்வேலி அம்பலவாண கவிராயர்.

இத்தகு சான்றிதழ்களோடும் உறுதிமொழிகளோடும் வெளிவந்துள்ள அச்சு நூல்கள் மிகப்பல.

"எழுத்தும் சொல்லும் மிகுந்தும் குறைந்தும், பிறழ்ந்தும் திரிந்தும் பலவாறு வேறுபட்டுக் கிலமுற்றிருந்த இந்நூலுரைப் பழைய பிரதிகள் பலவற்றையும் பல்கால் ஒப்புநோக்கி இடையறாது பரிசோதனை செய்து வந்த பொழுது, கவிகளின் சுத்தவடிவத்தையும் உரையின் சுத்தவடிவத்தையும், கண்டுபிடித்தற்கும் — பிழையைப் பிழையென்று நிச்சயித்துப் பரிகரித்தற்கும் — எடுத்துக்கொண்ட முயற்சியும் அடைந்த வருத்தமும் பல"

*(டாக்டர் உ.வே.சா. சிந்தாமணி - 1887)*

"கரலிகிதங்களாலாய வழுக்களை நீக்கி அச்சிட்டுத் தருகவென– கேட்டுக்கொண்டபடி செய்யப்பெற்றதாக"

*(தொல். எழுத்து. மகாலிங்கையர் - 1847)*

"இலக்கண இலக்கியங்களாகிய அரிய நூல்களெல்லாம்... கையினால் எழுதிக்கொண்டுவருவதில், எழுத்துக்கள் குறைந்தும் மிகுந்தும் மாறியும், சொற்கள் திரிந்தும் பொருள் வேறுபட்டும் பாடத்துக்குப் பாடம் ஒவ்வாது பிழைகள் மிகுதியும் உண்டாகின்றன *(திருக்குறள் - நாலடியார் மூலம் - 1812).*

இவை பதிப்பாசிரியர்கள் தங்கள் பணிகளின் மூலம் சுட்டிய செய்திகளுள் சில. என்றாலும், "கலித்தொகைப்பதிப்பு நச்சினார்க்கினியர் உரையுடன் *1887* ஆம் ஆண்டிலேயே– வெளியிடப்பெற்றிருந்தும் இப்புதிய பதிப்பு வேண்டியதென்னை?... ஆனால் ... ஸ்ரீமான் சி.வை. தாமோதரம் பிள்ளையவர்கள் பதிப்பித்த கலித்தொகையை ஊன்றிப்படிக்குங் காலத்தில் பலவிடத்தும் மூலமும் உரையும் செய்திகளும் பொருந்தாமைகண்டு... அவற்றின் உண்மைகளை யறிந்து அமைத்துக் கொண்டேன்."

*(அனந்தராமையர், கலித்தொகை - 1924)*

என்னுஞ் செய்திகள் அனைத்தும் சுவடிப் பதிப்பாசிரியர்களின் அனுபவ வெளியீடுகள்.

சுவடிச்செய்தி என்பது ஏதோ தேவவாக்கு; அதைத் திருத்துவது பாவம்; அப்படித் திருத்திப் பதிப்பிப்பவர்கள் பெரும்பாவத்திற்கும், பழிக்குமுள்ளாகி விடுவார்கள்; அவர்கள் மொழிக்குத் துரோகம் செய்தவர்களாகி விடுவார்கள் என்றெல்லாம் கருதிவிட வேண்டியதில்லை. 'சுவடிச்செய்தி' என்பது தமிழர்தம் எண்ணங்களே; அவை சுவடிகளில் வடிக்கப்பெற்றவை; அவ்வளவுதான். அவர்தம் எண்ணங்களின் வடிவங்களை அப்படியே அறிந்து துய்க்குமாறு மக்களுக்கு எடுத்துக் கொடுப்பதே பதிப்பாசிரியரின் பணி. இன்று நமக்குக் கிடைக்கும் சுவடிகள் - சிறப்பாகத் தமிழ்ச் சுவடிகள் - தங்கள் எண்ணங்களைச் சுவடிகளில் வடித்தார்களே அவர்கள் வடித்த வடிவிலேயே கிடைப்பது அருமையாகிவிட்டது. அதாவது கிடைக்கும் சுவடிகள், அவற்றில் உள்ள கருத்துக்கு உரியவர்களால் எழுதப்பெற்ற மூல வடிவங்கள் அல்ல. அடுத்தடுத்துப் பலமுறை, பலராலும் படியெடுக்கப்பெற்றவற்றுள் ஒன்றே. படியெடுக்குங்காலத்தில், படியெடுப்போரின் கல்வித்திறனுக்கேற்பப் பிழைகளும் மாற்றங்களும் மலிந்துவிட்ட சுவடிகளாதலின் அப்பிழைகள் திருத்தப்பட வேண்டியவையாகிவிடுகின்றன. அப்படியே வெளியிட்டால்தான் நாளுக்குநாள், காலத்திற்குக் காலம் தமிழ் எப்படி வளர்ச்சியடைந்துள்ளது என்பதை ஆய்வு செய்யமுடியும் என்பார் கருத்து ஏற்புடையதே. ஆனால் அந்த மாற்றங்களும் வளர்ச்சி நிலைகளும் படித்துப் புரிந்துகொள்ளுமாறு இருந்தால் அதில் பதிப்பாசிரியர் கைவைப்பது தவறு. படிக்கவே முடியாத நிலை. தமிழ்ச் சொற்களிலே இல்லாத வடிவம்; தமிழில் இப்படி ஒரு வடிவம் உண்டா என்று எண்ணுகின்ற சொல்வடிவம், சொற்றொடர் வடிவங்கள்; இந்தச் சொல்லுக்கு, இந்தத் தொடருக்கு என்னபொருள் என்பதை அகராதிகளின் துணைகொண்டும் அறிய முடியாத சொல்லும் தொடரும் என்பன போன்ற வடிவங்கள் சுவடிகளில் இடம்பெற்றுள்ளபோது பதிப்பாசிரியருக்குச் சிந்திக்க வேண்டிய கட்டாயம் ஏற்பட்டுவிடுகிறது. தம் கடமையை உணர வேண்டியிருக்கிறது. சிந்தித்து, துணைநூல்கள் பலவற்றை ஆய்வு செய்து, நூலின் முன் பின் பகுதிகளை மனத்தில் கொண்டு சரியான வடிவத்தை உறுதிப்படுத்த வேண்டிய நிலை ஏற்பட்டுவிடுகிறது. இத்தகு பதிப்பாசிரியரின் உழைப்பை, நூலைப் படிப்போர் அனைவருமே மேற்கொள்ள முடியாது. முடியாத நிலையில் சுவடி வெளியீடுகள் புறக்கணிக்கப்பட்டு விடுகின்றன.

எனவே பொருள்புரியாத சொற்களையுடைய இடங்கள், முழுக்கமுழுக்கப் பிழையானவையே என்று முடிவு செய்யப்பெற்ற இடங்கள்

போன்றவற்றைப் பதிப்பில் திருத்தியோ மாற்றியோ அமைக்க வேண்டும் என்பதே முன்னோடிகளின் முடிவு. ஆனால் அவற்றைச் சுவடியிலிருந்த சொல் என்னும் தலைப்பின் கீழே சுட்டிக்காட்ட வேண்டும். கற்போருக்கு அதுவே சரி என்றுபட்டால் பொருத்திப் பொருளறிந்து கொள்ளும் வாய்ப்பு உண்டாகிறது. சான்றாக,

> "நாணமொழிந்திடுங கதையைபபுலவோர
> நகைததிழிபபுரை சொலலாரெனறே"
>
> (தேரூர்ந்த சோழன் யட்சகானம் - பா.13)

என்பது சுவடித்தொடர். இதனைப் புள்ளியும் உயிர் மெய்க்குறில், நெடில் வடிவங்களும் சரி செய்யப் பெற்றுப் பதிப்பித்தால் இவ்வடிகள்,

> "நாணமொ ழிந்திடுங் கதையைப் புலவோர்
> நகைத்தி ழிப்புரை சொல்லா ரென்றே"

என அமையும். ஆனால், முன், பின்தொடர்களுக்கும் இடத்திற்கும் ஏற்பப் பொருள் பொருத்தம் ஏற்படுவதில்லை. எனவே ணகரத்தை னகரமாகக்கொண்டு,

'நான் மொழிந்திடுங் கதையை' என்று பதிப்பித்து, 'நாணமொழிந்திடும்' என்பதைச் சுவடிச்சொல்லாகக் காட்டினார் பதிப்பாசிரியர். இதே போல அதே சுவடியில் தெளிவாக எழுதப்பெற்ற எழுத்துகளையுடைய தொடர்களில்

| | |
|---|---|
| ***சீற்றந் தரிக்கும் திருவாரூர்*** | (பா. 14-56) |
| ***சந்தியானமும் போதினும் நடக்கும்*** | (15-3) |
| ***சினுக்கியான வசனம் பொய்க்கான்*** | (15-19) |

என்னுந் தொடர்களில் முறையே சித்தந்தரிக்கும், சந்தியான முப்போதினும், சிவக்கியானவசனம் என்னுந் திருத்தங்கள் செய்யப்பெற்றுள்ளன.

| | |
|---|---|
| 'குலைவாழை வெட்டினுங் கொய்யுணுங்கீரை' | (23-35) |
| 'அருவையரிடக் குறையில்லாமல் மத்தக்குறையில்லை' | (23-42) |

என்பனவற்றுள் வெட்டினுங், அருவையரிடக், மத்த என்னுஞ் சொற்கள் முறையே வெட்டுணுங், அரிவையரிடைக், மற்ற என்பனவாக அமைத்துப் பதிப்பித்துப் பொருள் பொருத்தமடையச் செய்யப் பெற்றுள்ளன.

இனியவை நாற்பது என்னும் நூல் மிகப்பழைய பதிப்புகளில் இனிதுநாற்பது, இனியது நாற்பது என்னும் தலைப்புகளே இடம்பெற்றுள்ளன. திரு. தி.ச. ஆறுமுகநயினார், திரு. ச. வையாபுரிப்பிள்ளை ஆகியவர்களின் வெளியீடுகளே திருத்தம் பெற்றுள்ளன.

கலித்தொகை வெளியீட்டில் நூலாசிரியர் பெயரிலேயே திருத்தம் பெற்றுள்ளது. *1887*இல் திரு. சி.வை.தா. அவர்கள் பதிப்பித்து வெளியிட்ட நூலில் 'நல்லந்துவனார் கலித்தொகை' என்றே சுட்டப்பெற்றுள்ளது. ஆனால் இந்நூலை *1925*இல் பதிப்பித்து வெளியிட்ட திரு. இ. வை. அனந்த ராமையர் அவர்கள், 'ஐந்து புலவர் பெருமக்களாலே யாக்கப்பெற்று, அவர்களுள் ஒருவராகிய நல்லந்துவனார் அவர்களாலே தொகுக்கப்பெற்றது என்பதே பொருந்தும்' என்றும் கூறித் தம் கூற்றுக்குச் சான்றாக ஒருவெண்பாவினையும் எடுத்துக்காட்டுகிறார்.

அந்த வெண்பா,

> *"பெருங்கடுங்கோன் பாலை கபிலன் குறிஞ்சி*
> *மருதன் இளநாகன் மருதம் - அருஞ்சோழன்*
> *நல்லுருத்தி ரன்முல்லை நல்லந்து வன்நெய்தல்*
> *கல்விவலார் கண்ட கலி"*

என்பதாகும். நல்லந்துவன் என்னும் பெயர் பழைய பதிப்புகளில் **நவ்வந்துவன்** என்றே காரணங் கூறி எடுத்தாளப்பெற்றதும் இங்கு நோக்கத்தக்கது.

**சுவடியில் உள்ளவாறே வெளியிடுதல்**

கன்னடியன்போர் என்னும் பெயரில் ஒரு சுவடிப்பதிப்பு நூல் வெளியாகியுள்ளது. இது ஒரு நாட்டுப்புறக்கதைப்பாடல் நூல். இந்த நூலின் முதற்பகுதி படமெழுதுங்கதை என்னும் உட்தலைப்பையுடையது.

> *"பண்டாரங்கள் சிலபேர்கழ் தெய்வபாண்டி மன்னர் வடிவை யெல்லாம்*
> *கண்டிருந்து படமெழுதி காவியமாய் தான் சமைத்தான்*
> *கொண்டு சென்று பாடிடவே குவலயத்தில் கொண்டாட*
> *எண்டிசை யுந்தான் திரிந்துஇசல் மதுரை தனைக் கடந்து*
> *வண்ட மிழோர் கொண்டாடும் வழர்நாடு தான் கடந்து* (1-5)

> *"கடிகமிழும் பூங்குழலாள் கன்னடியன்றிரு மகழ்தான்*
> *சீப்பு மிடாழ் முடிகோதாழ் சிலம்பணியால் காப்பணியாள்*
> *காப்பு மிட்டால் கரந்தனிலே கனகமணி தான் பூனாழ்* (32-344)

என்பன அந்த முதற்பகுதியில் அமைந்துள்ள சில அடிகள், "பதிப்பு முறை நூற்கள் பதித்த முறைப்படி அமைந்துள்ளது. நூலுள் அமைந்துள்ள உட்தலைப்புகள் எங்கள் ஆக்கங்கள். அவை வாசகரின் வசதிக்காக அமைக்கப்பட்டன" என்பது பதிப்பாசிரியர்களின் பதிப்பு முறையைப் பற்றிய கூற்று.

இந்த அடிகளின் அடிக்குறிப்பாக, "வள்ளி என்பது வள்ழி என்று எழுதப்பட்டுள்ளது. மேலும் இந்நூலில் பலவிடங்களில் ளகரம் ழகரமாகவும், ழகரம் ளகரமாகவும் எழுதப்பட்டுள்ளமை கண்டுகொள்க". "கடிகமிழும் - மணங்கமழும், சிலம்பணியாள் என்பது சிலம்பணியால் என்று எழுதப்பட்டுள்ளது. காப்புமிட்டாள் என்பது, காப்புமிட்டால் என்று எழுதப்பட்டுள்ளது. பூணாள் என்பது பூனாழ் என்று எழுதப்பட்டுள்ளது. மேலும் இந்நூலுள் பலவிடங்களில் ணகரம் னகரமாகவும், னகரம் ணகரமாகவும் எழுதப்பட்டமை கண்டுகொள்க" என்னும் விளக்கங்கள் தரப்பெற்றுள்ளன.

சுவடியில் உள்ளதைச் சிறிதும் மாற்றக்கூடாது. அப்படி மாற்றி அல்லது திருத்திப் பதிப்பிக்கும் உரிமை பதிப்பாசிரியருக்குக் கிடையாது. சுவடியில் உள்ளவற்றை அப்படியே கொடுப்பதுதான் மொழியியல் ஆய்வு போன்றவற்றிற்குப் பயன்படும் என்பது அறிஞர்கள் வாதம். சுவடியில் உள்ளவாறே பதிப்பித்திருக்கின்ற முறையைப் பாருங்கள் என்று கன்னடியன்போர் என்னும் நாட்டுப்புறக் கதைப்பாடல் நூல் ஒன்றினைக் காட்டுகிறார்கள். அந்த நூலின் முதற்பகுதியின் சில அடிகள்தாமே மேலே குறிப்பிட்ட அடிகள்.

சுவடியிலுள்ளவாறு என்றால், முதலாவது, சுவடியில் பாடலடிகள் இவ்வாறு பிரித்து எழுதப்பெற்றிருக்காது; அதேபோலச் சீர்களும் இவ்வாறு பிரிந்தமைந்திரா. அடிகளும் சீர்களுமாகப் பிரித்தமைத்த பணி பதிப்பாசிரியர்களைச் சார்ந்தது. அவை பாடலுக்கேற்ப அமைய வேண்டாமா?

*பண்டாரங்கள் சிலபேர்கள் (தெய்வ) பாண்டிமன்னர் வடிவையெல்லாம்*
*கண்டிருந்து படமெழுதிக் காவியமாய்த் தான்சமைத்தான்*

என்பன போன்று நான்குசீரடிகள் முறையாக அமைகின்றனவே! பண்டாரங்கள் - காவியமாய்த் தான் சமைத்தான் என்பதில் எழுவாய், பயனிலைகள் பன்மை, ஒருமைகளாக அமைகின்றனவே!

சீப்புமிடாள், முடிகோதாள், சிலம்பணியாள், காப்பணியாள் என்பன ஓர் அடியில் அமையும் கருத்துகள். அடுத்த அடியில் காப்புமிடாள் என்றல்லவா அமையும்? டகர ஒற்றைக் கூட்டிக் காப்புமிட்டாள் என்பது சுவடித்தொடரா?

"கடந்த வேத கண்ணுதலோன்
கறைமாமிடத் தோனருழ் போத்தி
தடந்த வேதத் தவசியர்கழ்
சாத்துங் கதையை யழகுபெற
மடந்தை யனையாழ் மயலழகாய்
மன்னரய்பேர் சுருபம்ந்தன்னை

படந்தான் னெழுதுங் கதைபாட
பண்ம்பாய் முகவன் காற்ப்பாமே"

என்பது கன்னடியன்போர் என்னும் அந்த நூலின் முதற் பாடலாக அச்சிடப்பட்டு வெளியாகியுள்ளது.

இந்தப் பாடலின் அடிக்குறிப்பாக, சாற்றும் - சாத்தும் (பே.வமா); முகவன் - யானைமுகவன் (கணபதி) என்னும் மூன்று சொற்களுக்கான விளக்கங்கள் தரப்பெற்றுள்ளன. இவற்றின்படி, வேதகண்ணுதலோன்; வேதத்தவசியர்கழ் என்பவற்றுள் வேத என்பதன் முன் வல்லினம் வரும்போது எந்தப் புணர்ச்சி முறை சரியானது? தவசியர்கழ் இறுதிப்பன்மை விகுதி இப்படியும் அமையலாமா? 'கறைமா மிடத் தோனருழ் போத்தி' இவ்வடியுள் மிடத்தோன், அருழ், போத்தி என்பன சரியான சொற்களா? இவற்றைப் போலவே, சாத்தும்ங்கதை, சுருபம்ந்தன்னை பண்ம்பாய், னெழுதும்ங்கதை என்பனவற்றிலுள்ள ஒற்றமைப்பை மூவொற்றுடனிலை என்பதா? இப்படி யொருவிதி தமிழில் உண்டா? படந்தான்னெழுதும் என்பது போல நெடில் முன் ஒற்றும் இரட்டித்து வருவதுண்டா? காற்ப்பாமே என வல்லின றகர ஒற்றின் முன் வலிமிக்கு வருவதுண்டா? நான்கு அடிப்பாடல் ஒன்றில் இவ்வாறு 12 ஐயங்கள் தோன்றுகின்றன. இதே அடிப்படையில் பதிப்பிக்கப்பெற்றுள்ள 172 பக்கங்களையுடைய நூலுள் எத்தனை நூறு ஐயங்கள் தோன்றும்? தொடர்ந்து இந்த நூலை யாராவது படிப்பார்களா? படித்துச் செய்தியைப் புரிந்து கொண்ட பிறகல்லவா பிற ஆய்வு முறைகள்? இந்த நூலில் ஆய்வுக்கு இடமிருக்குமா? இருக்கும். மேலே கூறியவாறு பிழைகளைப் பாகுபடுத்திக் காட்டும் ஆய்வுப்பணிக்கு இந்நூல் முழுமையாக இடந்தரும்! மேலும்,

'மா மா காய் மா மா காய்' என்னும் வாய்பாட்டில் முறையாக அமைந்தது நூலின் முதற் பாடலாகிய இந்த அறுசீர் விருத்தம். அடியளவு ஒத்துவரும் இப்பாடலடிகள்,

'கடந்த வேத கண்ணுதலோன்
கறைமா மிடத்தோ னருழ்போத்தி'

என்னும் சீர் அமைப்பில் அமைய வேண்டும். ஆனால் நூலுள்,

"கடந்த வேத கண்ணுதலோன்
கறைமாமிடத் தோனருழ் போத்தி
..........................................................................
மடந்தை யனையாழ் மயலழகாய்
மன்னரய்பேர் சுருபம்ந்தன்னை"

எனச் சீர்கள் சிதைந்தும், ஐந்து சீர் அமைப்பிலுமாக அமைகின்றன. இவை சுவடியின் அமைப்பு அல்லவே! இப்படி நூல் முழுமையும் ஓரசைச்சீர் விரவியும் ஓரடியில் *4, 5, 6, 7,* என்ற அளவில் மாறி மாறிச் சீர்கள் பிரிக்கப்பட்டும் பதிக்கப்பெற்றுள்ளன. சுவடி அமைப்பில் மாற்றமோ திருத்தமோ கூடாது என்ற கொள்கைப்படியானால் இந்த முதற் பாடலின் முதலடியை,

'கடந்த வெத கணணுதலோன
கறைமாமிடத தோனருழ போதத்'

என்றல்லவா வெளியிட்டிருக்க வேண்டும்? பதிப்பில் மெய்யெழுத்துகள் புள்ளி பெற்றுள்ளன; ஏகார, ஓகார உயிர்மெய்கள் இரட்டைக் கொம்புகள் பெற்றுள்ளன. இவை திருத்தங்களாகாவா?

தொல்காப்பியம் தொடங்கித் தொகைநூல்கள், பாட்டு நூல்கள், காப்பியங்கள் சிற்றிலக்கியங்கள் போன்ற அனைத்து நூல்களும் சுவடி எழுதுவோரால் ஏற்பட்டு விட்ட பிழைகளைக் கண்டறிந்து ஏற்றவாறு திருத்தம் செய்து அல்லது முறையானவற்றைத் தேர்ந்து பதிப்பிக்கப் பெற்றுள்ளவைதானே! சுவடியில் உள்ளவாறே பதிப்பிக்க வேண்டும் என்பார் கருத்துப்படி பதிப்பித்திருந்தால் மேலே குறிப்பிட்ட அத்தனை வகை நூல்களும் இன்று படிப்பாரின்றியே ஒதுக்கப்பட்டிருக்குமே! 'தொல்காப்பியர் முதல் நூலாசிரியர்கள் அனைவருமே தமிழை முறையாக எழுதத் தெரியாதவர்களே' என்னும் பழி அவர்களுக்கு ஏற்பட்டிருக்காதா?

"பாடிய சான்றோர் பீடுநன் குணர
மிகைபடு பொருளை நகைபடு புன்சொலில்
தந்திடை மடுத்த கந்திதன் பிழைப்பும்
எழுதினர் பிழைப்பும் எழுத்துரு ஒக்கும்
பகுதியின் வந்த பாடகர் பிழைப்பும்
ஒருங்குடன் கிடந்த ஒவ்வாப் பாடம்..........
மதியின் தகைப்பு விதியுளி யகற்றி..........
சுருங்கிய உரையின் விளங்கக் காட்டினன்
பரிமே லழகன் உரிமையின் உணர்ந்தே"

என்பது பரிமேலழகர் உரிய பாடத்தைத் தேர்ந்து, பிழையான பாடங்களைச் சுட்டிக் காட்டியுள்ள திறத்தினை எடுத்துக்காட்டும் சான்றோர் கூற்று. பரிமேலழகர் காலத்திலேயே சுவடி எழுதுவோரால் சுவடிகளில் பிழைகள் நேர்ந்துள்ளன என்பதும் பிழைகளைச் சுட்டிக்காட்டியே பரிமேலழகர் உரை எழுதியுள்ளார்

என்பதும் இதனால் தெளிவாகிறது. பிழைபட எழுதி விட்டதைத் திருத்தவேண்டிய நிலை, பாடிய சான்றோர்களின் பெருமையை எடுத்துக் காட்டுவதற்காகவே ஏற்பட்டது என்பதும் உணர்த்தப்பெறுகிறது. பிழைபடவே பதிப்பித்து விடுவோமானால் நூலாசிரியர்களுக்கு இழிவைத் தேடித் தந்தவர்களாவோம் என்பது இதனால் வெளிப்படையாகிறது.

## பதிப்பில் ஆய்வு முறை

*1.* திருக்குறள் அறத்துப்பால் (அறப்பால்) வெளியீட்டின் பதிப்பாசிரியராகிய திரு. F.W. எல்லீஸ் அவர்கள் முதற்குறளுக்கு மூன்று பக்க அளவில் உரைவிளக்கத்தை அமைத்து மேற்கோள் முதலியவற்றைக் காட்டுவதில் வழிகாட்டியவர் ஆகிறார். இதேபோல் பிறவிப் பெருங்கடல் என்னும் குறளுக்குச் சுமார் எட்டுப் பக்க அளவில் உரை விளக்கம் அளித்துச் சுமார் *25* தமிழ் இலக்கியப் பாடல்களை மேற்கோளாகக்காட்டி, ஆங்கிலத்தில் மொழிபெயர்த்து வெளியிட்டிருக்கிறார்.

*2.* திரு. ஆறுமுக நாவலர் அவர்களின் நன்னூற் காண்டிகையுரைப் பதிப்பு வெளியீடு சுமார் *15* பதிப்புகள் வரை வெளிவந்துள்ளது. ஒவ்வொரு நூற்பாவும் கூறும் செய்திகளைத் தலைப்பாகக் கொடுத்து, அடுத்து நூற்பாவை அமைக்கும் முறையைக் கையாண்டுள்ளார். சொல், சொற்றொடர்களைக் கொடுத்து அவற்றிற்குப் பதவுரையும், தொடர்ந்து வரலாறு, எடுத்துக்காட்டுகள் என அனைத்தும் தந்துள்ளார். எளிமைப்படுத்திப் பதிப்பிக்கும் முறைக்கு இந்நூல் ஓர் எடுத்துக்காட்டாகிறது. 'நன்னூற் காண்டிகையுரை முற்றும்' என்பதையடுத்து - அடுத்தபக்கம் - அப்பியாசம் என்னும் தலைப்பில் பல பயிற்சிகளைத் தருகிறார். மாணாக்கருக்கு மட்டுமன்றிப் பாடம் நடத்தும் ஆசிரியர்களுக்கும் துணைபுரிவதாக அமைகிறது. சான்றாக ஒரு சில.

*1.* மேல்வரும் பெயர்கள் இன்ன, இன்ன ஏதுவால், இன்ன இன்னபெயர் என்று எழுதுக - மலை, கடல், நிலம், பறவை, யாக்கை, சோறு, எழுத்து, பாட்டு, கறவை - இவ்வாறு *37* பெயர்கள் இடம் பெறுகின்றன.

*2.* இன்ன இன்னபடி அளபெடுத்தது என்று எழுதுக - *17* தொடர்கள்- இவ்வாறே, முற்றியலுகரம், மகரக்குறுக்கமன்று என்பன போன்று அறுபது வகைப்பயிற்சிகள் நூலின் முழுமையையும் நன்கு பயிற்சியளிப்பனவாக அமைகின்றன. இலக்கணநூல் பதிப்பாசிரியர்களுக்கு இப்பதிப்புமுறை' நல்லதொரு துணையாக அமைகிறது.

*3.* டாக்டர். உ.வே.சா. அவர்கள் தம் நன்னூல் வெளியீட்டில் சூத்திர முதற்குறிப்பு அகராதி, அரும்பத அகராதி ஆகியவற்றை அமைத்து அவற்றின் பயன்பாட்டை அறிமுகப்படுத்தியுள்ளார்.

4. திரு. ஆறுமுக நாவலர் அவர்கள் பதிப்பித்த, திருக்கோவையார் என்னும் வெளியீட்டிற்குத் திருவாவடுதுறை ஆதீனப்புலவர் திரு. தாண்டவராய சுவாமிகள் சிறப்புப்பாயிரம் அளித்துள்ளார்கள். அதில் திருவாதவூரரின் வரலாறும் அவர்தம் சிறப்புப் பணிகளும் விரிவாகக் கூறப்பெறுகின்றன. தொடர்ந்து நூலின் உட்பொருள் பெருமைகள் விரிவாகப் பேசப்படுகின்றன. அடுத்து நூலாக்க வரலாறும் பதிப்பாசிரியர் பெருமைகளும் இடம் பெறுகின்றன.

பாநடையில் அமையும் இவையனைத்தையும், இக்காலப் பதிப்பாசிரியர்கள் உரைநடையில் ஆய்வுரை என அமைக்கின்றனர். ஆனால் தம் சிறப்புகளைக் கூறிக்கொள்ளும் வழக்காறு இல்லை.

5. திருவல்லிக்கேணி திரு. வை.மு. சடகோபராமானுஜாசாரியார், திரு. சே. கிருஷ்ணமாச்சாரியார் அவர்களால் வெளியிடப்பெற்ற நன்னூற்காண்டிகையுரை என்னும் நூலின் முகவுரையில் நூலாசிரியர் வரலாறு சிறப்பிடம் பெறுகிறது.

*"பொன்மதிற் சனகைச் சன்மதி முனியருள்*
*பன்னருஞ் சிறப்பிற் பவணந்தி*
*என்னும் நாமத் திருந்தவத் தோனே"*

என்னும் நன்னூற் சிறப்புப் பாயிரக் கூற்றையும்,

*"தன்னூர்ச் சனகையிற் சன்மதி மாமுனி தந்த மைந்தன்*
*நன்னூ லுரைத்த பவணந்தி மாமுனி நற்பதியும்........*
*தொண்டை மண்டலமே"*

என்னும் படிக்காசுப் புலவரின் தொண்டை மண்டலச் சதகக் கூற்றையும் அடிப்படையாகக் கொண்டு, நூலாசிரியரின் நாடு, நகரம், குலம், தந்தை போன்ற வரலாறுகள் காணப்பெற்றுள்ளன.

"சீயகங்கன் மொழிந்தனனாக நன்னூற் பெயரின் வகுத்தனன்" என்னும் சிறப்புப் பாயிரச் செய்தியால், மூன்றாவது குலோத்துங்கச் சோழனின் சிற்றரசர்களுள் ஒருவனான சீயகங்கனே அவன் என்பது அறியப்பெற்றுள்ளது. அதன் அடிப்படையில் காலம் எடுத்துக்காட்டப்பெறுகிறது. இம்முறைகளும் பதிப்பாசிரியர்களுக்கு வழிகாட்டுவனவாகின்றன.

6. பதிப்பாசிரியர்கள் எழுதியுள்ள முகவுரைகளில் *1914*இல் வெளியாகியுள்ள நற்றிணைப் பதிப்பின் முகவுரை குறிப்பிடத்தக்க வழிகாட்டியாக அமைகிறது. இம்முகவுரை இந்நூலின் பதிப்பாசிரியராகிய பின்னத்தூர் திரு. அ. நாராயணசாமிஐயர் அவர்கள் உருவாக்கியது.

பலப்பல காலத்தில் புலவர் பலரால் பாடப்பெற்ற அகவற்பாக்களும் பரிபாடலும் கலிப்பாக்களுமாக, அகத்திணை, புறத்திணை, இரண்டையுந் தழுவிச் சுமார் *2500*க்கு மேற்பட்ட பாடல்கள் கிடைத்தன. அவற்றை அக்கால அரசர்களின் கட்டளைப்படி,

அகத்திணைப் பாடல்களில்,

*1. 4* அடி முதல் *8* அடி வரை உள்ள *400* அகவற்பாக்களைத் தொகுத்துக்
- **குறுந்தொகை** எனவும்

*2. 9* அடி முதல் *12* அடி வரை உள்ள *400* அகவற்பாக்களைத் தொகுத்து
- **நற்றிணை** எனவும்

*3. 12* அடி முதல் *37* அடி வரை உள்ள *400* அகவற்பாக்களைத் தொகுத்து
- **நெடுந்தொகை** எனவும்

*4.* தனித்தனியே *5* புலவர்கள் செய்த *500* அகவற்பாக்களைத் தொகுத்து
- **ஐங்குறுநூறு** எனவும்

*5.* பரிபாடலுறுப்பாற் செய்யப்பெற்ற *70* பாக்களைத் தொகுத்துப்
- **பரிபாடல்** எனவும்

*6.* கலிப்பாவால் செய்யப்பெற்ற *150* பாக்களைத் தொகுத்துக்
- **கலித்தொகை** எனவும்

*7.* புறத்திணைக்குரிய *400* அகவற்பாக்களைத் தொகுத்துப்
- **புறநானூறு** எனவும்

*8.* தனித்தனிப் பத்துப்புலவர்கள் செய்த *100* அகவற்பாக்களைத் தொகுத்துப்
- **பதிற்றுப்பத்து** எனவும்

பெயரிட்டுத் தொகைநூல் எட்டு ஆக்கினார் என்னும் விளக்கம் இம்முகவுரையால் பெறப்படுவது.

*7.* பத்துப்பாட்டு, *1889*இல் டாக்டர் உ.வே.சா. அவர்களால் வெளியிடப்பெற்றது. பாடினோர் எண்மர் வரலாறும், பாடப்பெற்றோர் எழுவர் வரலாறும், உரையாசிரியர் நச்சினார்க்கினியர் வரலாறும் முகவுரையில் பதிப்பாசிரியரால் கொடுக்கப்பெற்றுள்ளன. வரலாறுகாணும் முறைக்கு இம் முகவுரை ஒரு எடுத்துக்காட்டாகிறது. பத்துப்பாட்டு என்னும் நூலைக் கண்டுபிடித்த வரலாறே பதிப்பாசிரியரின் சிறப்பு வரலாறுகளுள் ஒன்றாகும்.

சிந்தாமணியைப் பதிப்பித்தபோது, அந்நூலின் நச்சினார்க்கினியர் உரையில் கொடுக்கப்பெற்றிருந்த மேற்கோள்களுக்கு என்றார் பிறரும், எனக் கூறிச் செல்வாருமுளர் என்று குறிப்பிடப்பெற்றிருந்தவற்றைக் கண்டு, அந்தப்

பிறர் யார்? கூறிச் சென்றவர் யார்? அந்தப் பிறர்நூல் எது? என்பனவற்றை அறியப் பழைய ஏட்டுச்சுவடிகளைப் படிப்பார்களாம் டாக்டர் உ.வே.சா. அவர்கள்.

திருசிரபுரம் திரு. மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்களின் சுவடிகளுள் ஒன்றில் பொருநராற்றுப்படை என்னும் பெயர் காணப்பட்டது. அதில் சில பகுதிகள் சிந்தாமணி உரையில் மேற்கோள்களாகக் காட்டப்பெற்றிருந்தன. இவ்வாறே பல சுவடிகளின் உதவியால் பத்துப்பாட்டு நூலை அறிந்து அதைப் பதிப்பிக்கத் தொடங்கினார் டாக்டர் உ.வே.சா. அவர்கள்.

முதலில் சில நூல்களுக்கு மூலநூல்கள் கிடைக்கவில்லை. உரையிலிருந்து மூலங்களைக் கண்டுபிடித்துத் தொகுத்திருக்கிறார். பிறகு மூலச்சுவடி கிடைத்தபோது அதைச் சரிபார்த்திருக்கிறார். இச்செயல்களால் நூலில் நல்ல தெளிவு ஏற்பட்டு விடுகிறது.

பத்துப்பாட்டு நூற்பதிப்புப்பணியில் உ.வே.சா. அவர்களுக்கு உடனிருந்து, பிரதிசெய்தல், ஒப்புநோக்குதல், குறிப்பு எழுதுதல் போன்ற பணிகளில்,

1. வித்துவான் சு. கோதண்டராமையர்
2. வித்துவான் வி.மு. சுப்பிரமணிய ஐயர்
3. மோகனூர் தமிழ்ப்பண்டிதர் கி.வா. ஜகந்நாத ஐயர்

ஆகிய மூவரும் உதவி செய்துள்ளார்கள்.

**உரைப்பகுதி (பத்துப்பாட்டு)**

"பலர்புகழ் ஞாயிறு கடற்கண் டாங்கு" என்னுமடிக்கு 'எல்லாச் சமயத்தாரும் புகழும் ஞாயிற்றைக் கடலினிடத்தே கண்டாற் போல' என்றுகூறி, மேலும் விளக்கங்கள் அமைகின்றன. பதிப்பில் மேலும் சான்றுகள் காட்டப்பெறுவது பதிப்புப்பணியின் பாற்பட்டது. அச்சான்றுகள்:

**ஞாயிறு புகழப்படுதல் -**

*"முந்நீர் மிமிசைப் பலர்தொழத் தோன்றி*
*ஏமுறு விளங்கிய சுடர்"* (நற்றி - 283, 6-7)

***"ஞாயிறு போற்றுதும் ஞாயிறு போற்றுதும்***
***காவிரி நாடன் திகிரிபோல் பொற்கோட்டு***
***மேருவலந் திரித லான்!"*** **(சிலம்பு - 1, 4-6)**

என்பன போன்று, அகநா - *263;* கலிங்க - *7;* தக்கயா - *9, 344;* சிவபோதம் - சிறப்புப்பா - ஆகியவற்றின் எடுத்துக்காட்டுகள் பலவும் இடம் பெறுகின்றன.

இவ்வாறே நூல் முழுமையும் இடம்பெறுவது பதிப்புப் பணியின் உழைப்பை எடுத்துக்காட்டுவதாகிறது.

*8.* டாக்டர் உ.வே.சா. அவர்களின் 'புறநானூறு' வெளியீட்டில், நூலின் தொடக்கத்தில் இடம்பெறும் சிறப்புச் செய்திகள் (விசேடச் செய்திகள்) என்னும் பகுதி நூலின் சிறப்பை எடுத்துக்காட்டி வியப்பூட்டுவதோடு பதிப்பாசிரியர்களுக்கு நல்ல வழிகாட்டியாகவும் அமைகிறது. அப்பகுதியில், நூலுள் இடம்பெறும்,

அளவுகள், ஆபரணவகை, ஆயுதவகை, ஆறுகள்,
இடவகை, உடைவகை, உணவுவகை, உலகவகை,
உலோகவகை, உவமைகள், ஊர்கள், ஊர்திவகை,
கட்டில்வகை, கதைகள், கூத்துவகை, கூற்றங்கள்,
கோயில்கள், சாதிகள், சிறுதெய்வங்கள், தானியங்கள்,
துவசவகை (கொடி), தெய்வவகை, தொகைகள், நாடுகள்,
நார்வகை, நீர்நிலைவகை, நீர்மிதவை, நீர்வாழ்வன,
நூல்கள், நோய்கள், பண்கள், பந்தர்,
பரிசில், பலி, பழமொழி, பழவகை,
பறவைவகை, பாத்திரங்கள், பால்வகை, பாவைவகை,
பின்வருவனவற்றை முன் அறிவிப்பவை (நிமித்தம்), புகைவகை,
புளிவகை, பொருள்களின் இயற்கை, மணிகள்,
மரம்முதலியன, மலைகள், மன்றவகை, மாலைவகை,
முடிமன்னர், முள்வகை, யுத்தவகை, வழக்கங்கள்,
வாணிகம், வாத்தியங்கள், வாழ்த்துவகை, விலங்குமுதலியன,
விழாக்கள், வேலிகள், வேள்வி, வேறுபெயர்கள்

ஆகிய அறுபத்தொருவகைப் பொருள்களும் *61* தனித்தனித் தலைப்புகளில் தொகுத்தளிக்கப் பெற்றுள்ளன. இப்பகுதியைப் படிப்போர் நூலை முழுமையாகப் பலமுறை ஆழ்ந்து படித்ததின் பயனைப் பெறுவர் என்பதும் உறுதி.

**உரைப்பகுதி** (புறநானூறு)

*1.* சொல் பெய்து உரைத்தல்

"அதனொடு அமையாது அணுக வந்துநின்
மதனுடைய முழவுத்தோள் ஓச்சித் தண்ணென
வீசி யோயே!" (புறம் 50, 11-13)

இவ்வடிகளில் 'வீசியோயே' என்பதற்குச் சாமரத்தாற் குளிர வீசினாய் என்று உரைவகுத்துவிட்டு, முழவுத்தோள் ஒச்சி எனவும், தண்ணென வீசினோய் எனவும் கூறியவற்றால் சாமரை என்பது பெற்றாம் என்று அதற்குரிய காரணமுங் கூறினார். இவ்வுரை விளக்கத்தைச் சொல்பெய்து உரைத்தல் என்று பகுத்துக் கொண்டார் பதிப்பாசிரியர். இதேபோல்,

2. மாறிக்கூட்டுதல்
3. பழஞ் செய்யுட்பகுதியை உரைநடையாக உரைத்தல்.
4. சொல் நடை
5. மாறுபாடு நீக்கல்
6. சொல் வருவித்து உரைத்தல்
7. வகுத்துக் கூறுதல்
8. கூற்று விளக்கம்
9. குறிப்பாலறிந்த பொருள்
10. வரலாற்றுச் செய்திகள்
11. கருத்து உரைத்தல்
12. நினைவு உரைத்தல்
13. பயனுரைத்தல்
14. பெறப்பட்டவை கூறல்
15. இன்னாமைக் குறிப்பு
16. வழக்கு
17. மரபு
18. உவமைகளை விளக்கல்
19. வடசொல்லாட்சி
20. குறிப்பு மொழி
21. இன்னசிறப்பு என்றுரைத்தல்
22. நயங்கள்
23. இலக்கணக்குறிப்பு

என்னுந் தலைப்புகளில் உரையுள் இடம்பெறுஞ் சிறப்புச் செய்திகளைத் தொகுத்துக் காட்டுகிறார் பதிப்பாசிரியர். முன்புகாட்டிய சிறப்புச் செய்திகளைப் போலவே, கற்போருக்குப் பயனளிப்பதோடு, பதிப்பாசிரியர் பணிக்கும் உறுதுணை புரிவது இப்பகுதி.

9. புறநானூறு என்னும் இதே நூலைத் திரு. ஔவை. சு. துரைசாமிப் பிள்ளையவர்கள் 1947இல் விளக்கவுரையுடன் வெளியிட்டிருக்கிறார்கள். சேரலாதன் ஐந்து பண்புகளையுமுடையவன் என்பதைச் சுட்ட, 'ஐம்பெரும் பூதத்து இயற்கை போல' என்று உவமை கூறுகிறார் முடிநாகனார். இந்த உவமைக்கு விளக்கம் தருகிறார் பதிப்பாசிரியர்.

"அரசியலடைவாவது பொறை, சூழ்ச்சி, வலி, தெறல், அளி என நிற்கும் முறை. இவற்றிற் கேற்பவே நிலமும் விசும்பும் வளியுந் தீயும் நீரும் என முறையே பாட்டின்கண் கூறப்படுகின்றன. பொறைக்கு நிலமும், சூழ்ச்சிக்கு விசும்பும், வலிக்கு வளியும், தெறலுக்குத் தீயும், அளிக்கு நீரும் அடைவு என உணர்க என்று விளக்கந்தந்துள்ள பதிப்பாசிரியர்.

அகழ்வாரைத் தாங்கும் **நிலம்** (குறள். *151*)

**விசும்பி** னன்ன சூழ்ச்சி (தொல், உவம. *6*. உரை)

**வளி** மிகின் **வலி**யுமில்லை (புறம். *51*)

என்பன போன்று பிறநூல்சான்றுகளையும் ஒப்பிட்டுக்காட்டுகிறார்கள். நூல் முழுமையும் இத்தகு விளக்கங்கள் இடம்பெற்றுக் கற்போருக்குத் தெளிவையும் ஆழ்ந்த புலமையையும் உண்டாக்குகின்றன.

*10*. கலித்தொகை வெளியீட்டில் திரு. இ.வை. அனந்தராமையர் அவர்கள் நச்சினார்க்கினியர் உரையை அடிப்படையாகக் கொண்டு பாலைத்திணை முதலில் இடம்பெறுவதைத் தம் முகவுரையில் நிலைப்படுத்திக் காட்டுகிறார்.

தொகைநூல்கள் ஒன்றிலும் முதலில் இடம்பெறாத பாலைத்திணைப் பாடல்களை முதலில் அமைத்துத் தொகுத்திருக்கிறார் நல்லந்துவனார் அவர்கள். ஐந்திணையும் விரவித்தொகுக்கப்பெற்ற நூல்களுள் எதிலும் பாலை முதலில் அமையவில்லை. பாலை முதலில் வரக்கூடாது என்ற கருத்துத் தோன்றாதிருக்கப் பாலையை முதலில் வைத்துத் தொகுத்தார். அன்றிப் பாலை நானிலத்திற்கும் பொதுவாதலின், பொதுவை முதலிற்கூறிச் சிறப்பைப் பின்னால் கூறுவது மரபு ஆதலினாலும் முதலில் அமைத்தார் என்க. இக்கருத்து, நச்சினார்க்கினியர் உரையில் இடம்பெறும்.

**"போக்கெல்லாம் பாலை புணர்தல் நறுங்குறிஞ்சி**
**ஆக்கம் அளிஞடல் அணிமருதம் - நோக்குஒன்றி**
**இல்லிருத்தல் முல்லை இரங்கியபோக்கு ஏர்நெய்தல்**
**புல்லுங் கலிமுறைக் கோப்பு"**

என்னும் வெண்பாவாலும் அறியப்பெறுகிறது' என்று ஆய்ந்து நிலைப்படுத்துவார் பதிப்பாசிரியர்.

*11*. பொய்யாமொழிப் புலவரின் தஞ்சைவாணன் கோவையைச் சொக்கப்ப நாவலர் அவர்களின் உரையுடன் பதிப்பித்து வெளியிட்டவர் செல்லூர்க்கிழார் செ.ரெ. இராமசாமிப் பிள்ளை அவர்கள் *(1952)*.

பாண்டிமண்டலத்து மாறை நாட்டைச் சார்ந்த தஞ்சாக்கூர் என்னும் ஊரில் பிறந்தவர் சந்திரவாணன் என்பவர். இவர் கோமாறவர்மன் திரிபுவனச் சக்கரவர்த்தி குலசேகரதேவர் அவர்களின் அமைச்சராகவும் படைத்தலைவராகவும் இருந்து, புலவர்களை ஆதரிக்கும் புரவலராக விளங்கியவர். தஞ்சாக்கூரில் பிறந்தவராதலின் சந்திரவாணன் என்னும் பெயர் தஞ்சைவாணன் கோவை

எனவும் பெயர் பெறலாயின என்னும் செய்திகளை ஆய்ந்து கூறியவர் பதிப்பாசிரியர் அவர்கள்.

மேலும், பாராட்டப்பெறும் கோவையாகிய திருச்சிற்றம்பலக் கோவை என்னும் திருக்கோவையார், பாண்டிக்கோவை, அம்பிகாபதிக் கோவை, திருவெங்கைக்கோவை, கோடீசுரக் கோவை போன்ற பல கோவைகள் சுவடி வடிவில் உள்ளன. இவை அனைத்தும் நம்பியகப் பொருள் கூறும் அகப்பொருள் துறைகளுக்குச் சில குறைந்தும், மிக்கும், விரவியும் காணப்பெறுவனவே. ஆனால் தஞ்சைவாணன் கோவையோ அத்துறைகள் அனைத்திற்கும் இலக்கியம் அமைத்துக்காட்டுகிறது என்றும் சுட்டுவார்.

*12.* பதிப்பாசிரியர்கள் ஒரு சுவடியை எடுத்துப் பார்த்தவுடன் இது இன்னநூல் என்று கூறுவதற்கும் இயலாதநிலை இருந்துள்ளது. அந்நூலின் பெயரை அறிதற்கும் பலவாறான ஆய்வுமுறைகள் ஆளப்பெற்றுள்ளன. சான்று:

டாக்டர் உவேசா. அவர்களின் பரிபாடல் என்னும் நூலின் பதிப்புப்பணிக்கு

*1.* திருவாவடுதுறை ஆதீனச் சுவடி - *1*
*2.* ஆழ்வார் திருநகரி - திரு.தே. லக்ஷ்மணகவிராயர் வீட்டுச்சுவடிகள் - *2.*
*3.* தருமபுர ஆதீனச் சுவடி - *1 (2* ஏடுகள் மட்டும்*)*

என நான்கு சுவடிகள் கிடைத்திருக்கின்றன. ஆனால் அவற்றுள் ஒன்றில்கூட தொடக்கமும் முடிவும் இல்லை. உ.வே.சா. அவர்கள் திருவாவடுதுறை ஆதீனச் சுவடியைப் பிரித்துப் பார்த்தபோது, "வண்ணவண் டின்குரல் பண்ணைபோன் றனவே' என்னும் பகுதி அவருக்குத் தென்பட்டது. இப்பகுதி இலக்கணக்கொத்தில் மேற்கோளாக வந்திருப்பது என்பது நினைவுக்கு வந்தது ஏதோ ஒரு பழையநூல் என்று மட்டும் அறிகிறார்.

அவரே திருமுருகாற்றுப்படையை, நச்சினார்க்கினியர் உரையுடன் ஆய்வுசெய்யும்போது, "அறுவேறு வகையின் அஞ்சுவர மண்டி" (திருமுரு. அடி *58)* என்பதன் சிறப்புரையில், முருகனின் திருவவதார வரலாற்றைக் கூறி, "இதனைப் பாயிரும் பனிக்கடல் என்னும் பரிபாடற் பாட்டானுணர்க" என்று குறிப்பிட்டிருந்தார் நச்சினார்க்கினியர். உ.வே.சா. அவர்கள் பார்த்து வந்த சுவடியில் பாயிரும் பனிக்கடல் என்று தொடங்கும் பாடல், முருகனின் வரலாற்றுடன் கூடிய ஐந்தாவது பாடலாகக் காணப்பெற்றது. இவற்றால் இந்நூல் பரிபாடல் என்று உணரவேண்டிய நிலை ஏற்படுகிறது உ.வே.சா. அவர்களுக்கு, 'நற்றிணை நல்ல குறுந்தொகை' என்னும் வெண்பாவால் பரிபாடல் என்னும் இந்நூல் எட்டுத் தொகையுள் ஐந்தாவதாக இடம் பெறும் நூல் என்று தெளிவு பெறுகிறார். இவ்வாறு பலவகையான ஆய்வுகளின் அடிப்படையில் ஒரு நூலின் பெயரையே தெரிந்துகொள்ள வேண்டிய நிலை அக்காலச் சுவடிப் பதிப்பாசிரியர்களுக்கு இருந்து வந்துள்ளது.

13. குறுந்தொகை என்னும் நூல்,

| | | |
|---|---|---|
| 1. | திரு. சௌரிப்பெருமாள் அரங்கன் | 1915 |
| 2. | திரு. இராமரத்தின ஐயர் (கலாநிலையம் வார இதழின் வழி) | 1930 |
| 3. | திரு. அருணாசல தேசிகர் (மூலம் மட்டும்) | 1933 |
| 4. | டாக்டர். உ.வே.சாமிநாதையர் | 1937 |
| 5. | திரு. ரா. ராகவையங்கார் (முதல் 112 பாடல்கள் மட்டும்) | 1946 |
| 6. | திரு. பொ.வே. சோமசுந்தரனார் (கழகப்பதிப்பு) | 1955 |
| 7. | திரு. மர்ரே. எஸ். ராஜம் (மூலம் மட்டும்) | 1957 |
| 8. | திரு. புலியூர்க்கேசிகன் (தெளிவுரை) | 1965 |

எனப் பலராலும் பதிப்பிக்கப்பெற்று வெளிவந்துள்ளது. இவற்றுள் டாக்டர். உ.வே.சா. அவர்களின் வெளியீடு, கூற்று, கூற்று விளக்கம், மூலம், பாடவேறுபாடு, பழைய கருத்து, ஆசிரியர் பெயர், பதவுரை, முடிவு, கருத்து, விசேடவுரை, மேற்கோளாட்சி, ஒப்புமைப்பகுதி என்னும் பன்னிரண்டுவகையான பகுப்புகளில் ஒவ்வொரு பாடலுக்கும் விளக்கமான உரையோடு இந்நூலின் பெருமையை முழுமையாக வெளிப்படுத்தியுள்ளது. இருப்பினும், 1985இல் தஞ்சைத் தமிழ்ப்பல்கலைக்கழகத்தின் வழிப் பதிப்புச் செம்மல் திரு. மு. சண்முகம் பிள்ளையவர்களின் பதிப்பு ஒன்று வெளிவந்துள்ளது.

தொடக்கத்தில் நூலுக்காம் முகவுரையை அடுத்து, (முகவுரை - தலைப்பிலேயே)

இணைப்பு - 1 டாக்டர் உ.வே.சா பதிப்பு - சங்க இலக்கியப் பதிப்பு இவற்றிடையேயுள்ள 234 பாட வேறுபாடுகள் இடம் பெறுகின்றன.

இதேபோல,

இணைப்பு - 2 டாக்டர் உ.வே.சா. பதிப்பு - தமிழ்ப் பல்கலைக்கழகப் பதிப்பு - 260 வேறுபாடுகள்.

இணைப்பு - 3 சங்க இலக்கியப்பதிப்பு - தமிழ்ப் பல்கலைக்கழகப் பதிப்பு - 225 வேறுபாடுகள்.

இணைப்பு - 4 முற்பதிப்புகள் - தமிழ்ப் பல்கலைக்கழகப் பதிப்பு (புதியன) 131 வேறுபாடுகள் என வேறுபாடு குறித்த இணைப்புகள் நான்கு இடம் பெறுகின்றன. அடுத்து,

இணைப்பு-5 குறுந்தொகை - சில புள்ளிவிவரங்கள் - என்னும் தலைப்பில், முதலில் பதிப்பித்தவர், மொத்தப் பாடல்கள் மொத்த அடிகள், மொத்தச் சீர்கள், பாடவேறுபாடு கொண்டசீர்கள்,_ பாடிய புலவர்கள்_ 4 அடிப்பாடல்கள், 5,6,_9 அடிப்பாடல்கள், குறிஞ்சித்திணைப் பாடல்கள்___ நெய்தல் திணைப் பாடல்கள், தலைவன், தலைவி, தோழி ____ கூற்றாக வரும் பாடல்கள் என 52 வகைப் புள்ளி விவரங்கள் இடம் பெறுகின்றன.

பொதுவாக இணைப்பு என்பதைப் பின்இணைப்பு என்றே சுட்டுவது வழக்காறு. நூலின் இறுதியில்,

1. பாடவேறுபாடு ஒப்புநோக்கு அட்டவணை ஒன்று 200 பக்க அளவில் இடம் பெறுகிறது. இதில் தமிழ்ப் பல்கலைக்கழக வெளியீட்டோடு, பிறவாகிய ஒன்பது வெளியீடுகள் ஒப்புநோக்கப் பெற்றுள்ளன.

2. தொடரடைவு என்னுந் தலைப்பில், சொற்கள், சொற்றொடர்கள் - பாடல்களின் எண்களோடு தொகுத்துத் தரப்பெற்றுள்ளன. இவை அகரவரிசைச் சொற்கள், சொற்றொடர்களாக 100 பக்க அளவில் இடம் பெறுகின்றன.

3. சொல்லடைவு என்னும் பகுதி 120 பக்கங்களுடையது.

"சங்க இலக்கிய நடையை நன்கு அறிய அவற்றில் பயின்று வந்துள்ள தொடர்களின் அமைப்புகள் ஆராயப்படவேண்டும். குறுந்தொகைத் தொடரடைவுடன் நற்றிணை முதலிய பிற சங்க இலக்கியத் தொடர்களையும் இவ்வாறு செய்து, முழுமையான தொடரடைவு உருவாக வேண்டும். அப்பொழுது சங்க இலக்கியத் தொடர்களின், சிறுதொடரமைப்பு, ஒப்புமைநயம், சுருங்கச்சொல்லி விளங்கவைத்தல், பொருட்செறிவு, இனிய சொற்புணர்ப்பு போன்ற தனித்தன்மைகள் எல்லாம் நன்கு புலனாகும்." என்பது தொடரமைப்புப் பற்றிய பதிப்பாசிரியரின் விளக்கம்.

இவற்றுள், தொடரமைப்புத் தொகுப்பால், சங்க இலக்கியங்களிலுள்ள இனிய சொற்புணர்ப்புகளை அறியலாம் என்பது ஒரு கருத்து. அவ்வாறான சொற்புணர்ப்புகள் இலக்கியங்களில் அமைவது நல்ல இலக்கண அமைவுடைய, இனிய, பொருள்செறிந்த தமிழ் இலக்கிய நடையை எடுத்துக்காட்டுவதாகும் என்பது முழுக்க முழுக்க ஏற்புடையதே. ஆனால்,

பதிப்பாசிரியர் இந்தக் குறுந்தொகைப் பதிப்பில், சொற்புணர்ப்புத் தொடர்கள் அனைத்தையும் பிரித்தே பதிப்பித்துள்ளமை அவர்தம் கருத்துக்கே முரண்பட அமைந்துவிடுகிறது.

**"பவழத்து அன்ன மேனித் திகழ்ஒளிச்**
**சேவல்அம் கொடியோன் காப்ப'** (1-1, 4)

"பயிலியது கெழீஇய நட்பின் மயில்இயல்
செறிஎயிற்று அரிவை" (2-3, 4)

"............... தொடியோள்
மெல்அடி மேலன சிலம்பே
கயிறுஆடு பறையின் கால்பொரக் கலங்கி
வாகை வெண்நெற்று ஒலிக்கும்" (7-1, 2, 4, 5)

"பெருவரை மிசையது நெடுவெள் அருவி" (78-1)

என்பனபோன்று நூல் முழுமையும் சொற்புணர்ப்புகள் பிரித்தே அமைக்கப்பெற்றுள்ளன.

1. பவழத்து-அன்ன-பவழத் தன்ன-உயிர்வர உக்குறள் மெய்விட் டோடிற்று.

2. சேவல்-அம்-கொடியோன்-சேவலங் கொடியோன்

உடல்மேல் உயிர்வந்து ஒன்றி, மகரஈறு ஒற்றழிந்து
உயிரீறாய் நின்று, வரும் வன்மைக்கு இனமாயிற்று.

3. மயில்-இயல்-மயிலியல்-உடல்மேல் உயிர்வந்து ஒன்றியது.

4. செறி-எயிற்று-செறியெயிற்று-இ,ஈ, ஐவழியவ்வும்.... உயிர்வர உடம்படுமெய்யாயிற்று.

5. எயிற்று-அரிவை-எயிற்றரிவை- (மேலே 1 - போன்றது)

6. மெல்-அடி-மெல்லடி-தனிக்குறில்முன் ஒற்றுஉயிர்வர இரட்டித்தது.

7. கயிறு-ஆடு-கயிறாடு- (மேலே 1 - போன்றது)

8. வெள்-அருவி-வெள்ளருவி (மேலே 6 - போன்றது)

இவ்வாறு இணைந்தமைந்து சீர்தளைகள் சிதறாது அமையவேண்டிய இடங்கள் பலவும் பிரித்து அமைக்கப்பெற்றுள்ளன. இவை பொருள் தெளிவுகருதியவை என்பர் பதிப்பாசிரியர். இக்கருத்து சொற்புணர்ப்பு, மொழிஇன்பந் தருவது என்ற பதிப்பாசிரியர் கருத்துக்கே முரண்பட்டுவிடுகிறது.

## பிரிப்பு முறை

கல்வி அறிவும் படிக்கும் பழக்கமும் பெருகி வருவது இவ்விருபதாம் நூற்றாண்டு. ஆயினும் பழந்தமிழ் இலக்கியங்கள் மக்களிடையே பரவிப் பயன்தரவில்லை. காரணம் என்ன? அவை செய்யுள் நடையில் அமைந்துள்ளன; அவற்றின் பொருளை எளிமையாக உணர்ந்து கொள்ளுமாறு அவை பதிப்பிக்கப்

பெறவில்லை. கடின சந்திகளுங்கூடப் பிரிக்கப்படவில்லை; ஓரளவு தமிழ் பயின்றவர் அவற்றைத் தாமே துய்க்க முடிவதில்லை; மொழியில், எளிதில் பின்பற்றக்கூடிய நெகிழ்ச்சித் தன்மை ஏற்பட்டு அனைவராலும் கையாளப்பெறுகிறது; எளிய நடையில் பேசுவதும் எழுதுவதும் மிகுந்து வருகிறது; அந்த நூல்களைப் படிப்பதே வழக்கமாகி வருகிறது; இந்த அடிப்படையில் சிறுகதை, புதினம், நாடகம், கட்டுரை, கவிதை ஆகியவை எழுதப்பெறுகின்றன; அவற்றை விரும்பிப் படிப்போரும் பெருகி வருகின்றனர். இந்த எளிய நடைப்பயிற்சியில் உள்ளவர்களுக்குப் பழந்தமிழ்ப் பதிப்புகள் ஐயத்தையும் மயக்கத்தையும் விளைவித்து விடுகின்றன. காலமின்மையும் விரைவும் அந்த நூல்களில் வெறுப்பை உண்டாக்கி விடுகின்றன. இவை பழந்தமிழ் இலக்கியங்கள் மக்களிடை பரவாமைக்குக் கூறப்பெறுங் காரணங்கள்.

## கடினத்தன்மை

அகத்தோத்து, கடறாவு படலம், நேர்பசை, நிரைபசை, பஃறொடை, பரிசிற்றுரை, பாடாண்டிணை, மலை மகணாயகர், நந்தெய்வச் செந்தமிழ், தொல்காப்பிய வேட்டுப்பிரதி, கரும்பயிலக் கூலியா என்பன போன்ற தொடர்கள் கற்போரை மயக்குவனவாகின்றன என்றும் எடுத்துக் காட்டப்பெறுகின்றன.

## முன்னோடிகளின் கருத்து

“நூலைப் படிக்கும் போது புணர்ச்சி பிரிந்திருந்தால் தமிழின்பம் பெறலாம் என்று நாம் மயங்குகின்றோம். இன்பத்திற்கு இது இயற்கையன்று. பிரித்துக் காணும் மொழிப்பயிற்சி பெறுவதே நேர்வழி. ஒரைம்பது பாட்டுகளைப் பிரித்தும் புணர்ந்தும் பார்க்கும் சிறுநன்முயற்சி நமக்கு வேண்டும். இச்சிறு முயற்சிக்குச் சோம்பற்பட்டு, ஒருகோடிப் பாடல்களை முற்றும் பிரிவினை செய்து பதிப்பிக்கும் போக்குக்கு இடங்கொடுத்தலாகாது” என்பார் வ.சுப. மாணிக்கம் அவர்கள்.

## பதிப்புமுறை

பொருள் உணர, சந்தி பெருந்தடையாகிறது. பிரித்து அமைப்பதால் ஓசை இன்பம் கெடுகிறது; சீர்தளை சிதைகிறது; ஆனால் பொருளைப் புரிந்துகொள்ள எளிமையாகிறது. இந்த இருவேறு கருத்துகளையும் பதிப்பாசிரியர் உளங்கொளவேண்டும். பாட்டின் ஓசை குறையாவண்ணம், சீர், தளை சிதையா வண்ணம், மொழி இயல்பு மாறாவண்ணம் அமைத்துப் பதிப்பிப்பதே பாடல், உரைநடை ஆகியவற்றின் வேறுபாடுகளை உணர்ந்து பதிப்பிப்பதாகும். சந்திகளைப் பிரித்துக் காட்டுதல் என்ற வகையில் பாடலின் கீழோ அடிக்குறிப்பிலோ அமைத்துப் பதிப்பிப்பதே சிறந்ததாகும்.

## சொல்லடைவு

தமிழ்ப் பல்கலைக்கழக வெளியீடாகிய குறுந்தொகையில் உரை, விளக்கஉரைகளோடு கூடிய *400* பாடல்கள் *350* பக்க அளவில் நிறைவு பெறுகின்றன. *2506* அடிகளாலியன்ற *400* பாடல்களுக்குரிய சொல்லடைவு *120* பக்கங்களைக் கொண்டு அமைகிறது. இந்தச் சொல்லடைவுப் பகுதியில், 'அருவி' என்னுஞ்சொல் *18* பாடல்களில் இடம்பெறுகின்றது. அப்பாடல் எண், பாடலடி எண் ஆகியவை சுட்டப்பெற்றுள்ளன. மீண்டும்,

| | | |
|---|---|---|
| அருவி அன்ன பருஉறை | - | *277-1 (இவ்வடியில் இல்லை)* |
| அருவிப் பரப்பின் | - | *(100-1)* |
| அருவி மாமலை | - | *(94-6)* |
| அருவியின் | - | *(106-2, 189-2)* |

என்னுந் தொடர்கள் சொல்லடைவில் வரிசைப்படுத்தப் பெற்றுள்ளன.

## ஆய்வுரை - பொது

சுவடிப்பதிப்பு வெளியீடுகளைப் பெரும்பாலும் சிறந்த ஆராய்ச்சிப் பதிப்புகளாகவே வெளியிட்டுள்ளனர் பதிப்பு முன்னோடிகள். பதிப்பில் சொல்லடைவு இறுதியாக அனைத்துப் பணிகளையும் முடித்த பிறகே ஆய்வு முன்னுரை எழுதத் தொடங்குவது மரபு. நூலை முழுமையாக உணர்ந்துள்ள காலம் அதுவேயாதலின் ஆய்வுரை விரைவாகவும் முழுமையாகவும் அதேசமயம் செறிவாகவும் அமைதல் கூடும். நூலின் முகப்பிலே அமையும் இந்த **ஆய்வுரை** என்பது பலதிறப்படும். இலக்கணநூலார் இதனைப் பாயிரம் என்றனர்.

**பாயிரம்** என்பதைப் பொதுப்பாயிரம், சிறப்புப் பாயிரம் என இருவகைப் படுத்துவர். பாயிரம் என்பது **வரலாறு** என்னும் பொருளுடையது. இந்த வரலாற்று உரை:

1. நூலுக்கு முன்னால் அமைக்கப் பெறுவதால் இது **முகவுரை** என்று பெயர் பெறுகிறது. **நூன்முகம்** என்பதும் அதே பொருளில் அமைவது.

2. நூலின் வரலாறு, நூலாசிரியரின் வரலாறு போன்ற பொதுக் கருத்துகளையும், நூல்வந்தவழி, நூல் நுவலும் பொருள் முதலான சிறப்புக் கருத்துகளையும் தொகுத்துச் சொல்லுவதால் இம் முகப்புப்பகுதி **பதிகம்** என்றும் பெயர்பெறும்.

3. நூலினது சிறப்புகள் பலவும் விளங்குமாறு அழகுபடுத்தியும் ஒப்பிட்டுக் கூட்டியும் புனைந்து உரைப்பது அணிந்துரை போன்ற பெயர்களைப் பெறும்.

முன்னோரின் இலக்கணக் கூற்றுகளாகிய இவற்றைப் பின்பற்றிப் பதிப்பு முன்னோடிகள் சிறப்புப் பாயிரம் முதலியவற்றைத் தங்கள் நூல்களில் இடம்பெறச் செய்துள்ளனர்.

"தோன்றா தோற்றித் துறைபல முடிப்பினும்
தான்தற் புகழ்தல் தகுதி யன்று" (நன்னூல் - 52)

என்னும் கொள்கையை ஏற்றிருந்த பதிப்பாசிரியர்கள், தங்களுடைய ஆசிரியர்கள், உடன்கற்ற மாணாக்க நண்பர்கள், தங்களிடம் கற்றுத் துறைபோய மாணாக்கர்கள், சிறந்த உரையாசிரியர்கள் போன்ற தகுதிவாய்ந்த சான்றோர்களைக் கொண்டு தங்கள் நூல்களுக்குச் சிறப்புப் பாயிரங்களை அமைத்திருக்கிறார்கள்.

பாயிரம், சிறப்புப்பாயிரம் முகவுரை, முன்னுரை, என்னும் பல பெயர்களால் அமையும் முன்னோடிகளின் பதிப்பு நூல்களின் தொடக்கப்பகுதிச் செய்திகளைப் பொதுப்பட இரண்டு வகைகளாகச் சுட்டலாம். அவை *1.* பதிப்புரை *2.* நூலாய்வு *(அ)* ஆய்வுரை என்பனவாகும். இந்த இரண்டு முறைகளும் இக்காலச் சுவடிப் பதிப்பாசிரியர்களுக்கு எடுத்துக்காட்டுகளாக, வழிகாட்டிகளாக அமையக்கூடும்.

1. பதிப்புரை

பதிப்புப் பணியை மேற்கொண்ட பதிப்பாசிரியரின் உழைப்பைப் படம்பிடித்துக் காட்டுகின்ற ஒரு வரலாற்றுச் சுருக்கமே பதிப்புரை எனப் பெறுகிறது. பதிப்புக்குப் பயன்பட்ட மூலச்சுவடி, ஒப்பாய்வு போன்றவற்றிற்குத் துணையாக இருந்த பிறசுவடிகள், அச்சு நூல்கள் ஆகியவற்றின் முழுச் செய்திகளையும் சுட்டிக் காட்டுவதே பதிப்புரையாகிறது. இந்த அடிப்படையில் முன்னோடிகள் தங்கள் பதிப்புரையில் சுவடிகளைப் பெற்ற வரலாறு, அவற்றின் காலம், சுவடிகளை வரிசைப்படுத்திக் கையாண்ட முறை. மொத்தப் பாடல் எண்ணிக்கையில் இருந்த வேறுபாடுகள், அவற்றைத் தம் பதிப்பில் சரிசெய்த முறை, மூலப்பாடல்களில் காணப்பெற்ற வேறுபாடுகள். உரையில் காணப்பெற்ற வேறுபாடுகள், அவற்றில் சரியானவற்றைத் தேர்ந்தெடுத்த உத்திமுறை, பாடவேறுபாடுகளின் தொகுப்புமுறை, திருத்தங்கள் செய்திருந்தால் அவற்றின் குறிப்புகள் போன்ற செய்திகளை ஆங்காங்குச் சுட்டிக்காட்டியுள்ளனர். அவை முன்னோடிகள் பலரின் பதிப்புப் பணிகளுக்கான உழைப்பைப் படம்பிடித்துக் காட்டுகின்றன.

சீவகசிந்தாமணியைப் பதிப்பித்து வெளியிடுமாறு கேட்டுக்கொண்ட சேலம் திரு. இராமசாமி முதலியார் அவர்களின் கட்டளையை ஏற்ற டாக்டர் உ.வே.சா. அவர்கள் பல எதிர்ப்புகளுக்கிடையே, பெருமுயற்சி செய்து நூலை வெளியிட்டிருக்கிறார்கள் என்ற முகவுரைச் செய்தி சிறந்த பதிப்புரையாகப் பயன்படுகிறது. இச்செய்தியுள், 'இச்சுவடியைப் பரிசோதித்துச் சுவடி எழுதியோரால் நிகழ்ந்த வழுக்களைக் களைந்து அச்சிடுக' என வற்புறுத்திச் சேலம் இராமசாமி முதலியார் அவர்கள் ஒரு சுவடியைத் தந்தார்கள். உலோகோபகாரிகளாகிய அவர்கள் சொல்லை மறுத்தற்கஞ்சியும், கல்விமான்களுக்குக் கருவூலம் போலும் இந்நூல் நின்று (உரையுடன்) நிலவுதல் குறித்தும் துணிந்து ஏற்றேன்' என்று குறிப்பிடுகிறார்.

சிந்தாமணிப் பதிப்புப்பணிக்கு உரையோடு கூடிய சுவடிகள் பத்தொன்பதும், மூலம் மட்டுமிருந்த சுவடிகள் நான்குமாக இருபத்து மூன்று சுவடிகளைப் பெற்ற வரலாறுகள் முழுவதும் இப்பகுதியில் இடம்பெறுகின்றன. மேலும் நூல் செய்தியாக, 'இதற்கு முதனூல் ஏதுமில்லையென்றே அறியமுடிகிறது. ஆயினும் வடமொழியில் சத்திர சூளாமணி, கத்திய சிந்தாமணி, சீவந்திர நாடகம், சீவந்தரசம்பு ஆகிய நான்கும் இந்தச் சீவக சரித்திரத்தையே கூறுகின்றன. மகாபுராணத்தின் ஒரு பாகத்திலும், ஸ்ரீபுராணத்தின் ஒருபாகத்திலும் இச்சரித்திரம் கூறப்பெற்றுள்ளது. அவற்றிற்கும் இந்நூலுக்கும் கதையில் சிலவேறுபாடுகள் உண்டு. அவற்றுள் சத்திர சூளாமணியே இதன் முதனூல் என்பர் சைனர்' என்பன போன்ற விரிவான செய்திகள் பதிப்புரையாக அமைகின்றன.

'திருத்தக்கதேவர் இயற்றியவை *2700* பாடல்களே என்பர் நச்சினார்க்கினியர். ஆனால் *13* இலம்பகங்களில் *3145* பாடல்கள் உள்ளன. மிகுதியானவை பிறரால் எழுதிச் சேர்க்கப் பெற்றவை என்பர்' என்பன போன்றவை நூலின் அளவையறிந்து வெளியிட்ட பதிப்பாசிரியர் அவர்களின் ஆய்வுக் கூற்றுகளாகின்றன.

இவ்வாறான பதிப்புரைச் செய்திகள் *30, 40* பக்க அளவுகளில் திரு. சி.வை.தா. திரு. ச. வையாபுரிப் பிள்ளை போன்ற பதிப்பாசிரியர்கள் பலராலும் வெளியிடப்பெற்றுள்ளன.

## 2. ஆய்வுரை - சிறப்பு

பதிப்புப்பணியில் பதிப்பாசிரியர் மேற்கொண்ட உழைப்பைப் பிரதிபலிக்கும் கண்ணாடியைப் போன்று அமைவது பதிப்புரை ஆயிற்று. அதேபோலப் படிப்போருக்கு நூலை எளிமையாக்கித் தருவதோடு, பதிப்புப்

பணியின் தரத்தை மதிப்பீடு செய்யும் ஓர் உரைகல்லாக அமைவது ஆய்வுரை. ஆக்கியோன் சிறப்பு, நூற்பொருள் தன்மை போன்றவற்றால் கற்போரை நூலுக்குள் ஆற்றுப்படுத்துவது ஆய்வுரையே எனலாம்.

நூலாய்வு அல்லது ஆய்வுரை என்னும் பெயரால் நூற்பொருளின் சுருக்கத்தைத் தருவதே பெரும்பான்மையாகிவருகிறது. ஆனால் பதிப்பு முன்னோடிகள் உண்மையிலேயே நூலைப்படிப்போர் ஒவ்வொருவரையும் நூலுக்குள் ஆற்றுப்படுத்திபிருக்கிறார்கள்.

**சீவகசிந்தாமணியின் முகவுரையில்,**

1. அரசன் அமைச்சரைப் பலமுறை ஆராய்ந்து தெளிதல் வேண்டும்.
2. பெண்வழிச் சேறல் பெருந்துயர் விளைக்கும்.
3. தன்னாசிரியன் கட்டளைப்படி ஒழுக வேண்டும்.
4. பகையை வெல்ல, உரிய காலமும் இடமும் வாய்க்குமளவும் தன் எண்ணத்தை வெளிப்படுத்தாதிருக்க வேண்டும்

என்பன போன்ற பல கருத்துகளை எடுத்துக்காட்டி இத்தகு ஆழ்ந்த கருத்துகள் நூலுள் செறிந்து கிடக்கின்றன என்பதைச் சுட்டுகிறார் டாக்டர் உ.வே.சா. அவர்கள்.

ஔவை சு. துரைசாமிப்பிள்ளை அவர்கள் வெளியிட்டுள்ள, பதிற்றுப்பத்தின் ஆய்வுரையில் சேரவேந்தர்களின் கல்வித்திறம், மனத்திண்மை, புகழ்நோக்கு, ஈகைத்திறம் ஆகிய பெருமிதப்பண்புகளும் படைவன்மை, போர்த்திறம், பொருள் செயல்வகை, குடியோம்பல் முறை ஆகிய ஆட்சித்திறன்களும் தெளிவாக எடுத்துக்காட்டப் பெறுகின்றன. மேலும்,

1. புலவர்கள் பரிசில் பொருளையே பெரிதெனக் கருதித் தகுதியில்லாதாரைப் பாடும் இயல்பினரல்லர்.
2. பாடுதற்குரிய நல்லியல்பாக அத்தலைவனிடம் அமைந்துள்ள ஒழுகலாறு ஒன்றையே பாடலுக்குரிய பொருளாகக் கொண்டுள்ளனர்.
3. தலைமக்களும் புலவர் பெருமக்களால் மதிக்கப்பெறும் சிறப்பினையே பெரும் பேறாக விரும்பினர். எனவே தலைமக்கள் நற்பண்புடையவராகவே விளங்கினர் என்பன போன்ற உட்பொருள் சிறப்புகளும் பதிப்பாசிரியரின் ஆய்வுரையாக இடம் பெற்றுள்ளன.

## பதிப்பிக்கும் முயற்சி

சுவடிப் பதிப்பு முன்னோடிகளின் பதிப்புப்பணி அனுபவங்கள், என்னும் அடிப்படையில், அப்பணியில் அவர்கள் எடுத்துக்கொண்ட முயற்சிகளைக் கண்டீர்கள். அப்பணிக்கு உறுதுணையாக இருந்து சுவடி தேடித்தருதல், பொருளுதவி செய்தல் போன்ற உதவிகளைச் செய்து ஊக்குவித்துவந்த சான்றோர்களின் ஈடுபாடுகளை அறிந்தீர்கள். இவற்றை ஆழ்ந்து உணர்ந்ததன் நோக்கம் என்ன? சுவடிகளைப் பற்றியும், சுவடிச் செய்திகளைப் பற்றியும் அறிந்தோம். இன்று நமக்குக்கிடைத்துள்ள சுவடிகளைப் பற்றியும் ஓரளவிற்கு அறிந்துள்ள நாம் முன்னோடிகளின் பணிகளில் ஈடுபட்டுத் தமிழர்தம் கலைச்செல்வங்களை முறையாகப் பதிப்பித்து வெளியிட வேண்டும் என்று நினைத்துப்பார்க்க வேண்டாமா?

## தமிழ்ச் சுவடிகளின் தலையெழுத்து

*1975-76*ஆம் ஆண்டில் வெளியான இலண்டன் தமிழ்ச்சங்க ஆண்டு மலர் ஒன்றில் 'தமிழ்ச் சுவடிகளின் தலையெழுத்து' என்ற ஒரு கட்டுரை வெளியாயிற்று. 'பலவகை அழிவுகளுக்கெல்லாம் பலியாகாமல் எஞ்சிநின்ற ஏடுகளில் ஒரு பகுதியை அந்நியர்கள் கொண்டு போய்விட்டனர்' என்னும் அடிப்படைக் கருத்தில் தமிழ்ச் சுவடிகளின் தலையெழுத்து அக்கட்டுரையில் எடுத்துக் காட்டப் பெற்றிருந்தது.

## கடந்தகாலத் தலையெழுத்து

கபாடபுரம் கடற்கோளால் அழிந்தபோது அதன்கண் இருந்த எண்ணாயிரத்து நூற்று நாற்பத்தொன்பது சுவடிகளும் அழிவுற்றன. திருக்குரானுக்கு மாறான நூல்கள் மண்மேலிருக்கலாமோ என்ற உணர்வால் நமது நூற்சாலைகள் பல அக்கினி பகவானுக்குத் தத்தம் செய்யப்பட்டன. மதுரையில் தேடித் தொகுத்து வைத்திருந்த ஓலைச் சுவடிகள் இருநூறு நாட்கள் குதிரைக்கு வெந்நீர் காய்ச்சுவதற்குப் பயன்படுத்தப்பட்டன. பழைய ஏடுகளைக் கண்டகண்ட இடங்களில் போடக்கூடாதாம். நெய்யில் தோய்த்து ஹோமம் செய்துவிட வேண்டுமாம். இங்கு அப்படித்தான் செய்தார்கள் என்பது கரிவலம் வந்த நல்லூர் தேவஸ்தானத்தில் நிகழ்ந்த செய்தி.

எங்கள் வீட்டில் ஊர்காட்டு வாத்தியார் புத்தகங்கள் (சுவடிகள்) வண்டிக் கணக்காக இருந்தன. அவற்றில் என்ன இருக்கிறது என்பதை அறிய எனக்குத் திறமை இல்லை. ஆடிப்பதினெட்டில் சுவடிகளைத் தேர்போலக் கட்டி ஆற்றில் விடுவது சம்பிரதாயம் என்று முதிய மகளிர் சொன்னார்கள். நான் அப்படித்தான்

செய்தேன் என்பது திருநெல்வேலி, தெற்குப் புதுத்தெரு, வக்கீல் சுப்பையாபிள்ளை அவர்களின் கூற்று. இப்படிப் பல நிகழ்ச்சிகள் நடந்து முடிந்த அல்லது நடத்தி முடித்த தமிழ்ச் சுவடிகளின் தலை எழுத்தை எடுத்துக்காட்டுவன.

## நிகழ்காலத் தலையெழுத்து

ஐக்கிய நாடுகளின் அறிவியல், கலை, பண்பாட்டு அமைப்பாகிய 'யுனெஸ்கோ நிறுவனம்' தொடங்கியுள்ள 'உலக நினைவுச் சின்னங்கள்' என்னும் ஆய்வுத் திட்டத்தின் வரிசையில் 'தமிழ் ஓலைச் சுவடிகள்' என்பதும் ஓர் ஆய்வுப் பொருளாக இடம் பெற்றுள்ளது. அழிந்து கொண்டிருக்கும் தமிழ்ச் சுவடிகளைத் திரட்டிப் பாதுகாப்பதும், அச்சிட்டு வெளியிடுவதுமாகிய செயல்களை மேற்கொள்வதில் யுனெஸ்கோ நிறுவனம் உறுதுணையாக இருக்கும் என்பதை வல்லுநர்குழு ஏற்றுக் கொண்டுள்ளது. இதன் அடிப்படையில் *1995*, ஜனவரியில் நடைபெற்ற கருத்தரங்கம் ஒன்றிற்காகத் தமிழ்ச் சுவடிகளைத் திரட்டி வைத்துள்ள *52* நிறுவனங்களுக்கு (தனியார் உட்பட) வேண்டுகோள் விடுக்கப்பட்டது. அவர்களிடமுள்ள சுவடிகளின் எண்ணிக்கையைக் குறித்த மிகச்சுருங்கிய தகவல்களே வேண்டப்பட்டன. மூன்று இடங்களிலிருந்து மட்டுமே சில தகவல்கள் கிடைத்தன.

தமிழ்ச்சுவடிகளைப் பற்றியே சிறிதும் அக்கறையில்லாத அந்த நிறுவனங்களிலும் தனியாரிடமும் கிடந்து அழிய வேண்டும் என்பதுதான் அந்தச் சுவடிகளின் தலையெழுத்தா? அந்தத் தலையெழுத்தை அழித்து எழுத முடியாதா?

சில இடங்களில் சுவடிகள் தூய்மை செய்யப்பெற்று முறையாக வைத்திருப்பதைக் காணமுடிகிறது. ஆனால் பல இடங்களில் கவனிப்பாரற்றுக் கிடக்கின்றன. அந்தப் பயிற்சிகளுக்குச் செலவிடப்பெறும் பணத்தின் அளவுகூடச் சுவடிப் பாதுகாப்பு நடைமுறைக்குச் செலவிடப்பெறுவதில்லை. ஓரிருவகைப் பயிற்சி முறைகளை மட்டுமே முழுமையாகக் கையாண்டு சுவடிகளைப் பாதுகாக்க முடியாதா? அழிந்து கொண்டிருக்கும் சுவடிகளின் தலையெழுத்தை மாற்றியமைக்க முடியுமே.

சுவடிப் பாதுகாப்புப் பணியில் முதற்பணி சுவடியைப் பதிப்பித்து வெளியிடுவதேயாகும். இந்த முறைக்கு உடனடியாக ஊக்கமளிப்பதில் ஏதேனும் சிக்கல்கள் உண்டோ? அரசு நிறுவனங்களிலும் பிற பெரிய நிறுவனங்களிலும், சுவடியில் ஆர்வமுடையவர்கள் ஆய்வு செய்வதிலும், படியெடுத்துப் பதிப்பிப்பதிலும் பலவகைக் கட்டுப்பாடுகள் தேவையா? மாவட்ட ஆட்சியர் அலுவலகங்கள் பலவற்றில் ஆவணங்களும் பதிவேடுகளுமாகிய சுவடிகள்

(Documents and Records) கிடந்து அழிந்து வருகின்றன. அவற்றைத் திரட்டி வெளியிட முடியாதா?

சோதிடச் சுவடிகள், வர்மக்கலைச் சுவடிகள், மருத்துவச் சுவடிகள் போன்றவை மறைபொருளாகவே இருந்து வருகின்றன. அவை தவறான முறையில் பயன்படுத்தப்பெறுகின்றன. அவற்றால் பிழைப்பும் நடத்தப்பெறுகிறது. இவற்றை வைத்திருப்பவர்களோடேயே இருந்து இவை அழிய வேண்டியவை தானா? நாட்டுக்குப் பயன்படச் செய்ய முடியாதா? 'தமிழ்ச் சுவடிகளில் என்ன இருக்கிறது? எல்லாம் வெளியிட்டாயிற்றே!' இக்கூற்றுகள் எந்த அளவில் உண்மையானவை? இந்த வினாக்களைச் சிறிது சிந்தித்துப் பாருங்கள். தமிழ்ச் சுவடிகளின் தலையெழுத்து ஓரளவு புலனாகும்.

## இத்தலையெழுத்தை மாற்றச் சில எண்ணங்கள்

பதிப்புப் பணியில் ஆர்வமுள்ளவர்கள் சுவடி நிறுவனங்களிலிருந்து சுவடிகளைப் படியெடுத்துக் கொள்ள விரும்பினால், உடனடியாகப் படியெடுத்துக் கொள்ளுவதற்குரிய ஏற்பாடுகளைச் செய்ய நிறுவனங்கள் முன்வரவேண்டும். கட்டுப்பாட்டு முறைகளைப் பற்றி எடுத்துக் கூறியபோது கண்டவர்களுக்குச் சுவடியைக் காட்டுவதால் சுவடி பாழாகும் என்ற பதில், பொறுப்பாளர்களிடமிருந்தே வருகிறது. நிறுவனத்தில் இல்லாத, வெளியிடத்தில் எங்கோ இருக்கின்ற பொறுப்பாளர்களின் இசைவு பெற வேண்டும் என்று கூறி உடனடிச் செயல்பாட்டில் தடை உண்டாக்கப்பெறுகிறது. இவை அடியோடு மாற வேண்டும். நிறுவனத்திலிருந்தே படியெடுத்துக் கொடுக்க வசதி செய்து தரப்படவேண்டும்.

பொறுப்பற்ற அல்லது அக்கறையில்லாத பல சிறிய நிறுவனங்களிலும், தனியார்களிடமும் உள்ள சுவடிகள் அனைத்தும் குறிப்பிட்ட ஓரிரு நிறுவனங்களில் கொண்டு வந்து சேர்க்க வேண்டிய நடவடிக்கைகளைப் பொறுப்போடும் அக்கறையோடும் கட்டாயப்படுத்தி மேற்கொள்ள வேண்டும். இங்கு பொறுப்பு, அக்கறை என்றதற்கு ஒரு சான்று காட்டலாம்.

தமிழ்நாடு ஆளுநர் ஒருமுறை சென்னை, அரசினர் சுவடி நூலகத்தைப் பார்வையிட்டார். அங்கு உள்ள சுவடிகளைப் பற்றி நுண்மையாகக் கேட்டறிந்தார்கள். இறுதியில், அந்நூலகத்தில், தமிழ், சமஸ்கிருதம், தெலுங்கு ஆகிய மொழிகளில் உள்ள சோதிடச் சுவடிகளை உடனடியாகப் பதிப்பித்து வெளியிட வேண்டும் என்ற தமது முடிவை அருகிலிருந்த அரசு அலுவலர்களிடத்தில் கூறினார்கள். தொடர்ந்து உரிய அரசு ஆணையும் பிறப்பிக்கப்பெற்றது. பதிப்புப் பணிகள் மும்முரமாகத் தொடங்கப்பெற்றன.

ஆனால் ஆளுநர் அவர்கள் மாற்றம் பெற்றார்கள். நடைபெற்று வந்த சோதிடச் சுவடிப்பதிப்புப் பணி கேட்பாரற்று முடங்கிப் போயிற்று.

டாக்டர் வேணுகோபால் அவர்களின் தலைமையில் அரசினர் சுவடி நூலகத்திற்குச் சித்த மருத்துவர்கள் சிலர் (குழு) வந்தார்கள். சுமார் 60க்கு மேற்பட்ட மருத்துவச் சுவடிகளைத் தேர்ந்தெடுத்துக் கொடுத்தோம். அவற்றுள் 5 சுவடிகளைத் தேர்ந்தெடுத்துப் பதிப்பிக்கும் பணி மேற்கொள்ளப்பெற்றது. படியெடுத்துத் தரும் பணி விரைவுபடுத்தப் பெற்றது. 'அகத்தியர் நாலாயிரம்' என்னும் நூல் போன்றவை முழுமையாகவே முடிக்கப்பெற்றன. இப்படி அச்சுக்கு அனுப்பும் நிலையில் முன்னுரை முதல் சொல்லடைவு ஈறாக முடிக்கப்பெற்ற நூல்கள் பல. மருத்துவக் குழுவினர் என்ன ஆனார்கள்? பதிப்பாசிரியர்கள் என்ன நடவடிக்கை எடுத்தார்கள்? முடித்துக் கொடுக்கப்பெற்ற அச்சுப்படிகள் (Press Copies) என்னவாயின? அவை எங்கே இருக்கின்றன? இறைவனுக்குத்தான் வெளிச்சம்! இதே நிலையில் பல நூல்கள். உழைத்ததுதான் மிச்சம்!

ஒரே நிறுவனத்தில் கொண்டு வந்து சேர்க்க வேண்டுமென்னாது ஓரிரு நிறுவனம் என்றது சுவடிப்பொருள் அடிப்படையைக் கருதிக் கூறப்பெற்றது. சான்றாக, மருத்துவச் சுவடிகள் அனைத்தையும் சித்த மருத்துவ ஆய்வுகள் நிகழ்த்தப்பெறும் கல்லூரிகள், மருத்துவமனைகள் போன்ற இடங்களில் சேர்க்க வேண்டும். இதேபோலச் சோதிடச் சுவடிகள் தனியோரிடத்திலும், இலக்கண இலக்கியங்கள் ஓரிடத்திலுமாகச் சேர்க்க வேண்டும். எல்லாம் ஒரே இடத்தில் சேர்க்கப் பெற்றுத் தனித்தனித் தலைவர்களையுடைய துறையாக இயங்குவதும் சிறப்புடையதாகும்.

## திரட்டும் பணிகளின் இன்றியமையாமை

திரட்ட வேண்டிய முறைகளுக்கும் சில எடுத்துக்காட்டுகள் தரலாம். சுவாமிமலை, திருச்சி, நாவல்பாக்கம், வேலூர், வைத்தீசுவரன் கோயில் போன்ற பல இடங்களில் பலரிடம் சோதிடச் சுவடிகள் முடங்கிக் கிடக்கின்றன. அவற்றில் என்ன இருக்கிறது என்பதைப் பார்ப்பதற்கு அவற்றைக் காட்டவும் மறுக்கிறார்கள். பல சுவடிகள் உண்மைக்குப் புறம்பானவை என்பதைப் புலப்படுத்தவும் முடியும். இவற்றை அரசு உரிமையாக்கி ஓரிடத்தில் கொண்டு வந்து சேர்த்தால் சோதிடச் சுவடிகளின் தலையெழுத்து மாற்றப்பட்டு அவை நாடு முழுமைக்கும் பயன்தரும் செய்திகளைக் கொடுக்கும் நிலை உருவாகக்கூடும்.

கன்னியாகுமரி மாவட்டத்துக் கிராமங்கள் பலவற்றில் வர்மக்கலையும் வர்ம மருத்துவமும் அறிந்த பரம்பரை ஆசான்கள் பலர் இருக்கிறார்கள்.

அவர்களிடம் நூற்றுக்கணக்கான சுவடிகள் முடங்கிக் கிடக்கின்றன. கொடுக்க மறுக்கிறார்கள். கொடுக்க முன்வருபவர்களுள் ஒரு சிலர் சுமார் *100* ஏடுகளைக் கொண்ட ஒரு சுவடிக்கு ரூ.*25* ஆயிரம் கூசாமல் கேட்கிறார்கள். அவற்றை அச்சிட்டு வெளியிடும் தகுதி அவர்களுக்குச் சிறிதும் இல்லை. அவர்களிடமுள்ள சுவடிகளின் தலையெழுத்தை உடனடியாக மாற்றி அமைக்காவிட்டால் அவை கூண்டோடு கைலாசந்தானே?

இந்திய சித்த மருத்துவ ஆய்வு நிலையம், சென்னை, திருவாவடுதுறை, தருமபுரம் போன்ற பல சமய மடங்கள் போன்றவற்றில் ஆயிரக்கணக்கான சுவடிகள் கேட்பாரற்று முடங்கிக் கிடக்கின்றன. இவை மடங்களின் பெருமையைக் காக்கும் வண்ணம் ஒரு காலத்தில் திரட்டி வைக்கப்பெற்றவை. இன்றோ கேட்பாரில்லை.

### சுவடிப்பதிப்பில் உறுதுணை

சுவடிப்பதிப்பில் பொருளுதவி தேவைப்படுகிறது. ஒருவகையில் அதைச் சமாளித்துப் பதிப்பித்தாலும் நூல் விற்பனை என்பது இயலாத காரியமாகிறது. தமிழ்நாட்டின் பொதுநூலக அமைப்பின் கீழ் *1500*க்கு மேற்பட்ட கிளை நூலகங்கள் இயங்குகின்றன. நகரப்பகுதிகளில் ஒரு நூலகத்திற்கு *2, 3*, நூல்கள், பிறவற்றிற்கு ஒரு நூல் என்ற அடிப்படையில் *2000* நூல்களை வாங்கி ஊக்குவிக்கலாம். பள்ளி, கல்லூரி நூலகங்கள் போன்றவை ஆயிரம் படிகளுக்குமேல் வாங்கலாம். இவை கட்டாயப்படுத்தப்பெற்றால் விற்பனை எளிதாகும். படிகள் நாலாயிரம், ஐயாயிரம் வெளியிடும்போது விலையும் மலிவாகும். நூல்களுக்கு விளம்பரம் மிகவும் அவசியம். இலவச அல்லது சலுகை நிலையில் விளம்பரம் செய்ய இதழ்கள் துணைபுரியலாம். இத்தகு உதவிகளும் தமிழ்ச் சுவடிகளின் தலையெழுத்தை மாற்றியமைக்கப் பெருந்துணை புரியும்.

### பதிப்பிக்கும் முயற்சி

சுவடிப் பதிப்பு முன்னோடிகளின் பதிப்புப்பணி அனுபவங்கள் என்னும் அடிப்படையில், அப்பணியில் அவர்கள் எடுத்துக்கொண்ட முயற்சிகளைக் கண்டீர்கள். அப்பணிக்கு உறுதுணையாக இருந்து சுவடி தேடித்தருதல், பொருளுதவி செய்தல் போன்ற உதவிகளைச் செய்து ஊக்குவித்துவந்த சான்றோர்களின் ஈடுபாடுகளை அறிந்தீர்கள். இவற்றை ஆழ்ந்து உணர்ந்ததன் நோக்கம் என்ன? சுவடிகளைப்பற்றியும், சுவடிச் செய்திகளைப் பற்றியும் அறிந்தோம். இன்று நமக்குக்கிடைத்துள்ள சுவடிகளைப் பற்றியும் ஓரளவிற்கு அறிந்துள்ள நாம் முன்னோடிகளின் பணிகளில் ஈடுபட்டுத் தமிழர்தம் கலைச்செல்வங்களை முறையாகப் பதிப்பித்து வெளியிட வேண்டும் என்று நினைத்துப்பார்க்க வேண்டாமா?

அந்த நல்ல நோக்கம் உங்களிடம் இருக்குமேயானால் மேலும் சில செய்திகள்:-

சுவடியிலிருந்து எடுத்து எழுதவேண்டும். வேண்டிய விளக்கங்களைத்தந்து, அந்த நூலை அச்சிடும் நிலைக்கு உருவாக்கி முழுமையாக்க வேண்டும். இப்பணிக்கு எவ்வளவு காலம் பிடிக்கும்? அந்தக்கால அளவுவரை வாழ்க்கை நடத்துவதற்குரிய பொருள்வசதி அல்லது வருமானம் நமக்கு இருக்கிறதா? இவ்வகை வினாக்களுக்கு முடிவுகாண்பது இரண்டாவது கட்டமாகும். வசதியும் வருமானமும் உள்ளன; எனவே நம்மால் முடியும் என்ற முடிவுக்கு வரலாம். அல்லது ஏதேனும் ஒரு நிறுவனத்தில் பணியாற்றும் நிலையில் அந்த நிறுவனத்தின் சார்பாகப் பதிப்புப்பணியை மேற்கொள்ளமுடியும் என்று உறுதிப்படுத்திக் கொள்ளலாம்.

ஒரு நிறுவனத்தின் மூலம் வெளியிடுவது என்ற முடிவாக இருந்தால், மூன்றாவது, நான்காவது சிந்தனைகளுக்கு இடமில்லை. பதிப்புப்பணியைத் தொடங்கிவிடலாம். ஆனால் பதிப்பாசிரியர் தம் ஆர்வத்தாலும் திறமையாலும் சுவடிகளில் முடங்கிக்கிடக்கும் செய்திகளைத் தாமே மக்களிடையே பரப்பவேண்டும் என்ற ஒரே நோக்கத்தோடு பதிப்புப் பணியில் ஈடுபடுவாராயின் மேலும் சில நடைமுறைச் சிக்கல்களைச் சிந்தித்து முடிவெடுக்க வேண்டியவராகிறார்.

## வெளியீட்டாளர் (Publisher) மூலம் வெளியிடுதல்

ஒரு சுவடியில் பொதிந்து கிடக்கும் நூலை எடுத்து எழுதி உரை முதலான பலவகை விளக்கங்களையும் தந்து நூல் வடிவில் உருவாக்கி முடிக்கிறோம். அதை நூல் வெளியீட்டாளர் ஒருவர்மூலம் வெளியிட எண்ணினால், வெளியீட்டாளர் ஒருவரைத் தேர்ந்தெடுக்க வேண்டும். அவர் பதிப்பாசிரியர் விரும்பிப் பதிப்பித்துள்ளவாறு வெளியிட முன்வருபவராக அமைய வேண்டும். பதிப்பாசிரியரின் கருத்துப்படி அச்சிட்டு வெளியிட ஏற்றுக்கொள்ளுவாரேயாயின், பதிப்பாசிரியரின் பலகால உழைப்புக்கு ஏற்ற ஊதியமாக ஏதேனும் ஓரளவு தொகையைத் தருபவராக இருக்கவேண்டும். நூல் விற்பனையின் அடிப்படையில் குறிப்பிட்ட விழுக்காடு அளவிலாயினும், ஒட்டு மொத்தமாகவாயினும் அத்தொகையை உறுதிப்படுத்தி அதன்படி தருவதற்கு ஒப்புதல் தருபவராக இருக்க வேண்டும். இவ்வகை உடன்பாடுகள் அனைத்தும் ஏற்புடையனவாக அமைந்துவிட்டால் வெளியீட்டாளரிடம் எழுத்துப்படியை ஒப்படைத்துவிட்டு, அச்சுப்பணி முடியும்வரை மேற்பார்வையிட்டு நூலை வெளிக்கொணரலாம்.

## சொந்த வெளியீடு

சுவடியில் உள்ள பொருளைத் திறம்படப் பதிப்பித்துச் சிறந்த ஒரு நூலாக வெளியிடமுடியும் என்று முடிவெடுத்தபின், ஒரு நிறுவனத்தின் மூலமோ நூல் வெளியீட்டாளர் ஒருவர் மூலமோ வெளியிடும் நோக்கத்தை விட்டுவிட்டுத் தாம் உருவாக்கிய நூலைத் தாமே தம் சொந்தச் செலவில் அச்சிட்டு வெளியிட வேண்டும் என்று பதிப்பாசிரியர் கருதக்கூடும். இந்த நிலைமையில் பதிப்பாசிரியர் மேலும் பலவகைப் பணிகளைப் பற்றிச் சிந்தித்து முடிவெடுக்க வேண்டிவராகிறார்.

முதலில் அந்த நூலை அச்சிட்டுக் குறைந்தது ஆயிரம் படிகளை வெளிக்கொண்டுவருவதற்கு ஆகும் செலவினங்களை ஓர் அச்சகத்தின் துணைகொண்டு அறிதல் வேண்டும். அந்தச் செலவுத் தொகையைத் தம்மால் தயார் செய்ய முடியுமா? சிறந்த தமிழ் நூல் வெளியீட்டிற்காகத் தமிழ்நாடு அரசு தரும் நிதி உதவியைப் பெறும் வாய்ப்பு உண்டா என்பனபோன்ற வினாக்களுக்கு விடைகாண வேண்டும். செலவினங்களை ஏற்க முடியும் என்ற முடிவுக்கு வந்த பிறகு நூலின் விற்பனை முறைகளைப் பற்றி ஆழ்ந்து சிந்திக்க வேண்டும்.

## விலையும் விற்பனையும்

தனியார் ஒருவரின் வெளியீடு என்றால் அச்சிடும் செலவு சிறிது கூடுதலாகவே ஆகும். அச்சுக் கட்டணம், மேல் அட்டையில் இடம் பெறும் பல வண்ண அச்சுக்குரிய கட்டணம், மெருகூட்டுச் செலவு, கட்டமைப்புச் செலவு போன்ற பலவகைக் கட்டணங்களிலும், நிரந்தமான நூல் வெளியீட்டாளர்களுக்குக் குறிப்பிட்டுத்தரும் கட்டணப்பட்டியலைவிடத், தனியாருக்குச் சில விழுக்காடு கூடுதலாகவே அச்சகத்தார் அளிக்கும் செலவுப் பட்டியலில் குறிப்பிட்டுத் தருவர். இதேபோல தாள், அட்டை போன்ற பொருள்களை வாங்கித் தருவதாக இருந்தாலும், அச்சகத்தாரையே வாங்கிக் கொள்ளச் செய்தாலும் அவற்றிற்கான விலைப்பட்டியல் சில விழுக்காடு கூடுதலாகவே இருக்கும்.

அட்டைப்படம், நூலினுள் அமையும் சில விளக்கப் படங்கள் ஆகியவற்றை எழுதித்தரும் ஓவியர்களும், புகைப்படக்காரர்களும் தாங்களே அடிக்கடி நூல் வெளியீட்டாளர்களைத் தேடிச்சென்று காண்பர். அவ்வப்போது நடைபெறவிருக்கும் நூல் வெளியீடுகளைப் பற்றி முன்னதாகவே கேட்டறிந்து வேண்டிய படங்களையும் புகைப்படங்களையும் தயாரித்து அவர்களே கொண்டு வந்து தருவர். குறைந்த அளவிலேயே, நிரந்தரமாகக் குறிப்பிட்ட அளவில் பணத்தையும் சுட்டுவர். ஏதேனும் மாறுபாடுகள், திருத்தங்கள் தேவையென்று வெளியீட்டாளர்கள் சுட்டிக்காட்டினால் அவர்களே படத்தையெடுத்துச் சென்று வேண்டிய திருத்தங்களைச் செய்து கொண்டு வந்து கொடுப்பார்கள். அதன்பிறகே பணம் பெறுவார்கள்.

ஆனால், தனிப்பட்ட ஒருவர் ஒரு நூலை வெளியிடும்போது அட்டைப்படம், பிறபடங்கள் போன்றவற்றிற்காக ஓவியரையும் புகைப்படக்காரரையும் தாமே அலைந்து திரிந்து தேடிப் பிடிக்க வேண்டும். தேவையான படங்களைப் பற்றிய குறிப்புகளைக் கொடுத்தால், மிகவும் சிக்கலான செய்திகளை விளங்குமாறு எழுதவேண்டியிருக்கிறது என்று ஓவியரும், பலருடைய அனுமதியும் துணையும் பெற்றே இப்படங்களை எடுக்க வேண்டியிருக்கிறது என்று புகைப்படக்காரரும் சலித்துக்கொண்டு பலமடங்கு கட்டணமும் கேட்பர். ஒருவர் கேட்கும் பணம் மிக அதிகம் என்று கருதினால் வேறு ஓவியரையோ புகைப்படக்காரரையோ அணுகவேண்டியநிலை ஏற்படும். அப்படியே தேடியறிந்து வேறொருவரை நாடுமுன் அவருக்குச் செய்தி தெரிந்துவிடும். முன்னே ஒருவரை அணுகி அவரைவிட்டு வந்துள்ளதை அறிந்து, முன்பு கூறியவரைவிடக் கூடுதலாகக் கேட்கத் தொடங்கிவிடுவர். இவ்வாறான சிக்கல்களால் கால விரயமும் வீண் அலைச்சலும் ஏற்படக்கூடும். எப்படியாயினும் நிரந்தரப் பதிப்பாளர் கொடுக்கும் பணத்தைக் காட்டிலும் பலமடங்கு கூடுதலாகக் கொடுத்துப் படங்களைத் தயார் செய்ய வேண்டிய நிலையே தனியாருக்கு ஏற்படும், இத்தகு காரணங்களால் நூல் வெளியீட்டாளர் ஒருவருக்கு ஏற்படும் செலவினங்களைப் போல ஒன்றரை மடங்கு, ஒரு நூல் வெளியிடும் தனியார் ஒருவருக்குச் செலவாகும் என்பதை உள்ளத்தில் கொள்ள வேண்டும்.

இத்தகு சிக்கல்களையெல்லாம் சந்தித்து நூலை வெளியிடுமுன் பதிப்பாசிரியர் அந்நூலுக்கு விலை நிர்ணயித்து நூலில் அச்சிடவேண்டிய கடமையைச் சந்திக்க வேண்டியவராகிறார். சுமார் *250* பக்கங்களைக் கொண்ட ஒரு நூலை வெளியிட ஆயிரம் படிகளுக்கு ஏறத்தாழ நாற்பதாயிரம் ரூபாய் செலவாகலாம். ஒரு நூலின் அடக்கவிலை நாற்பது ரூபாயாகும். அடக்கவிலையின் இரண்டு மடங்காக எண்பது ரூபாய் என்று விலை வைக்கலாம். அப்படி நிர்ணயித்தால் விற்பனையாளர்கள் நாற்பது முதல் நாற்பத்தைந்து விழுக்காடு வரை கழிவு கேட்கிறார்கள். *45* விழுக்காடு என்பது *36* ரூபாயாகும். நாற்பது ரூபாய் அடக்க விலையில் வெளியிட்ட பதிப்பாளருக்கு *44* ரூபாய் கிடைக்கும். நான்கு ரூபாய் நிகரலாபம். அச்சிட்டு நூல்களை உருவாக்கி முடித்த பிறகு *20* அல்லது *25* நூல்களடங்கிய கட்டுகளாக மேலே தாளிட்டுக் கட்டிப் பதிப்பாசிரியர் தம் வீட்டிக்குக் கொண்டு வந்து சேர்ப்பதற்கும், நூல் விற்பனையாளர்களுக்கு *10, 20, 50* என்று நூல்களைக் கொண்டு போய்க் கொடுத்து வருவதற்குமான செலவினங்கள் நிகரலாபத்தைவிடக் கூடுதலாகிவிடும். விற்பனையாளர்களிடம் கொடுப்பதற்கும் ஒரு நிபந்தனை உண்டு. அதை S R அடிப்படை என்பர். அதாவது Sales or Return என்பது அந்த நிபந்தனை. விற்பது - விற்காததைத் திருப்பிக்

கொடுப்பது என்பதுதான் அந்த நிபந்தனை. அதிலுங் கூட விற்றதற்குரிய பணத்தைக் கொடுப்பது என்ற கருத்து அதில் அடங்கவில்லை. எனவே நூல்கள் விற்பனையாகியிருந்தாலும் அந்தப் பணத்தைப் பெறுவதற்குப் பலமுறை நடக்க வேண்டும். விற்றவுடன் நாம் கேட்காமலே பணத்தைக் காசோலையாக அனுப்பிவைக்கும் விற்பனையாளர்கள் நூற்றுக்கு ஒரிருவர் இல்லாமலில்லை.

புதிதாக வெளியாகும் நூல்களைப் பொது நூலகங்களுக்கு வாங்கும் திட்டம் ஒன்றினை மத்திய நூலக இயக்கம் கடைப்பிடித்து வருகிறது. சுமார் *1600*க்கு மேற்பட்டபொது நூலகங்கள் தமிழ்நாடு முழுவதும் இயங்கி வருகின்றன. அவற்றில் இடம் பெறச் செய்வதற்காகப் புதிதாக வெளிவரும் நூல்களில் சுமார் *500* படிகள் மட்டுமே வாங்கப்படுகின்றன. மொத்தத்தில் மூன்றில் ஒருபாக நூலகங்களுக்கு மட்டுமே ஒரு புதிய நூல் கிடைக்கும். எல்லா நூலகங்களுக்கும் வாங்குவது என்று முடிவெடுக்கப்பட்ட ஒரு நூலுக்குப் பொது நூலகக்குழுவே விலையை நிர்ணயித்து விடுகிறது. பதிப்பாசிரியர் குறிப்பிடும் விலையைப் பற்றி அவர்கள் கருதுவதில்லை. அதாவது டெம்மி அளவு என்று கூறப்படும் *22* x *14* செ.மீ. அளவுள்ள நூலுக்கு *16* பக்கங்கொண்ட *1* பாரத்திற்குச் சுமார் மூன்று ரூபாய் நிர்ணயிக்கப்பெறுகிறது. அப்படியானால் மேலே குறிப்பிட்ட *80* ரூபாய் விலையிட்ட நூலின் அளவு *16* பாரம் எனக் கொண்டால் *16* x *3* = *48* ரூபாய் நிர்ணயிக்கப்படும். தனியார் கொடுக்கும் *44* ரூபாயைவிட *4* ரூபாய் கூடுதலாகவே நூலகம் வழங்குகிறது. மகிழ்ச்சிக்குரிய செய்தி அல்லவா? இல்லை.

*256* பக்க அளவுள்ள டெம்மி அளவு நூலுக்கு அதாவது எண்பது ரூபாய் விலை குறிப்பிடப்பட்டிருந்த ஒரு நூலுக்கு *48* ரூபாய் விலை நிர்ணயித்த நூலக இயக்ககம் பிற விதிமுறைகளையும் விதிக்கிறது. வாங்குவதாக முடிவெடுக்கப்பட்ட *500* நூல்களைச் சுமார் *15* முதல் *20* மாவட்ட நூலகங்களுக்குத் தனித்தனியே அனுப்புமாறு ஆணையிடுகிறார் மத்திய நூலக இயக்குநர். நூல்விலைகளுக்குரிய ரசீதுபோட்டு நூலகங்களுக்கு அனுப்ப வேண்டும். அப்போது அவர்கள் நிர்ணயித்த *48* ரூபாய்க்கு ரசீது போட்டு அதில் *15* விழுக்காடு கழிவு அளித்து நிகர விலையைக் குறிப்பிட வேண்டும். அது இயக்குநர் ஆணையில் இடம் பெறுவது. அப்படியானால் நூலுக்குச் சுமார் *7* ரூபாய் கழிவு போக நூலின் விலை *41* மட்டுமே அடங்கும். நூல்களை வெளியில் அனுப்பும் அளவில் *15, 20* கட்டுகளாக நன்றாகக் கட்ட வேண்டும். அவற்றைக் கொண்டு போய் குறிப்பிட்ட நிலையங்களிலிருந்து அனுப்பி வைக்க வேண்டும். அனுப்பும் செலவும் நம்மைச் சேர்ந்தது. இப்போது சொல்லுங்கள் நூலகம் குறிப்பிடும் விலை மகிழ்ச்சிக்குரிய செய்தியா? அதுமட்டுமா? தனியார் விற்பனையார்களிடமாவது அவ்வப்போது சென்று சிறிது சிறிதாகப் பணத்தைப்

பெறலாம். அது அவ்வப்போதைய செலவைச் செய்யத் துணைபுரியும். ஆனால் நூலகங்களுக்கு அனுப்பிய நூல்களுக்கான பணத்தை அவர்கள் விரும்பியபோது அனுப்புவார்கள். அவர்கள் தரும் காசோலைகளை அவர்கள் குறிப்பிடுமிடத்திற்குச் சென்று பெற்றுக் கொள்ள வேண்டும். அப்போதும் நமக்கு ஓரளவு செலவு வைப்பார்கள். இத்தகு அனைத்துச் சிக்கல்களையும் அறிந்து, சிந்தித்தபின்னும் தாமே சொந்தப் பதிப்பாக வெளியிடலாம் என்று துணிந்தால் வெளியீட்டுப் பணிகளை மேற்கொள்ளலாம்.

## வெளியீட்டு ஒப்பந்தம்

முதலில் சிறந்ததொரு அச்சகத்தைத் தேர்ந்தெடுத்துச் செலவினங்களுக்கான ஒப்பந்தத்தை எழுதி முடிக்கவேண்டும். நூல் எந்த அளவில் அமைய வேண்டும்? எத்தனைப் படிகள் அச்சிட வேண்டும்? எந்தத் தாளில் அச்சிட வேண்டும்? அட்டைப்படம் எத்தனை வண்ணங்களில் இருக்க வேண்டும்? கட்டமைப்பு எத்தன்மையது? அட்டையின் கனஅளவு எது? அட்டைக்கு மெருகூட்டுதல் செய்யப்படவேண்டுமா? தனித்தாள் உறை (Jocket) தேவையா? இத்தகு பலவகை அமைப்பு முறைகளையும், அந்த அமைப்பு முறைகளுக்கான செயற்பாடுகளையும் உறுதிப்படுத்தியபின் உரிய செலவினங்கள் குறிப்பிடப்பட்ட ஒப்பந்தம் கையெழுத்தாதல் வேண்டும்.

## சுவடிச் செய்திகள்

ஒரு சுவடியைத் தேர்ந்தெடுக்கும் பதிப்பாசிரியர், இந்தச் சுவடியைத் தெளிவாகப் பதிப்பித்து வெளியிடும் அளவில் உருவாக்க நம்மால் முடியுமா என்பதை அந்தச் சுவடியில் உள்ள பொருளை (subject) வைத்தே முடிவுசெய்ய முடியும். சுவடியில் உள்ள பொருளில் தமக்கு அறிவாற்றலும் அனுபவமும் உண்டு என்பதை அவர் உளமார உணரவேண்டும். அந்தச் சுவடிப் பொருளைத் தெளிவுபட மக்களுக்கு எடுத்துக்காட்ட முடியும் என்ற நம்பிக்கை அவருக்கு ஏற்படவேண்டும். அந்நூலில் ஏற்படும் ஐயங்களைப் போக்கிக் கொள்ளத் துணைநூல்களும் அத்துறை வல்லுநர்களும் தமக்குத் துணையாக இருக்கிறார்கள் என்ற துணிபு பதிப்பாசிரியருக்கு இருக்க வேண்டும். இந்தஅனைத்து முடிவுகளையும் எடுக்கக் காரணமாய் இருப்பது அந்தச் சுவடிப் பொருளேயாகும்.

இன்று கிடைத்துள்ள தமிழ்ச் சுவடிகளுள் எந்தெந்தப் பொருள்கள் அடங்கியுள்ளன என்பதை அறிவது, அவற்றுள் ஒரு பொருளைப் பதிப்பாசிரியர் எவரும் எளிமையாகத் தேர்ந்தெடுக்க உதவிபுரியும். அகராதி, அரிச்சுவடி, இரசவாதம், இலக்கணம், இலக்கியம், கணிதம், கதைப்பாடல், சமயம், ஜாலம், சிற்றிலக்கியம், சோதிடம், தோத்திரம், நாடகம், நாட்டுப்புற இலக்கியம், புவியியல்,

மருத்துவம், மாந்திரீகம், வரலாறு, வர்மசூத்திரம், வானவியல் என்னும் பெருவாரியான பொருளில் இருபதுவகைச் சுவடிகள் கிடைக்கின்றன. ஒவ்வொரு வகையிலும் பலவகையான செய்திகளடங்கிய சுவடிகள் கிடைக்கின்றன.

### தேர்ந்தெடுப்பதில் சிக்கல்

இவ்வாறான பொருள்களில் கிடைத்துள்ள பல ஆயிரஞ் சுவடிகளின் பொருளையும், பெயரையும் அறிந்தவுடனே இவற்றுள் ஒன்றைத் தேர்ந்தெடுத்துப் பதிப்பிக்கலாம் என்று பதிப்பாசிரியர் ஒருவர் உடனே ஆர்வத்துடன் பணியில் இறங்கக்கூடும். தமிழ்ச் சுவடிகளைப் பொறுத்தவரை அதுதான் முடியாது.

ஏன் முடியாது? ஆர்வமுள்ள ஒருவர், தகுதி வாய்ந்த ஒருவர், தமக்கு அனுபவமுள்ள பொருளில் ஒரு சுவடியைத் தேர்ந்தெடுத்துப் பதிப்பித்து வெளியிடுவதில் என்ன சிக்கல்? இதுதானே உங்கள் கேள்வி? இதோ பதில்.

சித்த மருத்துவத்தில் தேர்ச்சி பெற்றவர்கள் நீங்கள். அத்துறையில் நல்ல அனுபவமும் ஆர்வமும் பெற்றவர்கள். பலவகை மூலிகைகளைப் பற்றி நன்றாய் அறிந்தவர்கள். அவற்றின் வெவ்வேறு பெயர்களும் உங்களுக்குத் தெரியும். தெரியாதவற்றைப் பற்றியறிய மருத்துவ அகராதிகளையும் வைத்திருக்கிறீர்கள். பல மருத்துவச் சுவடிகளைப் பதிப்பித்து வெளியிட்ட அனுபவம் மிக்க நண்பர்களும் ஒருவருக்கு இருவர் இருக்கிறார்கள். இவ்வளவையும் நன்றாகச் சிந்தித்து மருத்துவச் சுவடி ஒன்றை எடுத்துப் பதிப்பித்து வெளியிடுவது என்று முடிவெடுத்துள்ளீர்கள்.

உங்களிடமோ உங்கள் நண்பர்களிடமோ அப்படி ஒரு சுவடி இல்லை. எனவே சுவடி உள்ள ஏதேனும் ஒரு நிறுவனத்திலிருந்து தேர்ந்தெடுத்துக் கொள்ளலாம் என்பது உங்கள் முடிவு. பொதுமக்களுக்குச் சுவடிகளைக் கொடுக்கும் விதிமுறைகளைக் கையாளும் சுவடி நிலையம் ஒன்றிற்குச் செல்லுகிறீர்கள். அங்கு உள்ள சுவடிகளின் பெயர்களடங்கிய அகரவரிசை அட்டைகள் (Index Cards), பிற அட்டவணைகள் போன்றவற்றின் துணையால் சுமார் *500* பாடல்களடங்கிய ஒன்றிரண்டு சுவடிகளின் பெயர்களையும், அவற்றிற்கான சுவடி நிலைய எண்களையும் குறித்துக் கொள்ளுகிறீர்கள். அச்சுவடிகளைப் பார்க்க வேண்டும் என்று நிலைய அலுவலர்களைக் கேட்கிறீர்கள். ஒன்று அல்லது இரண்டு மணி நேரத்திற்குள் நீங்கள் குறிப்பிட்டபடி ஒன்றோ இரண்டோ சுவடிகள் உங்கள் கைக்கு வந்து சேரும். ஆர்வமிகுதியால் உங்கள் துணி என்றுகூடப் பாராமல் அவற்றின் மீதுள்ள தூசைத் துடைத்துவிட்டுப் பிரித்துப் பார்க்கிறீர்கள். நீங்கள் கேட்ட அதே சுவடிகளாக இருந்துவிட்டால் உங்கள் அதிர்ஷ்டந்தான். முதலில் சுவடிக்கட்டின்

மேலே நூல்நிலையத்தார் எழுதிவைத்துள்ள சுவடியின் எண், பெயர் முதலியவற்றால் நீங்கள் கேட்ட சுவடிகளே என்ற முடிவுக்கு வருகிறீர்கள்.

நீங்கள் தேர்ந்தெடுத்தது 'அகத்தியர் வாதகாவியம் ஆயிரம்' என்னும் சுவடி என்று கொள்ளுவோம். சுவடியைப் பிரித்தவுடன், தனி ஓர் ஏட்டிலோ ஓர் ஏட்டின் தொடக்கத்திலோ அதன் இடது ஓரத்திலோ நூலின் பெயர் இருக்கும் என்பது உங்கள் எதிர்பார்ப்பு. தேடுகிறீர்கள் அப்படித் தலைப்பு ஏதுமில்லை.

*"தந்தி மாமுக னெந்தன் குருதமை*
*தாள டிக்கருள் சரணம் புரிந்தோமே"*

என்னும் அடிகள் முதலேட்டின் தொடக்கத்தில் இடம் பெறுகின்றன. இது காப்புப் பாடல். நூல் பெயர் இல்லையென்றாலும் காப்புப் பாடலிலிருந்து நூல் கிடைத்துள்ளது. நூலின் பெயரை இறுதியிலோ பொருளாலோ அறிந்து கொள்ள முடியும் என்ற துணிவில் மேலே படிக்கிறீர்கள். தந்தி மாமுகன் என்று தொடங்கிய அந்தப் பாட்டின் முடிவில் *9* என்ற எண் காணப்படுகிறது! அந்தப் பாடல் காப்புப் பாடலில்லை; நூலின் ஒன்பதாவது பாடல்; தொடக்கத்தில் எட்டுப் பாடல்கள் இல்லை என்ற முடிவுக்கு வருகிறீர்கள். மேலே ஏடுகளைப் புரட்டுகிறீர்கள். இதே வரிசையில் *60* பாடல்கள் முடிந்தபின் சிவயோகப் பெருமை என்னும் தலைப்பு ஓர் ஏட்டின் இடதுஓரம் காணப்பெறுகிறது. அடுத்து சத்தியோகம், மவுனயோகம் என்னும் தலைப்புகள் இடம்பெறுகின்றன. *101* பாடலுக்குப் பிறகு,

*இரண்டாங்காண்டம் - பரப்பிரமப் பருவம்*
*மூன்றாவது காண்டம் - ஆதி பரப்பிரமம் (பருவம் இல்லை)*

இவ்வாறே பத்தாவது காண்டம் (வேறு ஏதுமில்லை) என்பது வரை நூல் முடிவதைக் காணுகிறீர்கள். இறுதியில்

*தெக்ஷிணாமூர்த்தி தேவரிஷிவாக்குவாத காவியம்*
*முற்றுப்பெற்றது என்பதைக் காணுகிறீர்கள்.*

இப்போது வாதகாவியம் என்பது மருத்துவநூல் அன்று; வாக்குவாதமாகப் பேசப்படும் தத்துவநூல் என்பது புலப்படுகிறது. தேர்ந்தெடுக்க முடியாத நிலை உருவாகிவிடுகிறது. இதேபோல,

தன்வந்திரி வைத்தியம் - முதற்பாகம் என்னும் சுவடியின் விளக்கங்களைப் பார்க்கிறீர்கள். சுவடியை முன்போலவே பெருமுயற்சிகளுக்கிடையே பெற்றுப் பார்க்கிறீர்கள். தொடக்க ஏட்டின் இடது ஓரத்தில் 'நாடிப் பரீட்சை' என்று காணப்பெறுகிறது. அடுத்தடுத்து நாடி

லட்சணங்கள், பித்தநாடி, வாதநாடி, கபநாடி, தசவாயுநிதானம், வாதநிதானம் என்னும் தலைப்புகளால் நூல் முழுமையடைகிறது. இது பொதுமக்களிடையே எடுபடுமா? சிந்திக்கிறீர்கள்! முடிவு?

அடுத்த சுவடிகளுள் ஒன்று மக்களுக்குப் பயன்படும் அரிய, எளிய மருத்துவ முறைகள் மிகத் தெளிவாக எழுதப்பட்ட சுவடி கிடைக்கிறது. எடுத்துப் பார்க்கிறீர்கள். வலதுபுற ஓரங்களில் இரண்டு மூன்று எழுத்து அளவுக்கு ஓலை ஏடுகள் சிதைந்து போயிருக்கின்றன. அவ்வளவையும் யூகித்து நிரப்புவது என்பது இயலாத ஒன்று. அதிலும் மருத்துவச் சுவடிகளில் அள்ளு புள்ளி வைத்து நிரப்புவது என்பது ஆபத்தானது என்பதை உணர வேண்டியவர்களாகி விடுகிறீர்கள். இப்படியே ஏடுகளின் நான்குபுற ஓரங்கள் சிதைந்தவை, பலவாறான குறைபாடுகள், முழுமையாக்க இயலாத நிலை ஏற்படுகிறது. ஓரங்கள் நன்றாக உள்ளவை, ஆனால் சுவடியின் உட்பக்கங்களில் பூச்சிகள் ஏர் உழுதிருக்கும். எழுதப்பெற்ற வரிகளுக்கு இடையில் ஓலை நன்றாகவே இருக்கும். அங்குப் பூச்சிகள் ஒன்றும் செய்திருக்காது. ஏனென்றால் அங்கு எழுத்துகள் ஏதுமில்லை. எழுதப்பெற்ற இடங்களே பூச்சிகளுக்குச் சுவையாக இருக்கும் போலும்! புரிந்து கொள்ளக்கூடிய சுவையான பகுதிகளாதலின் எழுதப்பெற்ற எழுத்துகளில் இறங்கித் தொடர்ச்சியாக உழுதுகொண்டே சென்றிருக்கும். எல்லா எழுத்துகளும் ஒன்றுசேருமாறு உழப்பெற்றிருக்கும். எழுத்தாணியால் எழுதப்பெறுதலின் எழுதப்பெற்ற இடம் சிறிது பள்ளமாக இருக்கும். இந்த நிலை பல ஏடுகளில், பல இடங்களில் என்ன செய்வீர்கள்! இப்படிப் பலப்பல இடையூறுகள்; முழுமையான ஒரு நூலைக் காண்பது என்பது கடினமானதாகவே முடியும். சரி, மற்றொரு வழி உண்டு. அந்த வழியில் இறங்குகிறீர்கள்.

ஓலைச் சுவடிகள் பலவகையான நிலையில் - அதாவது ஓரங்கள் முறிந்துபோதல், உள்ளே பூச்சிகளால் அரிக்கப்பட்டுப் படிக்க இயலாமற்போதல் போன்ற முதிர்வுகள் ஏற்படாததன் முன்பே அவற்றைப் பாதுகாக்கும் நோக்கில் தாள்களில் படியெடுத்து வைத்து அதே நூல்நிலையத்தில் பாதுகாத்து வருவார்களே அந்தத் தாள் சுவடிகளை வாங்கி அவற்றிலிருந்து படியெடுத்துக் கொள்ளலாமே; இதுதான் நீங்கள் கண்ட மற்றொருவழி.

**படியெடுப்பத்தில் சிக்கல்**

எப்படியோ ஒரு சுவடியைத் தேர்ந்தெடுத்துவிட்டீர்கள். அதைப் பதிப்பித்து வெளியிடுவது என்ற முடிவெடுத்துவிட்டீர்கள். உடனே அதைத் தாளில் எடுத்தெழுதிவிட உங்களுக்குத் துணிவு உண்டா? ஓலைச் சுவடிகளையும் தாளில் எழுதிவைத்துள்ள சுவடிகளையும் சில நாட்களாக ஆழ்ந்து பார்த்து வந்தீர்கள். அதுவரை உங்களை நோட்டமிட்டுக்கொண்டிருந்த

நூல் நிலையத்தார் நீங்கள் ஓலைச்சுவடியின் முதல் ஏட்டை ஒரு கையிலும், எழுதுகோலை ஒரு கையிலுமாகப் பிடித்துக் கொண்டு, தாளை மேசைமேல் வைத்து 'ஓம்' என்பதை எழுதத் தொடங்கி விடுங்கள் பார்க்கலாம்.

ஐயையோ! சுவடியைப் படியெடுத்துக்கொள்ளப் போகிறீர்களா? வெளியிடப் போகிறீர்களா? படித்துப் பார்ப்பதற்காகத்தானே கொடுத்தோம். எழுதிக்கொள்ள வேண்டுமானால் தனியே அனுமதி வாங்கியிருக்க வேண்டுமே. குடியே முழுகிப்போனதுபோல இந்த அடுக்குமொழிகள் கொட்டப்படும். இது ஓரிரு நிறுவனங்களில் நடைபெறும் நிகழ்ச்சி.

சுவடியைப் பார்ப்பதற்குத் தான் கொடுத்தோம். அதிலிருந்து ஒரு செய்தியையும் எழுதிச் செல்லக் கூடாது. இவ்வாறு கண்டிப்பாக மறுத்துவிடும் நிறுவனங்களும் உண்டு.

சுவடிகளைப் பார்ப்பதானால் நீங்கள் பணம் கட்டி முதலில் இங்கு உறுப்பினராக வேண்டும். அதன் பிறகே சுவடிகளைப் பார்க்கலாம் என்பது ஓரிரு நிறுவனத்தில் உங்களுக்குக் கிடைக்கும் பதில் (உறுப்பினராதற்குக் கட்டவேண்டிய தொகையையும் குறிப்பிடுவார்கள்). உடனே அவர்கள் குறிப்பிட்ட பணத்தைக் கட்ட நீங்கள் தயாராக இருப்பீர்கள். அந்தப் பொறுப்பில் உள்ளவர் விடுப்பில் இருக்கிறார். அவர் வந்த பிறகு வாருங்கள் என்று கூற, நீங்கள் வெளியேற வேண்டியவர்களாகிவிடுவீர்கள்.

சுவடிகளைப் பார்ப்பதற்கு வெளியாருக்கு இங்கு அனுமதி கிடையாது என்று உறுதியாக மறுத்துவிடும் சுவடி நிறுவனங்களும் உண்டு. அத்தகு நிறுவனங்களில் சுவடியைப் பிரித்துக்கூடப் பார்த்தறியாதவர்களே சுவடிகளின் பொறுப்பாளர்களாக இருப்பார்கள். அந்த நிறுவனங்களில் சுவடிகளைப் பிரித்துப் பார்க்க வெளியாருக்கு மட்டுமல்ல, நிறுவனச் சுவடிப் பொறுப்பாளர்களுக்கே அனுமதி இல்லை போலும்.

எங்களிடம் இத்தனைச் சுவடிகள் இருக்கின்றன; இன்னின்ன பொருள்களில் இருக்கின்றன; இவையிவை இத்தகு சிறப்பு வாய்ந்தவை (எண்ணிக்கை, பொருள்கள், சிறப்புச் செய்திகள் யாவும் சொல்லப்படும்) என்றெல்லாம் விளக்கிக்கூறி, நம்மை எட்டி நிற்க வைத்துப் பீரோக்களைத் திறந்து காட்டும் சுவடி நிறுவனங்களும் இல்லாமலில்லை.

பலநாட்களைச் செலவழித்து இவற்றையெல்லாம் சுற்றிப்பார்த்த நீங்கள் எடுக்கும் முடிவு என்ன? படியெடுத்துக் கொள்ள அனுமதி வாங்க வேண்டுமென்று நிலையத்திற்கு மீண்டும் செல்ல வேண்டும் என்னும் முடிவில் அங்குச் செல்லுவீர்கள். அனுமதிபெற அவர்கள் கூறும் விதிமுறைகளுக்கு

உட்பட்டு எழுதித்தருவீர்கள். மேலிடத்திற்கு அனுப்பிப் பெற்றுத் தருகிறோம்; ஒரு வாரம் கழித்து வாருங்கள் என்னும் பதிலைக் கேட்டுக் கொண்டு வீடு திரும்புவீர்கள்.

உங்களுக்கு ஆத்திரம் தவறாக எண்ணாதீர்கள்! அருமையான சித்த மருத்துவ நூல் ஒன்று நம்மால் வெளிவர இருக்கிறது; மக்களுக்குப் பெரிதும் பயன்படுவதாக அமையும்; மக்களுடைய பாராட்டுதல்கள் கிடைக்கும் என்றெல்லாம் கண்டுகொண்டிருக்கும் கனவினால் ஏற்படும் அவசர, ஆத்திரம், சரியாக ஏழுநாட்களை எண்ணிக் கழித்த நீங்கள் எட்டாவது நாள் அனுமதி கிடைத்திருக்கும் என்ற பேராசையோடு செல்லுவீர்கள். ஏமாற்றம்! இரண்டாவது முறை, மூன்றாவது படையெடுப்பு; பலன்? மேலிடத்திற்கு அனுப்பி இசைவு வாங்கித் தருகிறோம் என்றார்களே! அந்த மேலிடம் எது? அங்குச் செல்லுகிறீர்கள்.

"நல்ல சுவடி; பயன்படக்கூடிய பொருள்; முழுமையாகவுள்ளது; இதுவரை வெளியிடப்பெறாத நூல்; நமது நூல் நிலையத்தின் மூலமே வெளியிடலாம் என்று ஏற்கெனவே தேர்ந்தெடுத்து வைத்திருந்தோம்" மேலிடத்திற்கு அனுப்பப்பெற்ற பரிந்துரைக் கடிதத்தில் கண்டுள்ள வாசகம் இது. இப்பரிந்துரைச் செய்தியறிந்து திரும்புகிறீர்கள், மீண்டும் ஒருநாள் நூலகம் செல்லுகிறீர்கள். உங்களுக்காகச் செய்தி காத்திருக்கிறது.

"இந்தச் சுவடியை நூலகத்தின் மூலமே பதிப்பித்து வெளியிட ஆகும் செலவினங்களைக் குறித்து முறையான கடிதத்தை உடனடியாக எழுதுமாறு நூல்நிலையத் தலைவர் பணிக்கப்படுகிறார்" என்ற வாசகம் உங்களுக்குப் படித்துக் காட்டப் பெறுகிறது.

மேற்கொண்டு உங்கள் முடிவு? நீங்கள் பலசுவடிகளை அலசி ஆய்ந்து தேர்ந்தெடுத்து, அதைப் படியெடுத்துக்கொள்ள இசைவு வழங்குமாறு எழுதிக் கொடுக்கும் வரை அந்தச் சுவடியைப் பற்றிச் சிறிதும் சிந்தித்தறியாதவர்களே நூல்நிலையத்தாரும், இசைவுவழங்கும் மேலலுவலரும் என்பதையும் நினைத்துப் பாருங்கள்!

உங்கள் ஆர்வம் வேறுசுவடியைத் தேர்ந்தெடுக்கத் தூண்டுகிறது. முன்பே ஒரு சுவடியை முழுமையாகத் தேர்ந்தெடுத்த அனுபவம் துணை நிற்கிறது. மீண்டும் ஒன்றைத் தேர்ந்தெடுத்து அனுமதிக்கு எழுதுகிறீர்கள். இசைவும் கிடைத்து விடுகிறது. அந்த இசைவு உத்தரவில் சில நிபந்தனைகள் இருக்கும் அது உங்களை என்ன செய்யும்? நிபந்தனைகளை ஏற்றுச் சுவடியை முழுமையாகப் படியெடுத்து முடிக்கிறீர்கள் அல்லது ஒளிப்படி (Xerox copy) எடுத்துக்

கொண்டு போய் வீட்டில் ஓய்வாகத் தாளில் எழுதுகிறீர்கள். எழுதும்போதும் தொடர்ந்து பிறபதிப்புப் பணிகளை மேற்கொள்ளும் போதும் ஏற்படும் சிக்கல்களைப் பற்றிச் சிறப்பாக அடுத்தப் பகுதியில் விரிவாகக் காணலாம். பொதுச் சிக்கல்கள் மட்டும் இங்கு எடுத்துக்காட்டப் பெறுகின்றன.

தாளில் எழுதி முடித்தபிறகு, சுவடிச் செய்திகளைத் தூய்மை செய்தல், உரை முதலிய விளக்கங்களைஅளித்தல் போன்ற பணிகளில் மிகுதியான உழைப்பை மேற்கொள்ளுகிறீர்கள். பதிப்புப் பணிகள் முடிந்த தருவாயில் ஒரு அதிர்ச்சி தரும் உண்மைச் செய்தி கிடைக்கிறது. "நீங்கள் பதிப்புப் பணிகளை மேற்கொண்டுள்ள அதே நூல் சில மாதங்களுக்கு முன் வெளியாகியுள்ளது" என்பதுதான் அந்தச் செய்தி. இந்த உண்மையை நீங்கள் முன்கூட்டியே அறியும் வாய்ப்பு உங்களுக்குக் கிடைக்காமற் போயிற்று.

## வெளியிடப்பெற்றுள்ள செய்தி

பதிப்பாசிரியர் ஒரு சுவடியைத் தேர்ந்தெடுத்து அதைப் பதிப்பிக்கத் தொடங்குமுன் அது வெளியிடப்பெற்றுள்ளதா என்பதை முடிவு செய்ய வேண்டும். அவ்வாறு அறிவதில் சரியான வழிகாட்டிகள் இல்லாத குறை பதிப்பாசிரியருக்கு ஒரு பெரிய சிக்கல். தமிழ் நாடு அரசின் தமிழ் வளர்ச்சி மன்றத்தின் வெளியீடாகத் 'தமிழ் நூல் விவர அட்டவணை' என்னும் தொகுதிகள் சில கிடைக்கின்றன. முதல் தொகுதி *1961*இல் வெளியாகியுள்ளது. அது *1867* முதல் *1900* வரை வெளியான நூல்களுக்குரிய அட்டவணை. தொடர்ந்து பத்துத் தொகுதிகளுக்குமேல் வெளிவந்துள்ளன. எந்த நூலகத்திலும் எல்லாத் தொகுதிகளையும் ஒருசேரக்காண முடிவதில்லை. ஒவ்வொரு அட்டவணையிலும் பொருள்வாரித் தலைப்புகளை அமைத்துக் கொண்டு ஆசிரியர் பெயர்களால் அகரவரிசைப்படுத்தி அந்தந்த ஆசிரியர்கள் வெளியிட்டுள்ள நூல்களின் விவரங்கள் வெளியிடப்பெற்றுள்ளன. மருத்துவச்சுவடி ஒன்றினைத் தேர்ந்தெடுத்துள்ள நமக்கு மருத்துவ நூல்கள் என்னும் பொருள் எந்தத் தொகுதியில் இடம் பெறுகிறது என்பதைத் தேடிப்பிடிக்க வேண்டும். பிடித்தாலும் அதில் குறிப்பிட்ட ஆண்டுக்குள் வெளியான நூல்களின் விவரங்களே கிடைக்கும் இப்படி எல்லாத் தொகுதிகளையும் புரட்டினால் அந்தந்தத் தொகுதிகளில் குறிப்பிடப்பெறும் ஆண்டுவரை அந்த நூல் வெளியாகியிருக்கிறதா என்றுதான் காணமுடியும்.

அந்த ஆண்டுகளுக்குள் வெளியிடப்பெற்றிருந்தாலும் அது பதிவுக்கு அனுப்பப் பெற்றிருக்க வேண்டும்.

பதிவு செய்யப்பெற்ற நூல்களுக்குரிய விவரங்களே அந்த அட்டவணையில் இடம் பெறுகின்றன. பதிவுக்கென்று அந்த நூல் அனுப்பப்பெறவில்லையானால் அட்டவணையில் இடம் பெற்றிருக்காது. அட்டவணைகளை முழுமையாகப் புரட்டிய நமக்கு அந்த நூல் அச்சாகி வெளியிடப்பெறவில்லை என்ற முடிவே கிடைக்கிறது.

நூலகம் போன்ற இதழ்களில் அவ்வப்போது வெளியாகும் சில நூல்களின் பட்டியல் வெளியாகிறது. அவற்றையெல்லாம் தொகுத்துக்காணும் வாய்ப்பும் ஏற்படுவதில்லை. எந்த வகையிலும் அண்மையில் வெளியான நூல்களைப்பற்றியறியும் வாய்ப்பு முழுமையாகக் கிடைப்பதில்லை.

கிடைக்கும் தமிழ்நூல் விவர அட்டவணைகளைப் பார்த்து அறிவதிலும், சுவடிப்பதிப்பாசிரியருக்கு மற்றுமொரு பெரிய சிக்கல் இடம் பெறுகிறது. விவர அட்டவணையில் விளக்கப்பெறும் நூல்கள் அந்தந்த ஆசிரியர்களே சொந்தமாக எழுதி வெளியிடப்பெற்றவையா அல்லது சுவடிகளிலிருந்து எடுத்து வெளியிடப்பெற்றவையா என்ற செய்தி அறவே இடம் பெறவில்லை. விளக்கம் பெறும் நூலில் இடம் பெறும் பொருள்கள் சில சுட்டப்பெறுகின்றன; ஆனால் தொடக்கம், முடிவு போன்றவற்றைக் கொண்டு இந்தச் சுவடிப்பொருளா என்பதை ஒப்பிட்டு அறியும் வாய்ப்பும் கிடைப்பதில்லை

இத்தகு அனுபவச்சிக்கல்களையெல்லாம் எதிர்த்துச் சமாளிக்கும் திறமுடைய நீங்கள், உடனே நீங்கள் விரும்பும் பொருளில் ஒரு சுவடியைத் தேர்ந்தெடுங்கள்; முன்னோடிகளின் பதிப்புப்பணிகளைப் பின்பற்றுங்கள்; இக்கால நடைமுறைகளில் சிறந்தவற்றைத் தேர்ந்தெடுங்கள். பதிப்புப்பணியைத் தொடருங்கள். வெற்றி உறுதி.

# 2. திருவனை பல்கலைக்கழகச் சுவடிப்பதிப்புகள்

**சிரவையாதீனக் கவிஞர் புலவர் ப.வெ. நாகராஜன்**

மிகப் பழங்காலத்திலிருந்து ஏறக்குறைய கி.பி. *18*ஆம் நூற்றாண்டு முடியத் தமிழ் இலக்கியங்கள் எல்லாம் ஓலைச்சுவடிகளிலேயே எழுதப்பெற்று வந்தன. ஒவ்வொருவனும் தான் கற்க விரும்பும் நூலைச் சுவடியாக எழுதி வைத்துக் கொண்டு படிக்க வேண்டிவந்தது. பண்டைக்காலத்தில் அறவோர் சிலர் நூலைக் கற்க விரும்புபவர்களுக்கு ஓலைச் சுவடிகளைத் தக்காரைக் கொண்டு எழுதுவித்து நன்கொடையாகவும் வழங்கி வந்தனர் என்பதை,

> **ஊணொடு கூறை எழுத்தாணி புத்தகம்**
> **பேணொடும் எண்ணும் எழுத்திவை - மாணொடு**
> **கேட்டெழுதி ஓதிவாழ் வார்க்கீந்தார் இம்மையான்**
> **வேட்டெழுத வாழ்வார் விரிந்து** (63)

என்னும் ஏலாதி வெண்பாவால் அறிகிறோம். இதனால் கல்வி நாட்டம் உடையவர்களுக்கு உணவு, உடை, எழுதுபொருள், புத்தகம் ஆகியவற்றைத் தருவது பெரிய அறமாகக் கருதப்பட்டது என்பது தெளிவாகிறது.

இவ்வாறு ஒவ்வொருவருக்காகவும் அவர் கற்க முனையும் பல நூல்கள் தனித்தனியாக எழுதப்பட்டு வந்தமையும் சுவடிகள் எண்ணிக்கையில் மிகுவதற்கு முக்கியமானதொரு காரணம் ஆகும். தமிழ்நாட்டில் தரங்கம்பாடியில் *1712*ஆம் ஆண்டு முதன் முதலாக அச்சகம் நிறுவப்பெற்றது. (கோவாவிலும், கொல்லத்திலும் முன்பே அச்சுக்கூடங்கள் தோன்றி, அவற்றில் கிறித்துவ மத போதகர்களுக்கான சமய நூல்கள் தமிழ்மொழியில் அச்சேறின.) எனினும் தமிழ் இலக்கிய நூல்கள் அச்சுவாகனம் ஏறியது *19*ஆம் நூற்றாண்டில்தான். *1812*ஆம் ஆண்டு சென்னையில் மலையப்பபிள்ளை குமாரன் ஞானப்பிரகாசனால் மாசத் தினச்சரிதை அச்சுக்கூடத்தில் அச்சிடப்பெற்ற திருக்குறள், நாலடியார் மூலம்தான் இப்போது நமக்குக் கிடைக்கும் இலக்கிய நூல்களுள் மிகப் பழமையான அச்சுப் புத்தகம் ஆகும்.[1] பிறகு பல அச்சகங்கள் தோன்றி இலக்கிய நூல்கள் அச்சுப் புத்தகங்களாக வெளிவரலாயின.

"தமிழ்நாட்டில் தாளும் அச்சும் வந்த பின்னரும் ஓலையில் எழுதுவதையும் எழுதி வைப்பதையுமே பெருமையாகவும் உண்மையுடையதாகவும்

கருதிவந்தனர். இன்றும் சிலர் பிறந்த நாள் பற்றிய குறிப்புகளை ஓலையில் எழுதி வருவதையும், ஐரோப்பியப் பாதிரிமார்கள் தங்கள் நூல்களை ஓலையில் எழுதிவைத்துள்ளமையும் மேற்கூறிய கருத்திற்குச் சான்றுகளாகின்றன.மேலும், அச்சு நூலைப் பார்த்தும் ஓலையில் படி எடுத்திருக்கிறார்கள். மெய்ப்பில் விடுபட்டுப்போன பிழைகள் அச்சுப் பிழை என்று ஓலைச்சுவடியில் குறிப்பிடப்பட்டுள்ளன. எனவே, ஓலையில் எழுதி வைப்பது என்பது நம்பிக்கையின் அடிப்படையில் தாள் வந்தபிறகும் இங்கு நடைபெற்று வந்துள்ளது"[2] என்னும் ஆய்வாளரின் கருத்து ஏற்புடையதுதான். எனினும் அச்சு வசதி பெருகப்பெருகப் பனையேட்டில் எழுதும் பழக்கம் கொஞ்சங் கொஞ்சமாகக் குறைந்து கொண்டே வரலாயிற்று என்பதுதான் வரலாற்றுண்மை.

"காகிதம் எழுதுபொருளாகப் பயன்பட்டபோது பழஞ்சுவடிகளைக் காகிதத்திலும் பெயர்த்து எழுதிப் போற்றுவாராயினர். சென்ற நூற்றாண்டில் காகிதப்புழக்கமும் அச்சியந்திரங்களும் மிகுதிப்படவே தமிழ்நூல்கள் ஏட்டிலிருந்து அச்சுப்படிவமாக மாறத் தொடங்கின. அச்சில் வந்தபின் நுல்களை எளிதில் பெறவும், ஏட்டில் எழுத்துக்களை நிதானித்துப் படிப்பது போலன்றி விரைவாக வாசிக்கவும் இயன்றது. ஆகவே, அச்சில் வந்த நூல்களின் சுவடிகளில் கற்றோரின் கவனம் செல்லவில்லை."[3]

ஓலைச்சுவடிகளைப் படிக்கும் பழக்கமே நாளுக்குநாள் குறைந்து வந்தது என்றால் புதிய சுவடிகள் எழுதப்படவில்லை என்று கூறவும் வேண்டுமோ? "ஏட்டுச் சுவடிகளின் வழிப் படிக்கும் நிலை மாறியபோதே அவற்றின் சிதைவிற்கும் அழிவிற்கும் வித்திட்டாயிற்று. ஏட்டுச்சுவடியில் எழுத்தாணி கொண்டு எழுதும் பழக்கமும் வரவரக் குறைந்து வந்தது. அதனால் புதிய சுவடிகள் எழுதிவைக்கும் நிலைமையும் மாறிவிட்டது. ஒரு சிலர் தாம் போற்றும் நூல்களைக் காகிதத்தில் படியெடுத்தும் கற்கலாயினர். பெரும்பாலான இடங்களிலும் இருந்த சுவடிகள் போற்றுவாரின்றி மூலைமுடுக்குகளில் பெட்டி, பேழைகளில் அடைபட்டுப் பரண்களில் சிறைப்பட்டு விட்டன. இவ்வாறு கவனிப்பாரின்றிக் கிடந்த சுவடிகள் பூச்சிபுழுக்களுக்கும், எலிகளுக்கும், கறையானுக்கும் இரையாயின. சுவடிகளின் அருமை அறியாத மக்கள் அவற்றை நீருக்கும் நெருப்புக்கும் இரையாக்கி மகிழ்ந்தனர்."[4] என்கிறார் மு. சண்முகம்பிள்ளை அவர்கள்.

தமிழ்ச்சுவடிகளின் பொதுவான நிலை இவ்வாறிருக்கப் பதிப்பாசிரியர்கள், ஆய்வாளர்கள் போன்ற சிறுபான்மை அறிவு ஜீவிகளுக்கு இவை இன்றியமையாது தேவைப்பட்டன. எனவே, பழைய ஓலைச்சுவடிகளைப் போற்றிப் பாதுகாத்து வைத்துக் கொண்டு அவற்றைப் பதிப்பிக்க வேண்டியதாகிய

தவிர்க்கமுடியாத சூழ்நிலை ஏற்பட்டது. தமிழ் இலக்கியங்களைப் பதிப்பித்த அக்காலப் பதிப்பாசிரியர்கள் அனைவரும் பற்பல ஓலைச்சுவடிகளைத் தேடித் தொகுத்து வைத்துக் கொண்டே அப்பணியில் இறங்கினர்.

தமிழ்த்தாத்தா உ.வே.சா. சுவடி தேடி அலைந்து திரிந்த வரலாறு உலகறிந்த ஒன்று. *1956*இல் காலமான பேரா. வையாபுரிப்பிள்ளை *336* சுவடிகளைத் தொகுத்து வைத்திருந்தார் என அறிகிறோம் (அச்சுவடிகள் இன்று தமிழகத்தை விட்டே நாடு கடத்தப்பட்டு விட்டன என்பது வருத்தப்படவேண்டிய செய்தி ஆகும்). யாழ்ப்பாணம் ஆறுமுக நாவலர், களத்தூர் வேதகிரி முதலியார், தாண்டவராய முதலியார், நயனப்ப முதலியார், விசாகப் பெருமாளையர், இராமாநுஜக் கவிராயர், இராசகோபாலப்பிள்ளை, திருமயிலை சண்முகம் பிள்ளை, சுன்னாகம் குமாரசாமிப் பிள்ளை, சி.வை. தாமோதரம் பிள்ளை, வீராச்சி மங்கலம் சிவன் பிள்ளை, நமச்சிவாய முதலியார், மகாவித்துவான் ரா. இராகவையங்கார் முதலியோரும் பல சுவடிகளைத் தொகுத்துக் கொண்ட பிறகே பதிப்புப் பணியைத் தொடங்கினர்.

இவ்வாறு ஓலைச்சுவடிகளைப் பல இடங்களிலிருந்தும் தேடித்தொகுத்து, பேணிப் பாதுகாத்துப் பதிப்பிப்பது தொடக்கத்தில் தனிப்பட்டவர்களின் பணியாக இருந்தது. நாளடைவில் கல்வி வளர்ச்சியில் அக்கறையுடைய சில நிறுவனங்களும் பல்கலைக்கழகங்களும் மிக இன்றியமையாத இத்துறையில் ஈடுபடத் தொடங்கின. இப்படியாகக் காலத்தின் கட்டாயத்தால் உருவான அமைப்புகள் எல்லாம் தொடக்கத்தில் ஓலைச்சுவடிகளைச் சேகரித்துப் பாதுகாக்கும் சுவடி நூலகங்களாகத்தான் தோன்றின. நாளடைவில் இந்த அமைப்புகள் சுவடிகளைப் பதிப்பித்து வெளியிடும் பணியையும் ஏற்றுக்கொண்டன. இத்தகைய அமைப்புகளின் சுவடியியற் பணிகளைத் தொகுத்துக் காணலாம்.

முதலில் நிறுவனங்களும் அடுத்துப் பல்கலைக்கழகங்களும் அகரவரிசையில் அறிமுகப்படுத்தப்படுகின்றன. ஆசியவியல் நிறுவனம், உலகத் தமிழ்க்கல்வி இயக்கம், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், கேரளப் பல்கலைக்கழகக் கீழ்த்திசைச் சுவடி நூலகம், சரசுவதி மகால் நூலகம், சிரவையாதீனம், சென்னைக் கல்விச் சங்கம், சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், டாக்டர் உ.வே.சாமிநாதய்யர் நூல் நிலையம், தமிழக அரசு கீழ்த்திசைச் சுவடிகள் நூலகம், தமிழக அரசு தொல்பொருள் துறை, திருவாமாத்தூர்க் கௌமார மடாலயம், திருவாவடுதுறையாதீனம், பவனாந்தர் கழகம், பாண்டிச்சேரிப் பிரஞ்சிந்திய நிறுவனம், பேரூராதீனம், மதுரைத் தமிழ்ச்சங்கம், வடலூர்ச் சன்மார்க்க சங்கம் ஆகிய நிறுவனங்களும், சுவடிப்பதிப்போடு தொடர்புடையனவாகிய

அண்ணாமலைப் பல்கலைக்கழகம், சென்னைப் பல்கலைக்கழகம், தமிழ்ப் பல்கலைக்கழகம், மதுரை காமராசர் பல்கலைக்கழகம் ஆகிய நான்கு பல்கலைக்கழகங்களும் ஆற்றிய சுவடிப்பதிப்புப் பணிகள் இவ்வுரையில் அறிமுகம் செய்யப்பெறுகின்றன.

## I. சுவடிப்பதிப்பில் நிறுவனங்கள்

### 1. ஆசியவியல் ஆய்வு நிறுவனம், சென்னை.

இந்த நிறுவனம் *1982*ஆம் ஆண்டு தோற்றுவிக்கப்பட்டது. இங்கு *1985*ஆம் ஆண்டு சுவடித்துறை ஏற்படுத்தப்பட்டுத் தொடர்ந்து பணிபுரிந்து வருகிறது. ஆசியவியல் ஆய்வு நிறுவனம் மிகக்குறுகிய காலத்தில் பொருளாதார நிலையிலும், பலவகையான நடவடிக்கைகளாலும் மிகப்பெயர் பெற்று விளங்குகிறது. தமிழ் இலக்கியங்களை ஆங்கிலத்தின் வழியாக உலகம் முழுவதும் பரப்புதல், தமிழ்ப் பேரறிஞர்களால் அதிகம் கவனிக்கப்படாத நாட்டார் கதைப்பாடல்களை ஆடம்பரமான பதிப்பாக வெளியிடுதல், சுவடி அட்டவணை தயாரித்து வெளியிடுதல், ஆங்கிலத்தில் தமிழ் இலக்கியக் களஞ்சியம் வெளியிடுதல், கருத்தரங்கங்கள் நடத்துதல், சுவடிப் பயிற்சிப் பட்டறைகள் நடத்துதல் ஆகியவற்றில் இந்த நிறுவனம் தொடர்ந்து ஈடுபட்டு வருகிறது.

வெங்கலராஜன் கதை, சின்னத்தம்பி கதை, உச்சினி மாகாளியம்மன் கதை, குறுக்களாஞ்சி கதை ஆகிய மூன்று கதைப்பாடல்களையும் ஒரே நூலாகப் பதிப்பித்துள்ளது. "ஆசியவியல் நிறுவனம் பொதுவான ஆங்கிலத் தலைப்புகளில் கதைப்பாடல்களை வெளியிட்டு வருகிறது. ஆய்வுரைகள், துணைநூற் பட்டியல்களோடு இடம் பெற்றுள்ளன. அயல்நாட்டவர்க்குப் பயன்படும் நோக்கத்தோடு இந்த வெளியீடுகள் வெளிவருகின்றன."[5] என்கிறார் ஆறு. இராமநாதன். "பழந்தமிழர் தம் எண்ணங்களும் அனுபவங்களும் கருத்துகளும் தமிழ்மொழியறியாத வெளிநாட்டினருக்கும் சென்று சேரவேண்டும். அவர்களும் அக்கருத்துக்களை ஊன்றி உணரவேண்டும்; அவற்றைச் சீர்தூக்கிப் பார்க்க வேண்டும் என்னும் பெருநோக்கில் சுவடிப்பதிப்புகள் அனைத்தையும் ஆங்கில மொழிபெயர்ப்புடன் வெளியிடுவதை முதல் குறிக்கோளாகக் கொண்டுள்ளது இத்துறை. இந்தப் பொதுவான குறிக்கோளோடு சுவடிப்பதிப்பு வெளியீடுகளுக்கெனச் சில நெறிமுறைகளையும் வகுத்துக் கொண்டு செயற்படுகிறது"[6] என்பார் இந்நிறுவனத்தைச் சேர்ந்த கி. ஜெயகுமார்.

இந்நிறுவனத்தின் ஓலைச்சுவடிகளின் விவர அட்டவணை உண்மையில் மற்ற நிறுவனங்களின் விளக்க அட்டவணைகளைத்

திருத்தியமைத்துக்கொள்ளப்பெற்று, மொழிபெயர்த்து, மிக விரிவாக்கி வெளியிடப்பட்டதாயினும் முதல் முயற்சிபோல மிகமிகப் பரவலாகப் பேசப்படுகிறது.

ஆசியவியல் ஆய்வு நிறுவனம் தமிழ்ச்சுவடியியலை அனைத்துலக அளவில் பரவலாகப் பரப்பும் பணியில் முன்னிலை வகிக்கிறது எனலாம்.

## 2. உலகத் தமிழ்க்கல்வி இயக்கம், சென்னை.

இந்த நிறுவனம் *1981*இல் தொடங்கப்பெற்றது. "கல்வி நிலை, பொதுவாக, படிப்புக்கும் அறிவுக்கும் வாழ்க்கைக்கும் பண்பாட்டிற்கும் தொடர்புடையதாக அமையவேண்டும். ஆனால், தற்காலத்தில் கல்விநிலை அவ்வாறு அமையவில்லையோ என்று தோன்றுகிறது. அந்தக் குறையைப் போக்கக் கல்விக்கும் வாழ்க்கைக்கும் தொடர்புடையதாகக் கல்வியை நிறுவுவதற்கு இந்த இயக்கம் தொடங்கப்பட்டுள்ளது"[7] என்று இதன் நிறுவனராகிய ச.வே. சுப்பிரமணியம் குறிப்பிடுகிறார். "தமிழில் இதுவரை வெளிவராத நூல்கள் அனைத்தையும் வெளியிட இவ்வியக்கம் முயலும். தமிழ் நூல்கள் அனைத்தையும் ஒருசேரத் தொகுத்து வெளியிட இவ்வியக்கம் திட்டமிட்டுள்ளது."[8] என்று இதன் குறிக்கோள் விளக்கப்பட்டுள்ளது.

இந்த இயக்கத்தின் முதல் நூலாக வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகளின் கணபதி ஆயிரம் *1984*ஆம் ஆண்டில் வெளியிடப்பட்டுள்ளது. திருவாமாத்தூர்க் கௌமார மடாலயம் தி. செ. முருகதாச ஐயா ஓலைச்சுவடியிலிருந்து *1000* பாடல்களைப் படியெடுத்தும், சீர்பிரித்தும் பதிப்புக்கான காகிதக் கையெழுத்துப் படியை அமைத்துள்ளார். அவர் மைந்தர் தி.மு. சங்கரலிங்கம் இப்பணியில் உதவிபுரிந்துள்ளார். முருகதாச ஐயா எழுதிய முன்னுரை அவர் பெயர் இல்லாமல் நூலில் இடம்பெற்றுள்ளது. ச.வே.சு. மிகச் சுருக்கமாக முகவுரை வரைந்துள்ளார். இம்முகவுரையால் பிழைதிருத்தம் முதலிய பதிப்புப் பணிகளைச் செய்தவர்கள் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தைச் சேர்ந்த அறிஞர்கள் என்பது புலனாகிறது.

"இந்நூல் வெளிவர பொருள்நிலையில் எல்லாவகையிலும் துணைபுரிந்த தவத்திரு. கருமாரிதாசர்" [9] அவர்களின் பெயர் நூலின் முகப்புப் பக்கத்தில் பதிப்பாசிரியர் எனக் கொடுக்கப்பட்டுள்ளது. இது பதிப்பாளர் என இருத்தலே முறை.

இந்தக் கணபதி ஆயிரத்தைத் தவிர இந்த இயக்கத்தின் பதிப்பாக வேறு நூல் எதுவும் பார்வைக்குக் கிடைக்கவில்லை.

### 3. உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை.

தமிழ் வளர்ச்சிக்குப் பலதுறைகளிலும் நிலையான தொண்டாற்றிவரும் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் *1970* ஆம் ஆண்டு தோற்றுவிக்கப் பெற்று, தமிழக அரசின் நிதி உதவியுடன் சிறப்பாகப் பணியாற்றி வருகிறது. தமிழாய்வைப் பன்முகப் படுத்துதல், ஆய்வை ஆழமாக்கித் தரத்தை உயர்த்துதல், அச்சில் வெளியாகாத நூல்களைப் பதிப்பித்தல், சுவடிக்கலை மறைந்தொழிந்து போகாமல் பயிற்சி வகுப்புகளை நடத்துதல் எனப் பன்முகப் பணியில் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் ஈடுபட்டிருந்தபோதிலும் இங்குச் சுவடிப்பதிப்புகளில் மட்டுமே சிந்தை செலுத்தப்படுகிறது.

கூவநூல், சின்னமகிபன் குளுவ நாடகம், திருக்குருகூர் திருவேங்கடநாதன் பிள்ளைத்தமிழ், முத்துவிசய ரகுநாத சேதுபதி பணவிடுதூது, பிரபந்தத் திரட்டு, தந்திவனப் புராணம், மனை நூல், கண் மருத்துவம், கருவூரார் பலதிரட்டு, கும்மிப் பாடல்கள், பிரபந்த தீபிகை, திருமயிலை உலா, மீனாட்சியம்மன் திருப்புகழ், வெள்ளைக்காரன் கதை, தன்வந்திரி குழந்தை வாகடம், வர்ம சூத்திரம், மருந்து செய்முறைகள், வாத்திய மரபு, கன்னிவாடி நரசப்ப நாயக்கன் வளமடல், தோட்டுக்காரி கதை, குணவாகடம், குசலவர் சுவாமி கதை, தேரையர் அந்தாதி, புதுவூர்ச் சக்கரவர்த்தி அம்மானை, சிவகிரி குமர சதகம், முத்தாரம்மன் கதை, சந்திரபதன் கதை, கருணையம்மன் அந்தாதி, சித்த மருத்துவ மணிகள், அமிர்த மதனக் கூத்து நாடகம், மூலிகைக் கற்பங்கள், காத்தவராய நாடகம், சடத்தலம், தடிவீரசுவாமி கதை, வன்னியராசன் கதை, சிவனணைஞ்ச பெருமாள் கதை, நன்னூல் மூலமும் கூழங்கைத் தம்பிரான் உரையும், மன்னான் சின்னாண்டிக் கதைப்பாடல் என உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தின் சுவடிப் பதிப்புப் பட்டியல் நீண்டுக்கொண்டே செல்கிறது.

இந்தப் பட்டியலை மேலெழுந்தவாரியாகப் பார்த்தாலே பிள்ளைத்தமிழ், தூது, தலபுராணம், உலா, வளமடல், சதகம், அந்தாதி போன்ற இயற்றமிழ் இலக்கிய வகைகளும், பிரபந்தத் திரட்டு, பிரபந்த தீபிகை, நன்னூல் கூழங்கைத் தம்பிரான் உரை போன்ற இலக்கண நூல்களும், கூவநூல், மனைநூல் முதலிய கட்டடக் கலை நூல்களும், நாட்டார் இலக்கிய நூல்களும், மருத்துவ நூல்களும், மீனாட்சி திருப்புகழ் போன்ற தோத்திர நூல்களுமாகப் பலதுறைப்பட்ட சுவடிப்பதிப்புகளை இந்த நிறுவனம் வெளியிட்டுள்ளது எனத் தெரிகிறது.

இந்த நூல்களில் மூன்று இலக்கண நூல்களும் மிகச் சிறப்பாகக் குறிக்கத்தக்கவை ஆகும். இன்று பரவலாகிவரும் சிற்றிலக்கிய ஆய்விற்கு

இன்றியமையாதன ஆகிய பாட்டியல் இலக்கணமாக இரு நூல்கள் இருப்பதும், நன்னூல் தமிழ்நாட்டிலேயே கிடைக்காமல் கடல்கடந்து சென்று மீண்டு வந்துள்ளது என்பதும் இச்சிறப்பிற்குக் காரணமாகும்.

தமிழ்மொழிக்கே சிறப்புரிமை உடையதாகக் கருதப்படுகின்றதோர் இலக்கியவகை தலபுராணம். அத்தகைய சிறப்பு வாய்ந்த இலக்கியமாகிய தந்திவனப் புராணப் பதிப்பும் சிறப்பாகப் பாராட்டத்தக்க ஒன்றாகும். பிள்ளைத்தமிழ், உலா போன்ற பிற சிற்றிலக்கியங்களின் பதிப்பும் தமிழ்வளர்ச்சிக்கும், ஆய்விற்கும் உறுதுணைபுரியும் என்பது ஒருதலை.

இத்தகைய சுவடிப்பதிப்புகளோடு நின்றுவிடாமல் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் தன்னிடத்தில் உள்ள ஓலைச்சுவடிகளுக்கும் கேரளப் பல்கலைக்கழகக் கீழ்த்திசைச் சுவடி நூலகச் சுவடிகளுக்கும் விவர அட்டவணைகளும் தயாரித்து வெளியிட்டுள்ளது. இத்தகைய அட்டவணைகள் இலக்கிய ஆய்வாளர்களுக்கு எவ்வளவு பயன் தருவன என்பதை அனைவரும் அறிவோம்.

மேலும் சுவடிப்பதிப்புக் கலையை ஒரு பட்டயப் பாடத்திட்டமாக வகுத்துப் பாடம் நடத்திப் பல ஏட்டுச் சுவடிகளை ஆய்வேடுகளாகத் தோற்றுவித்த பெருமையும் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்திற்கு உண்டு. இந்தச் சுவடியியற் பட்டய வகுப்பில் இளைய தலைமுறையினரும் சுவடிகளைப் படித்தல், படியெடுத்தல், பதிப்பித்தல் ஆகிய தமிழ்ப்பணிகளில் தம்மை ஈடுபடுத்திக் கொள்ள நல்ல வாய்ப்புக்கள் ஏற்பட்டுள்ளன. இச்செயல் எண்ணிக்கையில் மிகுதியான சுவடிகள் அச்சேறி வெளி வரவும் உதவியுள்ளது.

இவ்வாறு நேரடியாக வகுப்புகள் நடத்தி ஆய்வாளர்களை உருவாக்கி வருவதோடு, சுவடியியற் கல்விக்கே பாடநூலாகக் கருதும்படிச் சுவடியியல் பயிற்சி - கையேடு *(மு.கோ. இராமன் 1982)*, சுவடியியல் (முனைவர் பூ. சுப்பிரமணியம் *1991)* என்னும் இரண்டு நூல்களை வெளியிட்டுள்ள இந்நிறுவனத்தின் பணியும் நிலைத்த பயனைத் தரவல்லதாகும்.

பொதுவாக உலகத் தமிழாராய்ச்சி நிறுவனப் பதிப்புகள் ஆய்வு முன்னுரை, தேவையான அட்டவணைகள், தெளிவான மூலம் ஆகியவற்றைக் கொண்ட அழகிய புத்தகமாக நியாயமான விலையில் வெளியிடப்படுகின்றன. உலகத்தமிழாராய்ச்சி நிறுவனத்தைப் பற்றி நினைக்கும் போது அதன் தொல்காப்பிய உரைவளப் பதிப்பைப் பற்றி எண்ணாமல் இருக்க முடியாது. தொல்காப்பிய உரைவளம் சுவடிப்பதிப்பாக இல்லாதபோதிலும் தமிழ் மாணவர்களுக்கு மிகவும் பயன்படும் மிகச் சிறந்ததோர் அருமையான பதிப்பு

என்பதைக் குறிப்பிட்டுத்தான் ஆகவேண்டும். பதிப்புப் பார்வையில் நோக்கும்போது, ஒரு நூல் அச்சாகுங்கால் பதிப்பாசிரியரின் நேரடிக் கண்காணிப்பு இல்லாவிட்டால் எவ்வளவு சிறந்த பதிப்பும் அச்சகத்தில் தரம் தாழ்ந்துவிடும் என்பதைக் காட்டத் தொல்காப்பிய உரைவளத்தின் அகத்திணையியல் ஓர் எடுத்துக்காட்டாக அமைந்துவிட்டதைக் கூறாமல் இருக்க முடியாது.

**4. கேரளப் பல்கலைக்கழகக் - கீழ்த்திசைச் சுவடி நூலகம், திருவனந்தபுரம்.**

"*1908*இல் தொடங்கப்பட்ட சமசுகிருதச் சுவடி அலுவலகமும், *1924*இல் தொடங்கப்பட்ட மலையாளச் சுவடி நூலகமும் *1930*இல் ஒன்றாக இணைக்கப்பட்டன. இதுவும் பின் *1937*இல் தோற்றுவிக்கப்பட்ட திருவாங்கூர் பல்கலைக்கழகச் சுவடி நூலகமும் இணைக்கப்பட்டு *1940*இல் இன்றைய கேரளப் பல்கலைக்கழகச் சுவடி நூலகம் உருவாயிற்று".[10] இங்கு ஏறக்குறைய *3500* தமிழ்ச்சுவடிகள் உள்ளன. "தமிழ்ச் சுவடிகளில் பெரும்பாலானவை தமிழகத்தில் தென்மாவட்டங்களிலிருந்தும், திருவாங்கூர் அரண்மனைச் சுவடிகளும், கேரளத்தின் பிற பகுதியிலிருந்தும் கிடைத்த சுவடிகளும் இதில் அடங்கும்."[11]

*1949*ஆம் ஆண்டு ஏ.எஸ். முத்தைய முதலியார் குற்றாலக் கோவையைப் பதிப்பித்தார். இதுவே இந்நூலகத்தின் முதல் நூல். அடுத்ததாக அமைவது பேரா. மு. இராகவையங்கார் பதிப்பித்த அரிச்சந்திர வெண்பா என்பதாகும். *1951*ஆம் ஆண்டு மு. இராகவையங்கார் வெளியிட்ட சேர வேந்தர் செய்யுட்கோவை என்னும் தொகுப்பு நூலில் "திருவனந்தைத் தல விலாசம்", "கணரத்ன மாலை" ஆகிய இரண்டு சுவடி நூல்கள் இடம் பெற்றுள்ளன.

"*1977*ஆம் ஆண்டில் முதுகலை மாணவர்களைக் கொண்டு, வெளியிடப்படாத படைப்புக்களைப் பதிப்பிக்கும் முயற்சி கேரளப் பல்கலைக்கழகத் தமிழ்த்துறையினரால் மீண்டும் மேற்கொள்ளப்பட்டது. தமிழ்த்துறை முதுகலைப் பட்டப்படிப்பின் பொருட்கட்டுரைக்கு எனப் பதிப்பு வேலையை லாரன்ஸ் நாயகம் எனும் மாணவர் ஒருவர் மேற்கொண்டார். கேரளப் பல்கலைக்கழகக் கீழ்த்திசைச் சுவடிக் காப்பகத்திலிருந்து வன்னிராயன் கதை என்னும் கதைப் பாடலொன்று பதிப்பிக்கப்பட்டது. அதுவே தனி நூலாகவும் வெளியிடப்பட்டது."[12] தொடர்ந்து தமிழ்ச்சுவடிப் பெயர்கள் *(1984)*, சிவ சரவணபவமாலை *(1985)*, இராமாயணத் திருப்புகழ் *(1987)* ஆகியவை சுவடிப்பதிப்புகளாக வெளியிடப்பட்டுள்ளன.

எம்.பில். பட்டத்திற்காக அமிருத மதன நாடகம், நித்திய கன்மநெறிக் குறள், பிரம சக்தியம்மன் கதை, மூவரசர் நாடகம் ஆகிய சுவடி நூல்களும், ஒடி முறிவு சர சூத்திரம் *(1988)* பாரதம் மாவிந்தம் *(1989)*, மாறன் அகப்பொருள் *(1991)* ஆகியன முனைவர் பட்டத்திற்காகவும் ஆய்வேடுகளாக அளிக்கப்பட்டுள்ளதாகத் தெரிகிறது.

"இவை போக, சூடாமணி நிகண்டு, பிங்கலந்தை, யாப்பருங்கலம், யாப்பருங்கலக் காரிகை, வீரசோழியம், மதுரை வீரன் கதை முதலிய நூல்களை ஆராய்ந்து செம்பதிப்புக் கொணரும் முயற்சியில் ஆய்வாளர்களும் ஆசிரியர்களும் ஈடுபட்டுள்ளனர். இவற்றில் சில முன்பு வெளிவந்த நூல்களுக்குச் செம்பதிப்பு முயற்சியாகவும், சில புதிய பதிப்பு முயற்சியாகவும் அமைகின்றன."[13] என்கிறார் கி. நாச்சிமுத்து.

இவற்றைத் தவிர அரிப்பாட்டு, சுப்பிரமணிய சுவாமி பேரில் தாலாட்டு *(1986)*, ஸ்ரீகண்டேசர் மீது கும்மி *(1986)*, உபமான சங்கிரகம் *(1988)*, எண்ணெய்ப்பாட்டு *(1990)*, சனி எண்ணெய்ப்பாட்டு *(1990)*, இராமாயணம் குறத்திப்பாட்டு *(1990)*, பத்மநாப சுவாமி மகாரவண்ணம் *(1991)*, நாசிகேது புராணம் *(1994)* ஆகிய சுவடி நூல்கள் முனைவர் ப. பத்மநாபன் தம்பி அவர்களால் கேரளப் பல்கலைக்கழகச் சுவடிப்புலத்தின் ஆண்டிதழாகிய ப்ராசீன கைரளியில் மலையாள எழுத்தில் வெளியிடப்பட்டுள்ளன.

திரு.மு.கோ. இராமன் அவர்களின் முயற்சியால் சென்னை உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் இந்தச் சுவடி நூலகத்தின் தமிழ்ச் சுவடிகளுக்குப் பட்டியல் இடும் பணியை மேற்கொண்டது. *1983*ஆம் ஆண்டில் செல்வி நிர்மலாதேவியால் திருவனந்தபுரம் கேரளப் பல்கலைக்கழகத் தமிழ்ச்சுவடிகள் அட்டவணை என்னும் பட்டியல் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தின் வழி வெளியிடப்பட்டது. இதில் *1091* சுவடிகளுக்குரிய விவரங்கள் உள்ளன. கேரளச் சுவடி நூலகம் *1984*ஆம் ஆண்டில் தமிழ்ச்சுவடிப் பெயர்கள் என்னும் பட்டியலை வெளியிட்டது. இதில் *3341* சுவடிகளின் பெயர்களும் இனமும் (எவ்வகை இலக்கியம் என்பது) இடம் பெற்றுள்ளன (இந்தத் தமிழ்ச்சுவடிப் பெயர்கள் என்னும் பதிப்பைத் தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக்கழகத்தின் காலாண்டிதழாகிய தமிழ்க்கலையின் தமிழ் *2*. கலை-*4*இல் *(1984* திசம்பர்*)* அறிமுகப் படுத்தியுள்ளேன்).

இரா. நிர்மலாதேவியின் அட்டவணையில், "தற்பொழுது முதல் தொகுதியாக வெளிவரும் இதனைத் தொடர்ந்து இரண்டாம் மூன்றாம் தொகுதிகளும் வெளியாக உள்ளன. இறுதியில் அனைத்துச் சுவடிகளின் விவர அட்டவணையையும், முழுவிளக்கங்களுடன் பதிப்பிக்கவும் முயற்சி நடந்து கொண்டிருக்கின்றது"[14] என்று கூறப்பட்டுள்ளது.

ஆனால் கேரளப் பல்கலைக்கழகக் கீழ்த்திசைச் சுவடி நூலகமே *1984*இல் அங்குள்ள *3341* தமிழ்ச்சுவடிகளின் பட்டியலையும் வெளியிட்டு விட்டதால் இந்த முன்னுரையில் கூறப்பட்டுள்ளபடி இதன் இரண்டாம் மூன்றாம் தொகுதிகள் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தால் வெளியிடப்படவில்லை போலும். விளக்க அட்டவணை வெளிவராததால் இரா. நிர்மலா தேவி *1994*இல் விளக்க அட்டவணையின் முதல் தொகுதியை உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தின் வழி வெளியிட்டுள்ளார். அடுத்த தொகுதிகள் வெளிவந்ததாகத் தெரியவில்லை.

கால வெள்ளத்தின் போக்கால் இன்று மொழிபெயர் தேயமாக மாறியுள்ள கேரள நன்னாட்டில் அமைந்துள்ளதோர் ஆய்வு நிறுவனமாகிய கேரளப் பல்கலைக்கழகக் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகம் சுவடியியலுக்குச் செய்துவரும் சேவை மிகவும் போற்றத்தக்கதாகும்.

## 5. சரசுவதி மகால் நூலகம், தஞ்சாவூர்

தமிழ்நாட்டில் உள்ள - ஏன் இந்தியத் திருநாட்டில் உள்ள - சுவடி நூலகங்களிலேயே மிகப் பழமையானது என்னும் சிறப்பிற்குரியது தஞ்சாவூர் மன்னர் சரபோஜி சரசுவதி மகால் நூல் நிலையம் ஆகும். பிற்காலச் சோழ மன்னர்கள் காலத்திலேயே இந்நூலகம் தோற்றுவிக்கப்பெற்றது என்று கூறப்பட்டாலும் இதன் முறையான வரலாறு தஞ்சை நாயக்க மன்னர்களின் ஆட்சிக் காலத்திலிருந்துதான் *(1535 - 1673)* தொடங்குகிறது எனலாம். நாயக்கர்களை அடுத்துத் தஞ்சை அரசுக்கட்டில் ஏறிய மராத்திய மன்னர்களும் இந்த நூலகத்தைப் பேணி வந்தனர்.

என்றாலும், சரசுவதி மகால் நூலகம் உலகப்புகழ் பெற்ற நிறுவனமாகப் பெயரீட்டியதற்கான முழுமுதற் காரணர் இரண்டாம் சரபோஜியே *(1798 - 1832)* ஆவார். இந்த நூலகத்திற்கு இதனாலேயே இவர் பெயர் சூட்டப்பட்டுள்ளது. பலமொழிகளிலும் உள்ள சுவடிகளைத் திரட்டுதல், கிடைக்காத நூல்களுக்குக் கையெழுத்துப்படி எழுதிச் சேர்த்தல், மேல்நாட்டு அச்சு நூல்களையும் தொகுத்தல், உள்ளனவற்றிற்குப் பட்டியலிடுதல் எனப் பலவகையான சுவடிப்பணிகளுக்கும் கால்கோளிட்டவர் மன்னர் சரபோஜியே.

இப்பொழுது இந்நூலகத்தில் *3672* தமிழ்ச்சுவடிகள் உள்ளன. இவற்றுள் ஏறத்தாழ *2500* நூல்களுக்கு *13* தொகுதிகளாகச் சுவடிவிவர அட்டவணை வெளியிடப்பட்டுள்ளது.[15] "*1918*ஆம் ஆண்டிலிருந்து இந்நூலகத்தைத் தமிழக அரசு தன் பொறுப்பில் எடுத்துக் கொண்டாலும் *1948*ஆம் ஆண்டிலிருந்துதான் அரிய சுவடிகளை அச்சிட்டு வெளியிடும் திட்டம் செயற்பட்டு வருகிறது."[16]

தஞ்சை சரசுவதி மகால் நூலகம் *1950*முதல் *1979*வரை வெளியிட்ட *48* சுவடிப்பதிப்புகளைக் கட்டுரையொன்றில் அறிமுகம் செய்துள்ளேன்.[17] அவற்றுள் இலக்கண இலக்கியப் பதிப்புகள் மட்டுமே இடம் பெற்றுள்ளன; மருத்துவம் முதலிய பிறதுறைச் சுவடிப் பதிப்புகள் நோக்கப்படவில்லை.

இராமையன் அம்மானை *(1950)*, திருப்பெருந்துறை சிவயோக நாயகி பிள்ளைத்தமிழ் முதலிய மூன்று பிள்ளைத் தமிழ் நூல்கள் *(1950)* பெருந் தேவனார் பாரதம் மாவிந்தம் *(1950)*, மூன்று தமிழ் நாடகங்கள் *(1950)*, திருச்சிற்றம்பலக் கோவையார் ஓர் உரையுடன் *(1951)*, திருவாய்மொழி வாசகமாலை *(1952)*, நம்மாழ்வார் திருத்தாலாட்டு *(1952)*, நாலடியார் உரைவளம் - இரு பாகங்கள் *(1953)*, வள்ளலார் பிரபந்தங்கள் *(1959)*, திருச்சோற்றுத்துறைத் தலபுராணம் *(1960)*, கூர்மபுராணம் - பூர்வகாண்டம் *(1961)*, தஞ்சை வெள்ளைப் பிள்ளையார் குறவஞ்சி *(1961)*, ஞானசாரம் *(1962)*, தொல்காப்பியம் - சொல் - நச்சர் *(1962)*, நம்பி அகப்பொருள் *(1962)*, கூர்ம புராணம் - உத்தர காண்டம் *(1963)*, தத்துவ விளக்கம் (உரைநடை. *1963)*, திருநெறி விளக்கம் உரையுடன் *(1963)*, திருஞானசம்பந்தர் பிள்ளைத்தமிழ் *(1966)*, அருணகிரியந்தாதி *(1967)*, தனிப்பாடல் திரட்டு - முதல் பகுதி *(1967)*, தொல்காப்பியம் - எழுத்து - நச்சர் *(1967)*, புல்லையந்தாதி *(1967)*, குடந்தையந்தாதி *(1968)*, மருதூரந்தாதி *(1968)*, கமலாலய அம்மன் பிள்ளைத்தமிழ் *(1969)*, செண்டலங்காரன் விறலிவிடு தூது *(1969)*, தனிப்பாடல் திரட்டு - பாகம். *2 (1969)*, வண்ணத்திரட்டு *(1969)*, சிவஞான தீபம் *(1970)*, இலக்கண விளக்கம் பொருள் - அகத்திணையியல் - இரு தொகுதிகள் *(1972)*, சரபபுராணம் *(1972)*, இலக்கணக்கொத்து *(1973)*, இலக்கணவிளக்கம் - பொருள் அணியியல் *(1973)*, பிரயோக விவேகம் *(1973)*, இலக்கண விளக்கம் - பாட்டியல் *(1974)*, இலக்கண விளக்கம் - பொருள் - செய்யுளியல் *(1974)*, குலோத்துங்கன் பிள்ளைத் தமிழ் *(1974)*, ஞானக் குறவஞ்சி *(1974)*, ஆசிரிய நிகண்டு *(1975)*, கஞ்சனம்மானை *(1976)*, திருப்பெருந்துறைப் புராணம் *(19762)*, ஆத்திசூடிப் புராணம் *(1977)*, சிவப்பிரகாச விகாசம் *(1977)*, திருநல்லூரர்ப் புராணம் *(1979)*, வீரையன் அம்மானை என்பன சரசுவதி மகால் முதல் முப்பது ஆண்டுகளில் வெளியிட்ட *48* இலக்கியச் சுவடிப் பதிப்புகள் ஆகும்.

இவற்றுள் இராமையன் அம்மானை, பெருந்தேவனார் பாரதம் - மாவிந்தம், நாலடியார் உரைவளம், கூர்மபுராணம், தொல்காப்பியம் எழுத்து, சொல். நச்சர், நம்பியகப்பொருள், தத்துவ விளக்கம், தனிப்பாடல் திரட்டு இரு தொகுதிகள், மருதூரந்தாதி, சிவஞான தீபம், இலக்கண விளக்கப் பதிப்புகள் இலக்கணக் கொத்து, பிரயோக விவேகம், ஆசிரிய நிகண்டு,

திருப்பெருந்துறைப் புராணம், சிவப்பிரகாச விகாசம், திருநல்லூர்ப்புராணம், வீரையன் அம்மானை ஆகியன சரசுவதி மகால் நூலகத்திற்குப் பெருமை சேர்க்கும் அருமையான சுவடிப் பதிப்புகள் ஆகும்.

ஐந்து தமிழிசை நாட்டிய நாடகங்கள் *(1980)*, இராமர் அம்மானை *(1981)*, சீவக சிந்தாமணி அம்மானை *(1981)*, ததீசிப் புராணம் *(1983)*, குசலவன் கதை *(1983)*, பரசமய கோளரியார் பிள்ளைத்தமிழ் *(1985)*, சோமயாகப் பெருங்காவியம் *(1985)*, தருமநெறி நீதிகள் *(1985)*, நாராயண சதகம் *(1985)*, காமாட்சி தவசு *(1985)*, நாசிகேது புராணம் *(1985)*, அருணாசலர் மீது வண்ணம் *(1985)*, வீராகமம், அதிரூபவதி கலியாணம் *(1985)*, நீதிநூல் *(1985)*, அரிச்சந்திர நாடகம் *(1985)*, தமிழிசைப் பாடல்களும் நாட்டியப் பதங்களும் *(1985)*, திருக்குறள் பழைய உரை *(1986)*, சிறுத்தொண்டர் நாடகம் *(1986)*, அருணாசல புராணம் *(1986)*, வடிவேல் சதகம் *(1986)*, சித்திரபுத்திரர் அம்மானை *(1986)*, அதிரியர் அம்மானை *(1986)*, நளச்சக்கரவர்த்தி கதை *(1986)*, துரோபதை அம்மானை *(1986)*, மாலைத் தொகுப்பு *(1986)* என்பன தொடர்ந்து வந்த இலக்கியச் சுவடிப்பதிப்புகள் ஆகும். இக்காலக்கட்டத்தில் நாட்டார் கதைப்பாடல்களாகிய அம்மானைகளும், இசை நாட்டிய நூல்களும் அதிகமாக இடம் பெற்றிருப்பது குறிப்பிடத்தக்கது.

ஆசிரிய நிகண்டு இரண்டாம் தொகுதி *(1988)*, தொல்காப்பியம் - சொல் - ஆத்ரேயர் உரை *(1989)*, ஆலம்நபி கதைப்பாட்டு *(1989)*, திருவையாற்றுப் புாணம் *(1991)*, திருவேட்டை நல்லூர் ஐயனார் பள்ளு *(1992)*, நாகைக் கனகசபை நாதன் உலா *(1995)*, திருவாப்பனூர்ப் புராணம் *(1998)*, சிதம்பரச் செய்யுட்கோவை *(1999)*, யாப்பருங்கல மூலம் *(2000)*, எனச் சரசுவதி மகாலின் பதிப்புப்பணி தொடர்ந்து கொண்டே போகிறது. பார்சுவ நாதர் அம்மானை, சங்கற்ப நிராகரணம், இராம நாடகக் கீர்த்தனைகள் சிவகாமசுந்தரி பரிணய நாடகம், பெரிய புராண வசன காவியம், பாரத அம்மானை, காஞ்சி மன்னன் அம்மானை, பதார்த்த சாரம், இராஜகோபால மாலை, சிவபாரத சரிதம், சித்தாந்த நிச்சயம், திருநெறி விளக்கம், வைத்தியநாத சுவாமி திருவிளையாடல், குமரேச சதகம் ஆகிய நூல்களின் பதிப்பு ஆண்டு அறிய இயலவில்லை.

இங்குக் குறிப்பிடப்பெற்றுள்ள நூல்களில் "புலவர் வீ. சொக்கலிங்கம் அவர்களால் பதிப்பிக்கப் பெற்ற ஆசிரிய நிகண்டும் ஒரு சிறந்த ஆராய்ச்சிப் பதிப்பு நூலாகத் திகழ்கிறது. பிற நிகண்டுகளோடு ஒப்புநோக்கி ஒப்புமை காட்டப் பெற்றும், விரிவான ஆய்வு முகவுரை அளிக்கப்பெற்றும், பெயரடைவு அகர நிரல்கள் அமைக்கப்பெற்றும் இப்பதிப்பு விளங்குகின்றது."[18]

திருவேட்டைநல்லூர் ஐயனார் பள்ளு (பதிப்பு: ப.வே. நாகராஜன்) ஒரே சுவடியை வைத்துக் கொண்டு பதிப்பிக்கப் பெற்றதாகும். "இந்நூலின் பதிப்புரை குறிப்பிடத்தக்கது. பள்ளு என்னும் இலக்கிய வகையின் தோற்றம் மற்றும் இதன் கூறுகள் பழந்தமிழ் இலக்கிய இலக்கண நூல்களில் இருப்பதாகக் கூறப்படும் பல்வேறு கருத்துக்களை முன்வைத்து வாதிட்டு இச்சிற்றிலக்கிய வகை கிபி. 16ஆம் நூற்றாண்டு வாக்கில் தமிழில் தோன்றியது என்று நிறுவப்படுகிறது.[19] என்பார் ஆர் கௌசல்யா. நாகைக் கனகசபைநாதர் உலா என்பது உலா வாய்பாட்டில் அமைந்துள்ளதொரு தத்துவ நூலாகும். இதில் வரும் பேரிளம் பெண்ணாகிய சமயசயவல்லி மற்ற சமயவாதிகளை வாதில் வென்று சைவ சித்தாந்தத்தின் மேன்மையை நிலைநிறுத்துபவளாகச் சித்திரிக்கப்பட்டுள்ளார். இந்நூல் விளக்கமான உரையுடனும், போதுமான மேற்கோள்களுடனும் பதிப்பிக்கப்பட்டுள்ளது.

சரசுவதி மகாலின் சுவடிப்பதிப்புகளைப் பற்றிப் புலவர் வீ.சொக்கலிங்கம், "சிறுசிறு நூல்களாக இருப்பவைகளைப் பருவ இதழில் கொஞ்சம் கொஞ்சமாக வெளியிட்டு நூலாக்கும் வழக்கம் இருக்கிறது."[20] என்றும், ''சரசுவதி மகால் வெளியீடுகள் வியாபார முறையில் பதிப்பிக்கப்படுபவை அல்ல. அரசுப் பொருளுதவியுடன் அடக்க விலையில் வெளியிடப்படுபவை. மக்கள் படித்துப் பயன் பெறவேண்டும் என்ற உயர் நோக்குடன் அச்சிடப்படுகின்றன."[21] என்றும் கூறுகிறார்.

பொதுவாகச் சரசுவதி மகால் நூலகச் சுவடிப் பதிப்புகளை நோக்கும்போது அந்நிறுவனத்திற்கெனத் தனியான பதிப்புக்கொள்கை எதுவும் இல்லை என்றும், பதிப்புகள் அவற்றின் பதிப்பாசிரியர்களுக்கு ஏற்ப அமைகின்றன என்றும் புலனாகிறது.

## 6. சிரவை ஆதீனம் (கௌமார மடாலயம், சின்னவேடம்பட்டி, கோயமுத்தூர்)

சிரவையாதீனக் கௌமார மடாலயம் வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகளின் சீடராகிய தவத்தரு. இராமானந்த அடிகளாரால் 1908ஆம் ஆண்டு தோற்றுவிக்கப்பெற்றது. இவர் பல நூல்களை இயற்றியுள்ளார். அவை யாவும் இராமானந்தத்திரட்டு என்னும் பெயரில் அச்சாகி உள்ளன. இவரை அடுத்து இவ்வாதீனத் தலைமை ஏற்ற தவத்திரு கந்தசாமி சுவாமிகள் பெரும் கவிஞர்; ஏறத்தாழ பதினையாயிரம் செய்யுள்களுக்குமேல் இயற்றியவர். இவற்றுள் மிகப் பெரும்பாலானவை அச்சாகியுள்ளன. இவரையடுத்து மூன்றாவது சந்நிதானமாக விளங்கிய தவத்திரு கஜபூஜைச் சுந்தர சுவாமிகளும் ஏறக்குறைய 700 கவிகளை இயற்றியுள்ளார். இவையும் அச்சாகியுள்ளன.

ஆனால் மேற்கூறிய நூற்பதிப்புகள் அனைத்தும் காகிதப் படிகளின் அடிப்படையில் அமைந்தவை. எனவே அவற்றைப் பற்றிய செய்திகள் இங்கு இடம்பெற வாய்ப்பில்லை.

சிரவையாதீனம் தன் ஆதி குருமுதல்வராகிய வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகளின் நூல்களைப் பரப்புவதிலும் பேரூக்கம் கொண்டு உழைத்து வருகிறது. அதனால் வாய்ப்புக் கிட்டும் போதெல்லாம் அவருடைய நூல்களை வெளியிட்டு வருகிறது. வண்ணச்சரபம் சுவாமிகளின் நூல்கள் எல்லாம் அவராலேயே சொந்தக் கையெழுத்தால் எழுதப்பட்டு (இப்போது மேற்கொண்டுள்ள ஆழமான ஆய்வின் பயனாகச் சில சுவடிகள் வேறு கையயெழுத்தாக இருக்குமோ என்ற ஐயமுறுகின்றேன்.) திருவாமாத்தூர்க் கௌமார மடாலயத்தில் போற்றிப் பாதுகாக்கப் பெற்றன. அவை யாவும் சிறப்பாகப் பாதுகாக்கப்படுவதற்காகவும், அனைத்திற்கும் சுவடி பெயர்த்தெழுதப்பெற்ற காகிதக் கையெழுத்துப்படிகள் தாயரிப்பதற்காகவும், நல்ல பதிப்புகளாக வெளியிடப்படுவதற்காகவும் சிரவையாதீனத்திற்குக் கொண்டுவரப்பெற்று அப்பணிகள் சிறப்பாக நடைபெற்று வருகின்றன. சின்னவேடன்பட்டி திரு. ஆர். கிருஷ்ணன் தொடர்ந்து தண்டபாணி சுவாமிகளின் நூல்களைச் சுவடியிலிருந்து அச்சுக்கேற்றபடி பெயர்த்தெழுதி வருகிறார்.

சிரவையாதீனம் பதிப்பித்து வெளியிட்ட தண்டபாணி சுவாமிகளின் நூல்கள் மட்டுமே ஓலைச்சுவடிப் பதிப்பாதலின் அவை இங்கு ஆய்விற்கு எடுத்துக் கொள்ளப் பெறுகின்றன. முதலில் அத்தகைய சுவடிப் பதிப்புகளின் பட்டியலைப் பார்ப்போம்.

| எண். | நூற்பெயர். | ஆண்டு. |
|---|---|---|
| 1. | மழைப்பதிகம் | 1952 |
| 2. | கௌமார முறைமை | 1964 |
| 3. | முருகன் திருவிளையாடற் கலிவெண்பா | 1964 |
| 4. | மநுநெறித் திருநூல் | 1964 |
| 5. | இருவர் இரட்டைமணிமாலை | 1965 |
| 6. | தியானாநுபூதி மூலமும் உரையும் | 1965 |
| 7. | குருபரதத்துவம் | 1966 |
| 8. | சதகஉந்தி | 1978 |
| 9. | பதிகஉந்தி | 1978 |
| 10. | ஞான அந்தாதி | 1978 |

| | | |
|---|---|---|
| *11.* | திருமலை முருகன் பதிகம் - *1* | *1984* |
| *12.* | பேரொலியலந்தாதி | *1985* |
| *13.* | திருமலை முருகன் பதிகம் - *2* | *1987* |
| *14.* | அரசாட்சி | *1988* |
| *15.* | திருவாமாத்தூர்ப் பதிகச் சதகம் | *1998* |
| *16.* | கௌமார நூல் | *2000* |

இந்தப் பதிப்புகள் எல்லாம் தமிழ் இலக்கிய ஆய்வாளர்களுக்கு இதுவரையில் முறையாகத் தெரியப்படுத்தப்படவில்லையாதலின் இங்கு இவை மிகச் சுருக்கமாக அறிமுகப்படுத்தப்படுகின்றன.

1. **மழைப்பதிகம்:** *1952* அக்டோபர், நவம்பர் மாதங்களில் கோவைப் பகுதியில் மழை பொய்த்துப்போக, வண்ணச்சரபரின் நெல்லை மழைப்பதிகத்தை ஒரு தனித்தாளில் அச்சிட்டுக் கௌமாரமடாலயம் இறை அன்பர்களுக்கு *27.11.52* அன்று வழங்கிப் பாராயணம் செய்யுமாறு அறிவுறுத்தியது. காப்பு வெண்பா ஒன்றும், கொச்சகக் கலிப்பாக்கள் பன்னிரண்டும் ஆகப் பதின்மூன்று செய்யுள்களோடு இப்பதிகமும், இரு தனி வெண்பாக்களும் ஒரு தனித்தாளில் அச்சடிக்கப்பட்டு விநியோகிக்கப்பெற்றது. (இத்துடன் இதே ஆசிரியரின் மற்றொரு மழைப்பதிகத்தையும் சேர்த்துத் திருவாமாத்தூர்க் கௌமார சபை *1965*இல் வெளியிட்டது. இந்த இரு பதிகங்கள், இதே சுவாமிகளின் மழைவேண்டு கீர்த்தனைகள், இவை தொடர்பான தனிப்பாடல்கள் ஆகிய அனைத்தையும் திரட்டி இந்தச் சொற்பொழிவாளனின் பதிப்பில் கோவை காமாட்சிபுரி ஆதீன கர்த்தர் தவத்திரு. சிவலிங்கேஸ்வர சுவாமிகள் *1998*இல் வெளியிட்டுள்ளார்.)

2. **கௌமார முறைமை:** வண்ணச்சரபரின் சாத்திர நூல்களில் ஒன்றாகிய இது கருமம், பக்தி, ஞானம் என்னும் மூன்று காண்டங்களாக முந்நூறு விருத்தங்களை உடையது. திருவாமாத்தூர் தி.செ. முருகதாச ஐயா அவர்கள் ஏடு பெயர்த்தெழுதிக் குறிப்புரையோடு பதிப்பித்துள்ளார். இந்நூல் தவத்திரு. சுந்தரசுவாமிகளின் பட்டாபிஷேக நினைவு மலராக *1964*ஆம் ஆண்டில் வெளியிடப்பட்டது.

3. **முருகன் திருவிளையாடற் கலிவெண்பா:** மதுரைத் திருவிளையாடற் கலிவெண்பாவை அடியொற்றிக் காப்பு வெண்பா ஒன்று, நூலாக *153* கண்ணிகளாலான கலிவெண்பா ஒன்று, நூலை ஏற்க வேண்டு வெண்பா ஒன்று என அமைந்த இச்சிறுநூல் *1964*ஆம் ஆண்டில் தி.செ. முருகதாச ஐயா அவர்களால் பதிப்பிக்கப்பெற்றது.

4. **மநுநெறித் திருநூல்:** திருக்குறளை அடியொற்றி அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நான்கு பெரும் பிரிவுகளில் அதிகாரத்திற்கு *10* குறளாக *130* அதிகாரங்களில் மொத்தம் *1300* குறள்வெண்பாக்களால் இயன்றது இந்நூல். திரு. முருகதாச ஐயா அவர்களே இதன் பதிப்பாசிரியர் எனலாம். இந்நூல் *9-10-1964* அன்று வெளியிடப்பட்டது.

5. **இருவர் இரட்டைமணிமாலை:** சுந்தரமூர்த்தி நாயனாரைப் போற்றும் வெண்பா ஒன்றும், சேரமான் பெருமாள் நாயனாரைப் போற்றும் கட்டளைக்கலித்துறை ஒன்றுமாக *20* செய்யுள்கள் அந்தாதியாக அமைந்தது இருவர் இரட்டைமணிமாலை என்னும் இச்சிற்றிலக்கியம் காப்பும் நூற்பயனும் நூலுக்குப் புறமாக உள்ளன. இது *4-8-1965* அன்று சுந்தரர் குருபூஜையை ஒட்டி வெளியிடப்பட்டது.

6. **தியானாநுபூதி மூலமும் உரையும்:** இதுவும் வண்ணச்சரபரின் சாத்திர நூல்களுள் ஒன்று. நூலாசிரியரின் மைந்தர் செந்தினாயக சுவாமிகள் இதற்கு உரை வகுத்துள்ளார். மூலநூலின் ஏட்டுச் சுவடியும் உரையாசிரியரின் காகிதச் சுவடியும் இதற்கு ஆதாரமாக அமைய தி.செ. முருகதாச ஐயா பதிப்பித்துள்ளார். சிரவை இரண்டாவது குருமகாசந்நிதானம் தவத்திரு. கந்தசாமி சுவாமிகளின் *17* ஆவது குருபூசை நினைவு வெளியீடாக இந்தச் சாத்திர நூல் *1965* திசம்பர் மாதத்தில் வெளியிடப்பட்டது.

> **"பாட்டுமட்டும் முன்பு பதிப்பா கியுந்தீர்ந்த;**
> **கேட்டுவந்தார் கொண்டு கிளர்ச்சிஉறக் - கூட்டும்உரை**
> **சேர்த்துப் பதித்துச் சிறக்க வெளியிட்டான்**
> **சீர்த்தபொருள் கொண்டு தெரிந்து"**

என்னும் இந்நூற் பதிப்புப் பாயிர வெண்பாவால் தியானாநுபூதி மூலம் மட்டும் இதற்கு முன்பே பதிப்பிக்கப் பெற்றிருந்ததாக அறிகிறோம். (மீண்டும் *1981* ஜூன் மாதம் வித்வான் சோமசுந்தரம்பிள்ளையின் நினைவு மலராக அவர் மைந்தர் டாக்டர். எஸ். முருகன் அவர்களால் மூலம் மட்டும் வெளியிடப்பட்டுள்ளது.)

7. **குருபர தத்துவம்:** வண்ணச்சரபம் சுவாமிகளின் தன் வரலாறாக அமைந்துள்ள இக்காப்பியம் *1244* விருத்தங்களாலானது ஆகும். சிரவையாதீனம் தண்டபாணிமூர்த்தி திருக்கோயில் கும்பாபிடேக விழா *1.6.1966* அன்று நடைபெற்றதன் நினைவாக இந்நூல் வெளியிடப்பட்டுள்ளது. இக்காப்பியத்தின் பதிப்பாசிரியரும் தி.செ. முருகதாச ஐயா அவர்களே.

**8. சதக உந்தி, 9. பதிக உந்தி, 10. ஞான அந்தாதி:**

தி.செ. முருகதாச ஐயா அவர்களால் பெயர்த்தெழுதப்பெற்ற கையெழுத்துப்படியைப் பார்த்துச் சின்னவேடன்பட்டி திரு. கிருஷ்ணன் அவர்கள் வண்ணச்சரபம் சுவாமிகளின் பல நூல்களைக் காகிதப்படிகளாகக் குறிப்பேடுகளில் (Note Books) எழுதி வைத்துள்ளார். அவற்றைப் பார்த்து இச்சொற்பொழிவாளனாலும் அவை படியெடுத்து வைக்கப்பட்டுள்ளன. அந்த மூன்றாவது படியின் அடிப்படையில் மேற்கண்ட மூன்று சாத்திர நூல்களும் தவத்திரு. சுந்தரசுவாமிகளின் பொன்விழா மலரில் *29-11-1978* அன்று இச்சொற்பொழிவாளனால் சேர்க்கப் பெற்றன.

இவற்றுள் சதக உந்தி திருஉந்தியாரை அடியொற்றிய நூறு செய்யுள்களையும், காப்பு வெண்பா ஒன்று, நூற்பயன் கலிவிருத்தம் ஒன்று என இருபாடல்களுமாக மொத்தம் *102* கவிகளாலானது. அவ்வாறே பதிக உந்தியும் காப்பு வெண்பா ஒன்று, உந்திப்பாடல்கள் பதினொன்று நூற்பயன் கலிவிருத்தம் ஒன்று எனப் பதினான்கு செய்யுள்களை உடையது. ஞான அந்தாதி காப்பு வெண்பா ஒன்று, நூலாகக் கட்டளைக் கலித்துறைகள் முப்பது, நூற்பயன் கலிவிருத்தம் ஒன்று எனக் கூடுதல் *32* பாடல்களைக் கொண்டது. இவை மூன்றும் வண்ணச்சரபர் காட்டும் கௌமார சமயத்தின் சாத்திர நூல்களே.

*11.* **திருமலை முருகப்பெருமான் பதிகம்** - *1:* நெல்லை மாவட்டம் குற்றாலத்தை அடுத்துள்ள பண்பொழில் என்னும் ஊருக்கருகே உள்ள திருமலை என்ற அழகுமலையில் எழுந்தருளியுள்ள முருகக் கடவுளைப் போற்றும் ஒரு பதிகம் இது. காப்பும் நூலுமாகப் பதின்மூன்று செய்யுள்களைப் பெற்ற இந்நூல் *1984*இல் வெளியாயிற்று.

12. **பேரொலியலந்தாதி:** பாட்டியல் நூல்களில் பெயரளவில் கூறப்பெற்று அதிகமான இலக்கியங்கள் கிடைக்கப்பெறாத சிற்றிலக்கிய வகைகளுள் இது ஒன்று. இப்பிரபந்தம் *64* கலைகளை உடைய முப்பது வண்ணப்பாடல்களாலானது. நூலுக்குப் புறம்பாகப் பாயிரம் என மூன்று செய்யுள்களும் நூல் மாட்சி என ஒன்றுமாக நான்கு கவிகள் உள. இவை அனைத்திற்கும் சுருக்கமான குறிப்புரை எழுதிப் பதிப்பித்துள்ளவர் தி.செ. முருகதாச ஐயா. இது சிரவையாதீனம் தண்டபாணிக் கடவுள் திருக்கோயிலில் *2-9-1985* அன்று நிகழ்ந்த திருக்குட முழுக்கின் நினைவு மலராக வெளியிடப்பெற்றது.

13. **திருமலை முருகப் பெருமான் பதிகம்** - *2:* மேலே தொடர் எண் *11*இல் கூறப்பட்டிருப்பதைப் போன்றே மற்றொரு பதிகமான இது *1987* இல் வெளியிடப்பெற்றது.

**14. அரசாட்சி:** ஓர் அரசு எவ்வாறு இருக்க வேண்டும் என்பதை *100* வெண்பாக்களினால் கூறுவது வண்ணச்சரபம் சுவாமிகளின் அரசாட்சி என்னும் நூல். இதற்குச் சோழவந்தான் கந்தசாமி சுவாமிகள் பதவுரை, கருத்துரை, விசேட உரை என விரிவாக உரை கண்டுள்ளார். சிரவணபுரம் கௌமாரமடாலயம் தவத்திரு. தம்பி சுவாமிகள் என வழங்கப்படும் மருதாசல சுவாமிகள் முதல் *50* வெண்பாக்களுக்குப் பழைய உரையைத் தழுவிச் சுருக்கமாகப் பொழிப்புரை எழுதியுள்ளார். இந்த உரையோடு கூடிய *50* பாடல்கள் மட்டும் சிரவணபுரம் கௌமார சபையின் *70*ஆம் உரையோ நூலின் பிற்பகுதியோ இன்றுவரை அச்சானதாகத் தெரியவில்லை.

**15. திருவாமாத்தூர்ப் பதிகச் சதகம்:** திருவாமாத்தூரின் அழகிய நாதரைப் போற்றும் நூறு பதிகங்களின் தொகுப்பாக அமைந்த ஒரு தனிநூல் ஆகும் இந்தப் பதிகச் சதகம். பாயிரம் *5* கவிகள், நூல் *1000* செய்யுள்கள், நூற்பயன் ஒருபா என *1006* பாடல்களால் இயன்றது இந்நூல்.

வண்ணச்சரபரின் நூறாவது நினைவு நாளையொட்டிச் சிரவணபுரம் கௌமார மடாலயமும், தஞ்சைத் தமிழ்ப்பல்கலைக்கழகத்தின் ஓலைச்சுவடித் துறையும் இணைந்து *19, 20, 21-6-1998* ஆகிய மூன்று நாள்கள் கௌமார மடாலயத்தில் கருத்தரங்கம் ஒன்றை மிகச் சிறப்புற நடத்தின. அப்பொழுது பல நூல்கள் வெளியாயின. அவற்றுள் குறிப்பிடத்தக்க ஒன்று திருவாமாத்தூர்ப் பதிகச் சதகம்.

சின்னவேடன்பட்டி ஆர். கிருஷ்ணன் அவர்கள் நூல் முழுவதையும் ஓலைச்சுவடியிலிருந்து பெயர்த்தெழுதிக் கொடுத்தார். ஓரளவு விளக்கமான பதிப்புரை, அருஞ்சொற்பொருள், செய்யுள் முதற்குறிப்பகராதி முதலியவற்றுடன் யான் பதிப்பித்த இந்நூலில் இடம்பெற்றுள்ள "திருவாமாத்தூர்ப் பதிகச் சதக யாப்பமைதி" என்னும் கட்டுரை தமிழ் ஆய்வாளர்களுக்கு மிகப் பயனுடையதாகும்.

**16. கௌமார நூல்:** இது சாத்திர நூல்களில் ஒன்று. பாயிரமாகக் கலிவிருத்தம் ஒன்று, நூலாகப் பத்து எண்சீர் விருத்தங்கள், நூற்பயன் கலிவிருத்தம் ஒன்று என *12* செய்யுட்களால் ஆன இது மிகச்சிறிய முன்னுரை, குறிப்புரைகளுடன் *24, 25-12-2000* ஆகிய தேதிகளில் ஈரோட்டில் மிகச்சிறப்பாக நடைபெற்ற முருகபக்தர்கள் பேரவையின் சிறப்பு மலரில் வெளியிட்டுள்ளேன்.

சிரவையாதீனத்தின் சுவடிப்பதிப்புகள் பெரும்பாலும் குறிப்பிட்ட நிகழ்ச்சிகளின் நினைவு மலர்களாக உருவெடுக்கின்றன. எனவே, இலக்கியப் பதிப்பு நெறி முறைகளுக்கேற்பத் திட்டமிட்டு முறையாகப் பதிப்பிப்பதற்கான

வாய்ப்புக்கள் குறைவு. இத்தகைய நூல்களில் பதிப்பு நெறிமுறைகளை அதிகம் வலியுறுத்த முடியாது என்றாலும் கௌமார முறைமை, மநுநெறித் திருநூல், தியானாநுபூபதி, குருபர தத்துவம், திருவாமாத்தூர்ப் பதிகச் சதகம் ஆகிய பதிப்புக்கள் பயனுடையனவாம்.

சிரவைக் கௌமார மடாலயத்தின் வெளியீடாக இல்லாவிட்டாலும் புலவர் புராணப் பதிப்பைப் பற்றி - அதன் பதிப்புப் பணிகள் முழுவதும் இம்மடாலயத்திலேயே நடைபெற்றதாதலின் - இங்குச் சிந்திப்பது இன்றியமையாததாகும். எனவே வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகளின் புலவர் புராணத்தின் நான்காம் பதிப்பைப்பற்றிச் சில செய்திகளைக் காணலாம்.

புலவர் புராணம் என்பது வண்ணச்சரபரால் தனி ஒரு நுலாக இயற்றப்பெற்று, அவர் கையாலேயே ஓர் ஓலைச் சுவடியில் (பிற்காலத்தில் இச்சுவடிக்கு *45* என எண் அளிக்கப்பட்டது) எழுதிவைக்கப் பெற்றுள்ளது. இந்தச் சுவடியில் உள்ள *3005* விருத்தங்களைத் தான் - அதாவது ஒரு முழு நூலைத்தான் - சின்னவேடன்பட்டி ஆர். கிருஷ்ணன் கௌமார மடாலயத்திலிருந்துகொண்டு பெயர்த்தெழுதினார். அச்சுக்கு அனுப்பப்பெற்றது அவருடைய கையெழுத்துப்படியே. அச்சுப்பிழைத்திருத்தத்தையும் அவரே மேற்கொண்டார்.

புலவர் புராணப் பதிப்பு என்பது ஒரு தொகுப்புப் பணி அன்று. தனிச் சுவடிப்பதிப்பே. இப்பதிப்பிற்கு ஆசியுரை வழங்கியருளியுள்ள பேரூராதீனம் தவத்திரு சாந்தலிங்க ராமசாமி அடிகளார் அவர்களாலும், அணிந்துரையளித்துள்ள அந்நாள் தமிழ்ப் பல்கலைக்கழகத் துணைவேந்தர் முனைவர் ஔவை. நடராசன் அவர்களும் இதனைத் தத்தம் உரைகளில் மிகத் தெளிவாகக் குறிப்பிட்டுள்ளனர். உண்மை இவ்வாறிருக்க இந்நூலின் பதிப்புரை, "கௌமார மடாலயத்தில் (சுந்தர) சுவாமிகள் செயல்பட்டுக் கொண்டிருந்தபோது தொடங்கப்பட்ட இந்தத் **தொகுப்பு முயற்சி** நன்கு நிறைவேறியுள்ளமை சுவாமிகளுக்குச் செய்யப்படும் ஒரு அஞ்சலியாகவே அமைகிறது என்றால் அது மிகையாகாது"[20] என்கிறது. இதுமட்டும் அல்லாமல் இந்நூலைப் படியெடுத்து, அச்சுப்பிழை திருத்திப் பதிப்புப் பணிகளை மேற்கொண்டவரின் உரை "தொகுப்பாசிரியர் உரை" என்னும் பொருந்தாத தலைப்போடு, நூலின் இறுதியில் சேர்க்கப்பட்டுள்ளது.[21] இந்த உரை சுருக்கமாக இருந்தாலும் நூலின் பதிப்பு வரலாற்றைக் கூறுகின்ற பதிப்பாசிரியர் உரையாகவே காணப்படுகிறது. பெரும் பொருட்செலவில் வெளியிடப்படுகின்ற இத்தகைய நூல்களில் தெளிவற்ற இத்தகைய பதிப்புக் குளறுபடிகளுக்கு இடம்கொடுப்பது துரதிருஷ்டவசமானது.

## 7. சென்னைக் கல்விச்சங்கம்

ஆங்கிலேயக் கிழக்கிந்தியக் கம்பெனியின் ஆட்சிக்காலத்தில் *1820*ஆம் ஆண்டு அரசு ஆதரவோடு சென்னைக் கல்விச் சங்கம் தொடங்கப்பெற்றது. அப்போதைய சென்னை மாவட்ட ஆட்சித்தலைவராக இருந்த தமிழ் ஆர்வலர் எல்லிசும், சுவடித் தொகுப்பாளராகிய கர்னல் மெக்கன்ஸியும் இந்த நிறுவனம் அமையக் காரணமானவர்களாக இருந்தனர். இக்கல்விச்சங்கத்திற்காக ஒரு நூலகம், அச்சகம், புத்தகக் கடை ஆகியன சொந்தமாக அமைந்திருந்தன. ஆங்கில அதிகாரிகளுக்கு இந்திய மொழிகளை - குறிப்பாகத் தமிழ், தெலுங்கு, கன்னடம், மலையாளம் ஆகிய தென்னிந்திய மொழிகளைக் - கற்பிப்பதே இச்சங்கத்தின் முதற்பணியாக இருந்தது. அத்துடன் இச்சங்கத்தில் பணியாற்றிய அறிஞர் பெருமக்கள் சுவடிப் பதிப்பிலும், பிறமொழி நூல்களைத் தமிழாக்கம் செய்வதிலும் ஆர்வம் காட்டிவந்தனர்.

திரு. சிதம்பர பண்டாரமும் அவரை அடுத்துத் திரு. வில்லிவாக்கம் தாண்டவராய முதலியாரும் இந்நிறுவனத்தின் தலைவராக இருந்தனர். அட்டாவதானம் வீராசாமிச் செட்டியார், இராசநல்லூர் இராமச்சந்திரக் கவிராயர், கொட்டையூர் சிவக்கொழுந்து தேசிகர், புதுச்சேரி நயனப்ப முதலியார், மதுரைக் கந்தசாமிப் புலவர், முத்துசாமிப்பிள்ளை ஆகியோர் இதில் தமிழாசிரியர்களாக விளங்கினர்.

மாவட்ட ஆட்சியர் எல்லிசின் விருப்பப்படி முத்துசாமிப் பிள்ளை பல இடங்களுக்கும் சென்று வீரமாமுனிவரின் நூற்சுவடிகளைத் தேடித் தொகுத்தார். கொத்தமங்கலம் இராமசாமிப்பிள்ளை, திருத்தணி விசாகப்பெருமாளையர், சரவணப் பெருமாள் ஐயர், வேங்கடாசல முதலியார் போன்ற தமிழறிஞர்கள் எல்லாம் இச்சங்கத்தோடு தொடர்புடையவராக இருந்தனர்.

இச்சங்கத்தின் முதல் பதிப்பு திருக்குறளின் மூலபாடம் ஆகும். இதில் எழுத்துக்கள் ஓலைச்சுவடிகளில் போலவே மெய்யெழுத்திற்குப் புள்ளி இல்லாமலும், கொம்பில் குறில்நெடில் வேறுபாடு காட்டப்படாமலும் உள்ளன. தாண்டவராய முதலியாரின் திவாகர நிகண்டுப்பதிப்பு சிறப்பாகக் குறிப்பிடத்தக்கது. இதன் நூலமைப்பு முறை அக்காலத்திற்கு மிக முற்பட்டது எனலாம். இது பல சுவடிகளை வைத்துக்கொண்டு ஒப்புநோக்கிப் பதிப்பிக்கப்பெற்ற ஒன்றாகும். இவர் திவாகர நிகண்டில் பல நூற்பாக்களைப் புதியனவாக இயற்றிச் சேர்த்துவிட்டார் என்றும், அந்த இடைச்செருகலோடுதான் இப்போதைய பதிப்புகள் வெளிவந்துள்ளன என்றும் கூறுவர்.

நாலடியார், நன்னூல், புறப்பொருள் வெண்பாமாலை, நம்பியகப் பொருள், சதுரகராதி, தண்டியலங்காரம், நேமிநாதம், தஞ்சைவாணன் கோவை, பெரியபுராணம் போன்ற நூல்களில் பதிப்புகளோடு சென்னைக் கல்விச்சங்க ஆசிரியர்கள் தொடர்புடையவர் ஆவர். பொதுவாகச் சென்னைக் கல்விச்சங்கப் பதிப்புக்களைத் தமிழ்ப் பதிப்பு வளர்ச்சியின் ஒரு படிநிலை எனலாம்.

## 8. சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை.

தமிழ் இலக்கிய உலகில் கழகம் என்றாலே அது சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தைத்தான் குறிக்கும். இது *1920*ஆம் ஆண்டு திருநெல்வேலியில் திருவரங்கம்பிள்ளையவர்களால் நிறுவப்பெற்றது. அந்த வருடத்திலேயே சென்னையிலும் ஒரு கிளை தொடங்கப்பெற்றது. நாளாவட்டத்தில் சென்னையே தலைமையிடமாக அமைந்தது. கழகம் கடந்த *80* ஆண்டுகளில் *2000* நூல்களுக்கு மேல் வெளியிட்டுள்ளது. கிட்டத்தட்ட எல்லாமே முன்வந்த பதிப்புகளின் மறுபதிப்புக்களே.

கழகத்தின் சுவடிப்பதிப்புகள் மிகமிகச் சிலவே. எனினும், அவை சிறப்புடையன. அவை முதல் பதிப்புகளாக இல்லாமல் இருக்கலாம் - ஆனால் திருந்திய பதிப்புகள் என்னும் பெருமையை உடையன. கழகத் தலைவர் வ. சுப்பையா பிள்ளையவர்களே இந்நிறுவனத்தின் மாத இதழாகிய செந்தமிழ்ச் செல்வியில், "கழகம் வெளியிட்ட பழந்தமிழ் இலக்கண இலக்கியங்கள் யாவும் ஏட்டுச் சுவடிகளைக் கொண்டு ஆய்ந்து வெளியிடப் பெறவில்லை என்பது உண்மை. ஆனால் அவை முன்னமே வெளிவந்துள்ள மூலப்படிகளையும் உரைப்படிகளையும் திருத்தப்பாடங்கண்டு புத்துரை விளக்கங்கள் எழுதி வெளியிடப்பட்டவை ஆகும்"[22] எனக் கூறியுள்ளார்.

இக்கழகத்தின் சுவடிப்பதிப்புகளில் பேரா. கந்தசாமியாரின் தொல்காப்பியச் சொல்லதிகாரச் சேனாவரையம், பின்னத்தூர் நாராயணசுவாமி அய்யரின் நற்றிணைப் பதிப்புக்கள், ஔவை. துரைசாமிப்பிள்ளையவர்களின் பதிற்றுப் பத்து, புறநானூறு ஆகியன, புலவர். ஆர். இளங்குமரனாரின் யாப்பருங்கல விருத்தி என்பன சிறப்பாகக் குறிப்பிட்டுச் சொல்லத்தக்கன ஆகும்.

கழக வெளியீடாகிய சூளாமணியின் பதிப்பு வரலாற்றைக் கழகப்புலவர் இரா. இளங்குமரன் அவர்கள் சூளாமணி மூலமும் உரையும் *1962* என்னும் தலைப்பில், "சி.வை. தாமோதரம்பிள்ளை பதிப்பித்த சூளாமணியை ஏட்டுப்படிகளுடன் ஒப்பிட்டுத் திருத்தம் செய்த பதிப்பு இது. ஒரே ஓர் செம்மையான சுவடி கிடைப்பினும் நல்ல பல திருத்தங்கள் கிடைத்தல் உண்டு. அவ்வகையில் சில சுவடிகளைத் தெ.பொ. மீனாட்சிசுந்தரனார் தொகுத்தார். அப்பொழுது அவர் அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தின் தமிழ்த்துறைத்

தலைவராக விளங்கினார். அத்துறையில் பணியாற்றிய ஒளவை. சு. துரைசாமிப் பிள்ளையும், க. வெள்ளைவாரணாரும் அச்சுப்படியைக் கைச்சுவடிகளுடன் ஒப்பிட்டு ஆராய்ந்து திருத்தம் செய்திருந்தனர். பாடவேறுபாடுகளும் காட்டியிருந்தனர். அத்திருத்தப் புத்தகத்தைச் சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் பெற்றது. கழகப்புலவர் சு.அ. இராமசாமிப்புலவர், பெருமழைப்புலவர் பொ.வெ. சோமசுந்தரனார் ஆகியவர்களைக் கொண்டு உரையும் விளக்கமும் எழுதச் செய்து வெளியிட்டது. ஏட்டுச் சுவடிகளுடன் ஒப்பிட்டு ஆராயப்பெற்ற பதிப்பு இஃதாகலின் இதனைக் குறித்தலும் வேண்டுவதாயிற்று. இவ்வாராய்ச்சிக்குப் பயன்பட்ட சுவடிகள் நான்கு என்பதும், அவற்றை வீடூர் பூர்ணசந்திர நயினார் உதவினார் என்பதும் கழக வெளியீடாகிய புறநானூற்றின் முன்னுரையால் விளங்குகின்றது"[23] என விரிவாக விளக்கியுள்ளார்.

பொதுவாகக் கூறுமிடத்துக் கல்வி நிறுவனங்களின் பாடத்திட்டங்களையும், தமிழ்நாட்டின் சமுதாய, அரசியல் நிலைமைகளையும் கருத்தில்கொண்டு அவற்றிற்கேற்ப நூல்களை வெளியிட்ட உயர்ந்த நிறுவனம் கழகம் எனலாம். கழகத்தின் சுவடிப் பதிப்புகளுக்கு ஆதாரமாக அமைந்தனவாகிய ஓலைச்சுவடிகள் இப்பொழுது எங்கே உள்ளன அல்லது எப்போது எங்கே போயின என்பதைப் பற்றிச் சரியாகக் கூறுவார் எவரும் இல்லை என்பது கசப்பான உண்மை.

## 9. டாக்டர் உ.வே.சா. நூல்நிலையம், சென்னை.

தமிழ் இலக்கியப் பதிப்பின் இமயமாகவும், பதிப்பாசிரியர்களின் கலங்கரை விளக்கமாகவும் விளங்கிக் கொண்டிருக்கும் தமிழ்த்தாத்தாவின் நினைவு நிறுவனமாக இயங்கிக் கொண்டிருக்கும் இந்த நூலகம் *1943* ஜூலையில் நிறுவப்பெற்றது. உ.வே.சா. தொகுத்து வைத்திருந்த சுவடிகளும், நூல்களும் அவரால் எழுதிவைக்கப்பட்டிருந்த ஏராளமான குறிப்புகளும் இந்த நூல் நிலையமாக உருப்பெற்றது. இந்த ஆய்வு மையத்தில் ஏறக்குறைய *2300* ஓலைச்சுவடிகளும் *700* காகிதச் சுவடிகளும் உள்ளன.

இங்குள்ள சுவடிகளுக்கு முறையாக விளக்க அட்டவணை வெளியிடப்பட்டுள்ளது. அவை ஆசியவியல் நிறுவனத்தின் பெயரால் ஆங்கில மொழிபெயர்ப்பாகவும் வெளிவந்துள்ளன. இந்த நூல் நிலையம் தொடர்ந்து நல்ல நூல்களை வெளியிட்டுக் கொண்டுள்ளது.

*1943*ஆம் ஆண்டு உ.வே.சா. அவர்களின் மைந்தர் கல்யாணசுந்தரனாரால் பதிப்பிக்கப்பெற்ற திருக்கழுக்குன்றக் கோவையைப் பதிப்பு நெறி ஒப்புமை பற்றியும், வரலாற்றுத் தொடர்ச்சி பற்றியும் உ.வே.சா.

நூல் நிலையப் பதிப்புகளோடு ஒருங்கு வைத்துத் தொடங்க விழைகிறேன். இந்த அகப்பொருட்கோவைப் பதிப்பு ஒரு நல்ல சுவடிப்பதிப்பாக அமைந்துள்ளது.

*1944*ஆம் ஆண்டு பிரபந்த இலக்கணமாகிய நவநீதப் பாட்டியல் இரண்டு பழைய உரைகளுடன் வெளியிடப்பட்டது. இப்பதிப்பின் பிற்சேர்க்கைகள் மிக்க பயனுடையன என்றாலும் இதே நவநீதப்பாட்டியல் முன்பே பேரா. வையாபுரிப் பிள்ளையவர்களால் ஒரு புத்துரையுடன் பதிப்பிக்கப்பட்டுள்ளது என்னும் செய்தி இந்நூலில் கூறப்படாதது ஏன் என விளங்கவில்லை. (பின்னால் வந்த இரண்டாம் மூன்றாம் பதிப்புகளில் கூடக் கூறப்படவில்லை) உ.வே.சா. நூலகப்பதிப்பில் இடம்பெறாத சில காரிகைகள் வையாபுரியார் பதிப்பில் காணப்படுகின்றன. ஆனால் அக்கலித்துறைகளின் நம்பகத்தன்மை ஐயத்திற்குரியது.[25]

இந்நூலகப் பதிப்பாக இதே *1944*இல் வெளிவந்த கும்பேசர் குறவஞ்சி தெளிவான முகவுரை, குறிப்புரை, இசைக்குறிப்புகள், அகராதிகள் முதலிய பயனுடைய பதிப்புக்கூறுகளைப் பெற்றுள்ளதொரு நல்ல இசை நாடகப் பதிப்பாகும்.

விக்ரம சோழன், இரண்டாம் குலோத்துங்கன், இரண்டாம் இராஜராஜன் ஆகிய மூன்று சோழப் பேரரசர்களைப் போற்றி ஒட்டக்கூத்தர் இயற்றிய மூன்று உலாப் பிரபந்தங்களும் *1946*ஆம் ஆண்டு மூவருலா எனப் பதிப்பிக்கப்பட்டுள்ளது. விளக்கமான முகவுரை, ஆசிரியர், பாடப்பட்டோர் வரலாறுகள், ஒப்புமைப் பகுதிகள், அரும்பத அகராதி முதலிய இன்றியமையாத பகுதிகளோடு அமைந்துள்ள இது பாராட்டிற்குரிய நல்ல சிற்றிலக்கியப்பதிப்பு.

*1954*இல் வெளியான தோலாமொழித் தேவரின் சூளாமணிப் பதிப்பு ஐந்து சுவடிகளை ஒப்பு நோக்கிப் பதிப்பிக்கப்பட்டது. இதில் பாடபேதம் முதலிய சுவடிப்பதிப்புக் கூறுகள் இடம்பெற்றுள்ளன. எனினும் இதில் தரப்பட்டுள்ள யாப்புக்குறிப்புக்கள் நிறைவாக இல்லை என்பதைக் கூறித்தான் ஆகவேண்டும்.

குலசேகரன்பட்டினம் பாண்டீசுவரரைப் போற்றுகின்ற குலசை உலா திரு.கி.வா.ஜ அவர்களால் *1972*ஆம் ஆண்டு பதிப்பிக்கப்பட்டுள்ளது. நல்ல பதிப்பாகிய இதில் அமைந்துள்ள முன்னுரை சிறப்பாகக் குறிப்பிடத்தக்கது.

இவற்றைத் தவிரக் குற்றாலக் குறவஞ்சி *(1945)*, கம்பராமாயணம் - பாலகாண்டம் *(1946)*, யாப்பருங்கலக்காரிகை *(1948)*, கம்பர் - அயோத்தியா காண்டம் *(1951)*, திருக்குற்றால உலா *(1955)*, கம்பர் - சுந்தரகாண்டம் *(1957)*, கம்பர் - ஆரணிய காண்டம் *(1959)*, நளவெண்பா *(1960)*, மநுவிஞ்ஞானேசுவரீயம் *(1960)*, அகிலாண்டநாயகிமாலை *(1961)*, கம்பர் -

சு. கணபதிராவ், கிருஷ்ணா சஞ்சீவி, வி. குஞ்சிதபாதம், சி.என். குப்புசாமி, பி.எஸ். சுலோசனா, கோ. சேதுராமன், மு. சௌரிராஜன், எஸ். தியாகராஜன், நாவல்பாக்கம் தேவநாதாச்சாரியார், ப.வெ. நாகராஜன், டி.பி. பழனியப்பப்பிள்ளை, டி.பி. மீனாட்சிசுந்தரம், முத்தம்மாள் கௌரிநாதன், இ.பா. வேணுகோபால், மு.கு. ஜகந்நாதராஜா போன்றோர் இரண்டு நூல்களைப் பதிப்பித்த பதிப்பாசிரியர்களாவர்.

சி.ஜி. இராஜன், எம்.எஸ். இராஜன், எஸ். கிருஷ்ணமூர்த்தி சாஸ்திரிகள், என். சீனிவாசன், வ.சு. செங்கல்வராய பிள்ளை, சி.கோ. தெய்வநாயகம், எம். நந்தகுமார், த. பெரியாண்டவன், நடாத்தூர் வேங்கடாசாரியன் போன்றோர் மூன்று நூல்களைப் பதிப்பித்த பதிப்பாசிரியர்களாவர். சி.எம். இராமச்சந்திரஞ் செட்டியார், எ. கிருஷ்ணசாமி மஹதிக் ராவ் சாகிப், இரா. திலகம், சி. ராஜராஜேஸ்வர சர்மா, கே. வாசுதேவ சாஸ்திரி போன்றோர் நான்கு நூல்களைப் பதிப்பித்த பதிப்பாசிரியர்களாவர். கி. கோதண்டபாணி, பூ. சுப்பிரமணியம், அ.மா. பரிமளம், எஸ். முத்துரத்ன முதலியார் போன்றோர் ஐந்து நூல்களைப் பதிப்பித்த பதிப்பாசிரியர்களாவர். அடிகளாசிரியர், வரா. கல்யாணசுந்தரம், சி. கோவிந்தராசனார், ச. பாலசுந்தரம் போன்றோர் ஆறு நூல்களைப் பதிப்பித்த பதிப்பாசிரியர்களாவர். த. கிருட்டினமூர்த்தி, ய. மணிகண்டன் போன்றோர் எட்டு நூல்களைப் பதிப்பித்த பதிப்பாசிரியர்களாவர்.

வி.எஸ். கிருஷ்ணன், ம. சீராளன் போன்றோர் ஒன்பது நூல்களைப் பதிப்பித்த பதிப்பாசிரியர்களாவர். வ. வேணுகோபாலன் அவர்கள் பத்து நூல்களைப் பதிப்பித்த பதிப்பாசிரியராவர். ச. அரங்கராசன், தி.வே. கோபாலையர் போன்றோர் பதினொரு நூல்களைப் பதிப்பித்த பதிப்பாசிரியர்களாவர். இரா. கோவிந்தசாமிபிள்ளை பன்னிரண்டு நூல்களையும், ச. திலகம், மு. பசுபதி மற்றும் எஸ். வெங்கட்டராஜன் போன்றோர் பதினேழு நூல்களையும், வீ. சொக்கலிங்கம் இருபத்தெட்டு நூல்களையும், சு. சௌந்தரபாண்டியன் முப்பத்திரண்டு நூல்களையும், தி. சந்திரசேகரன் எழுபத்தாறு நூல்களையும் பதிப்பித்திருக்கின்றனர்.

### அறியவருவன

சுவடிப்பதிப்பு வரலாற்றில் அதிகமான தமிழ் நூற் பதிப்புகளை *(சுமார் 250)* வெளியிட்ட பெருமை சரஸ்வதிமகால் நூல் நிலையத்தையே சாரும்.

இவ்விரு நூல் நிலையச் சுவடிப்பதிப்பு நூல்கள் எல்லாம் *99%* முழுமை பெற்ற சுவடிப்பதிப்பு நூல்களாகவே உள்ளன.

இவ்விரு நூலகங்களிலும் பல்வேறு வகையான நூல்கள் பதிப்பாகியுள்ளன.

கிட்கிந்தா காண்டம் *(1961)*, திருக்குறள் - பழைய உரை *(1961)*, கம்பர் - யுத்த காண்டம் 4 தொகுதிகள் *(1962, 1963)*, திருஅம்பர்ப் புராணம் *(1965)*, வாட்போக்கிக் கலம்பகம் *(1976)*, சங்கர ராஜேந்திர சோழன் உலா *(1977)* *1979*ஆம் ஆண்டு வரை இந்த நூலகத்தின் வழி வெளிவந்த சுவடிப்பதிப்புகள் ஆகும்.

இங்குக் கமலாலயச் சிறப்பு, கம்பர் - பாலகாண்ட விரிவுரை என்னும் இரு பதிப்புக்களைப்பற்றித் தனியாகச் சில வார்த்தைகள்:

கமலாலயச் சிறப்பு என்னும் திருவாரூர்ப் புராணம் உ.வே.சா. நூல் நிலையத்தின் *22*ஆம் வெளியீடாக *1961*ஆம் ஆண்டு வெளியிடப்பட்டுள்ளது. இது ஓலைச்சுவடிப்பதிப்பு அன்று; எனினும் பெரும்பாலும் அதனையொத்த பழைய காகிதச்சுவடி ஒன்றின் அடிப்படையில் உருவானது. அதனால்தான் இங்கு சிந்திக்கப் பெறுகிறது. இப்பதிப்பின் முன்னுரை நன்றி கூறுமுகத்தான், " காகிதப் பிரதியில் எழுதுவோரால் நேர்ந்த பிழைகள் மலிந்திருந்த பாடல்களைத் தூய்மைப்படுத்திச் சீர்களைப் பிரித்து எழுதி அமைத்துதவியவர் இந்நூல்நிலையப் பண்டிதரான திரு. வித்வான் அ. குப்புசாமிப் பிள்ளை அவர்கள். பாடல்களையும், குறிப்புக்களையும் மறுமுறை ஆராய்ந்து வழுக்களைக் களைந்தும் பல இடங்களில் கருத்துக்களை விளக்கியும் அன்புடன் உதவியவர் இந்நிலையத்து உதவிப் பதிப்பாசிரியரான தமிழ்ப்பேரறிஞர் திரு. இ.எஸ். வரதராஜ ஐயர் பி.ஏ. அவர்கள். இவ்விரு சான்றோர்களுக்கும் இந்நிலையம் தன் நன்றியைத் தெரிவிக்கின்றது."[26] என்று கூறுகிறது. ஆனால் இந்த முன்னுரையை எழுதியவரின் பெயரே பதிப்பில் இடம் பெறவில்லை. நூலின் முகப்புப்பக்கத்தில் அணிந்துரை அளித்தவர் பெயர் உள்ளது; ஆனால் பதிப்பாசிரியர் பெயர் இல்லை.

யாப்புக் குறிப்புகள் கொடுக்கப்படாததும், செய்யுள் முதற்குறிப்பு அகராதி இடம் பெறாததும், பாடபேதங்கள் நூலின் இறுதியில் பிற்சேர்க்கையாகத் தரப்பட்டிருப்பதும் ஐயரவர்களின் பதிப்புச் செந்நெறியிலிருந்து வழுவுவதாகும். மிகப்பெரும்பாலான பதிப்புகளில் இல்லாமல் இந்த ஒன்றில் மட்டும் இந்த இறக்கம் ஏன் ஏற்பட்டுள்ளது எனத் தெரியவில்லை.

இவ்வாறே *1967*ஆம் ஆண்டில் முதற்பதிப்பாகப் பதிப்பிக்கபெற்ற கம்பராமாயணப் பாலகாண்டத்திலும் பதிப்புரை, முகவுரை இரண்டையும் எழுதியவர் பெயர் காணப்படவில்லை. இதன் பதிப்புரையில், "பால காண்டத்தின் முந்தின இந்நூல் நிலையப் பதிப்பும், அதற்கு முன்னும் பின்னும் வெளிவந்துள்ள உரை உள்ளனவும் அஃதில்லாதனவுமான பல அச்சுப்பதிப்புகளும், சில ஏட்டுப் பிரதிகளும், கம்பராமாயண விஷயமாக

அவ்வப்போது வெளியாகியுள்ள பல அரிய கட்டுரைகள் முதலியனவும் இப்பதிப்பில் நன்கு ஆராய்ந்து பயன்படுத்தப்பெற்றன"[27] எனக் குறிப்பிடப்பெற்றுள்ளது. ஆனால் அவற்றைச் செய்தவர் யார்? பண்டிதர் அ. கோபால அய்யரின் மைந்தர் திரு. கோ. சேஷாத்ரி ஐயர் இவ்வெளியீட்டுப் பணியில் முழுப் பொறுப்பேற்று உழைத்தவர்[28] எனில் அவர் ஏன் அதிகாரபூர்வமாகப் பதிப்பாசிரியராக அறிவிக்கப்படவில்லை? சுவடிப்பதிப்பு வரலாற்றிற்கு அத்துறையில் உழைத்தவர்களின் பெயர் இன்றியமையாதது அல்லவா? இந்தப் பால காண்டப்பதிப்பில் இடையிடையே "ஒரு பழைய உரை" விரவி வருகிறது. இதைப்பற்றிச் சுவடிகளால் அறியப்படும் மிகச்சில செய்திகளையாவது அறிந்த மட்டும் விளக்கியிருந்தால் அது கம்பராமாயண ஆராய்ச்சிக்கும் பெருந்துணையாக அமைந்திருக்கலாம்.

மேலும் யாப்புக் குறிப்பு இல்லாதது இப்பதிப்பின் ஒரு பெரும்குறை ஆகும். நிறைய அரிய செய்திகளைத் தன்னுள் தாங்கியிருப்பதோடு அளவிலும் பெரியதான இந்தப் பாலகாண்ட உரைப்பதிப்பு அறிஞர்களுக்கு மிகமிகப் பயன் தரும் ஒரு நல்ல பதிப்பாயினும் சுவடியியற் கண்ணோட்டத்தில் சில வரலாற்றுக் குறைகளை உடையதாகவே காணப்படுகிறது.

டாக்டர் உ.வே.சா. நூல் நிலையத்திலிருந்து அடுத்து வந்த ஆண்டுகளில் வாட்போக்கி என்னும் இரத்தினகிரி உலா *(1980)*, குமாரலிங்கர் குறவஞ்சி *(1982)*, சொர்ணகிரி அம்பிகை பிள்ளைத்தமிழ் *(1982)*, திருக்கரந்தை ஆதிவராகப்பெருமாள் வருக்கக்கோவை *(1982)*, நூற்றெட்டுத் திருப்பதி அந்தாதி *(1982)*, மூவரையன் விறலிவிடுதூது *(1982)*, அகராதி நிகண்டு *(1983)*, காஞ்சிப்புராணம் *(1983)*, தனிப்பாடல்கள் *(1983)*, வடமலை நிகண்டு *(1983)*, இறைவாச நல்லூர்த் தலபுராணம் *(1984)*, சிவகாமி அம்மன் அந்தாதி *(1984)*, கீழ்வேளூர் முருகன் பிள்ளைத்தமிழ் *(1985)*, சீவலமாறன் கதை *(1985)*, மகரநெடுங்குழைக்காதர் பிள்ளைத் தமிழ் *(1986)*, அபிதான மணிமாலை *(1988)*, சாந்தாதி அசுவமகம் *(1989)*, நற்றிணை *(1989)* ஆகிய நூல்கள் வெளிவந்துள்ளன.

இவற்றுள் ஆதிவராகப்பெருமாள் வருக்கக்கோவை, இறைவாச நல்லூர்த் தலபுராணம், மகரநெடுங்குழைக்காதர் பிள்ளைத்தமிழ் ஆகியன மிகச் சிறப்பாகக் குறிப்பிடத்தக்க உயர்ந்த பதிப்புகள் ஆகும். ஏனையவை மோசமானவை என்பது கருத்தன்று. மேற்குறிப்பிட்டவை மிகமிகச் சிறந்தவை என்பதே கருத்து. மூவரையன் விறலிவிடுதூதில் பின்னிணைப்பாக மூவரையன் வண்ணம் அச்சிடப்பட்டுள்ளது. அது *1893*ஆம் ஆண்டில் வெளியான வண்ணத் திரட்டு என்னும் நூலில் எப்படி வடிவம் தெரியாமல் அச்சிடப்பட்டுள்ளதோ

அப்படியே உருவ அமைதி இன்றி ஒரு நூற்றாண்டிற்குப் பிறகும் *1992* இல் அச்சிடப்பட்டுள்ளது. ஏன் இந்தத் தேக்கம்?

அண்மைக்காலத்தில் இந்த நூலகம் பழைய பதிப்புகளுக்கு மறு பதிப்புகளைக் கொண்டுவருவதில் அதிகக் கவனம் செலுத்துகிறது. இது இந்தக் காலத்திற்கு உடனடியாகத் தேவைப்படுகின்ற மிக இன்றியமையாத ஒரு நல்ல தமிழ்ப்பணி ஆகும். இவ்வாறு மறு பதிப்புச் செய்யும்போது உலா, மாலை போன்ற அளவிற் சிறிய பிரபந்தங்கள் சிலவற்றைத் தொகுத்து ஒரே புத்தகமாகவும், பெருங்கதை போன்ற பெரிய நூல்களை மூன்று நான்கு தொகுதிகளாகவும் வெளியிடுகின்ற பதிப்புமுறை மிகப் பயனுடைய ஒன்றாகும்.

பொதுவாக டாக்டர் உ.வே.சா. நூலகத்தின் பதிப்புகளில் அவருடைய நற்பெயரைக் காப்பாற்றவேண்டும் என்னும் பொறுப்புணர்ச்சி தெற்றெனப் புலனாகிறது. பல நூல்களுக்கு ஐயர் அவர்களாலேயே எழுதப்பெற்ற குறிப்புகள் அங்கிருப்பதும் ஒரு நல்ல வாய்ப்பாகும். இப்பதிப்பு இன்னமும் நன்றாக அமையலாம் எனக் கூற இடமிருக்கின்றதேயன்றி இந்நூலகப் பதிப்பில் மோசமானது என ஒன்றைக் கூற இயலாது.

## 10. தமிழக அரசு கீழ்த்திசைச் சுவடிகள் நூலகம், சென்னை.

இந்திய நில அளவை உயர் அலுவலராய் இருந்த கர்னல் மெக்கன்ஸி என்பவர் இந்திய மொழிகளிலுள்ள பழஞ்சுவடிகள், ஆவணங்கள் முதலியவற்றை வரலாற்று ஆய்விற்காகத் திரட்டினார். இவரால் தொகுக்கப்பெற்ற எல்லாமும் கல்கத்தாவில் இருந்தன. *1821*இல் மெக்கன்சி காலமான பிறகு அவருடைய மனைவி அப்பொருள்கள் எல்லாவற்றையும் கிழக்கிந்தியக் கம்பெனியாருக்கு விலைக்கு விற்றுவிட்டார். கம்பெனியில் முன்பே டாக்டர் லெப்டன் என்பவர் திரட்டிய சுவடிகளும் இருந்தன. வில்சன் என்பவரும் பல சுவடிகளைத் திரட்டியதோடு லெப்டன் சுவடிகளுக்கும் தம் சுவடிகளுக்கும் ஒரு விளக்கப்பட்டியலையும் தயாரித்திருந்தார். இப்படியாக ஆங்கிலேயக் கிழக்கிந்தியக் கம்பெனி அலுவலகத்தில் நிறையச் சுவடிகள் இருந்தன. இவற்றுள் ஒரு பகுதி இங்கிலாந்தின் இந்திய அலுவலக நூலகத்திற்கு அனுப்பப்பட்டது. எஞ்சிய சுவடிகள் கல்கத்தாவிலேயே இருந்தன.

கல்கத்தாவில் இருந்த சுவடிகளில் தென்னிந்தியத் தொடர்புடையன சென்னைக் கிழக்கிந்தியக் கம்பெனி அலுவலகத்திற்கு மாற்றப்பெற்றன. இவை பிறகு சென்னை இலக்கியச் சங்கத்திற்கு வழங்கப்பெற்றன. பிரவுன் என்பவரால் சேகரிக்கப்பெற்ற சுவடிகளும் இவற்றோடு சேர்ந்தன. இவ்வாறு தொகுக்கப்பெற்ற சுவடிகள் *1870*ஆம் ஆண்டு சென்னை மாநிலக் கல்லூரியில் கீழ்த்திசைச்

சுவடி நூலகமாக ஆயிற்று. பிறகு இந்த நூலகம் சென்னைப் பல்கலைக்கழக வளாகத்திற்கு மாற்றப்பெற்று இப்போது அங்கே சிறப்பாகச் செயல்பட்டுக் கொண்டுள்ளது.

இங்கு ஏறக்குறைய *14,500* தமிழ்ச்சுவடிகளும், *20,000*க்கும் மேற்பட்ட அச்சுப்புத்தகங்களும் இருக்கின்றன. இந்த நூலகம் *1944*ஆம் ஆண்டு முதல் தன் பதிப்புப்பணியைத் தொடர்ந்து செய்து கொண்டுள்ளது.

உபதேச காண்டம் *3* தொகுதிகள் *(1950)*, ஆதிபருவத்து ஆதி பருவம் *(1951)*, மாணிக்கவாசகர் அம்மானை *(1951)*, ஞானமதியுள்ளான் *(1952)*, நன்னூல் - காண்டிகை *(1952)*, வசுசரித்திரம் *(1952)*, ஆனந்தரங்கன் கோவை *(1955)*, சுந்தர பாண்டியம் *(1955)*, பேரூர்க் கோவை *(1955)*, ஜயங்கொண்டார் வழக்கம் - பழைய உரையுடன் *(1955)*, அந்தாதிக்கொத்து பாகம் - *1 (1956)*, கோலாசலத் தலபுராணம் *(1956)*, தினகவிதை *2* தொகுதிகள் *(1956)*, பிள்ளைத் தமிழ்க் கொத்து முதல்பாகம் *(1956)*, மாக புராண அம்மானை *(1956)*, தூதுத்திரட்டு *(1957)*, அந்தாதிக்கொத்து பாகம் *2 (1958)*, கப்பற்கோவை *(1958)*, பிள்ளைத் தமிழ்க் கொத்து பாகம் *2 (1959)*, கலம்பகக்கொத்து *(1960)*, தனிப்பாடல் திரட்டு *(1960)*, யாப்பருங்கல விருத்தி *(1960)*, வேதாளக்கதை *2* பாகம் *(1961)*, திவ்யப் பிரபந்த அகராதி *(1961)*, தொல்காப்பியம் - சொல் - கல்லாடம் *(1971)*, பிரபந்த மரபியல் *(1976)*, மடல்திரட்டு *(1992)*, ஆகிய பதிப்புக்களைப் பற்றி மட்டுமே தற்போதைய நிலையில் கருத்துக் கூற முடியும்.

டாக்டர் வ.சு. செங்கல்வராயபிள்ளை அவர்களால் *3* தொகுதிகளாகப் பதிப்பிக்கப்பட்டுள்ள உபதேச காண்டம் மிக நல்ல பதிப்பாகும். ஒரே சுவடியின் உதவியால் பதிப்பிக்கப்பெற்ற நன்னூற் காண்டிகை நூற்பா முதற் குறிப்பகராதி கூட இடம்பெறாத மிகச்சாதாரணப் பதிப்பாகும். சவுசரித்திரம் என்பது சேதிநாட்டு மன்னன் ஒருவனின் வரலாற்றைக் கூறும் காப்பியமாகும். இது ஒரு தெலுங்குக் காப்பியத்தின் மொழிபெயர்ப்பு. இப்பதிப்பில் அளவான முன்னுரை, காப்பியக் கதைச் சுருக்கம், ஒவ்வொரு படலத்திற்கும் நுவல்பொருள் தலைப்பு, பிழை திருத்தம் முதலியன இடம் பெற்றுள்ளன. செய்யுள் முதற்குறிப்பகராதியோ, காப்பிய நூல்களுக்கு இன்றியமையாத யாப்புக் குறிப்புகளோ காணப்பெறவில்லை என்றாலும் இது ஒரு நல்ல சுவடிப்பதிப்பே.

வித்வான். என். சுப்பிரமணியன் அவர்களால் பதிப்பிக்கப்பெற்றுள்ள ஆனந்தரங்கன் கோவை சிறந்த முகவுரை, உரை மேற்கோள் நூலகராதி, கோவைக்கிளவி அகராதி, அரும்பத அகராதி, செய்யுள் முதற்குறிப்பகராதி ஆகியவற்றோடு பாட்டுடைத் தலைவரைப்பற்றிய சில தனிப்பாடல்களையும்

தன்பாற் பெற்றுள்ள அருமையான பதிப்பு. இது ஒரு காகிதச் சுவடிப்பதிப்பு எனினும் இந்நூலின் பதிப்புச் சீர்மை பலராலும் அறியப்படவேண்டும் என்பதற்காக இங்குக் குறிப்பிடப்பெற்றுள்ளது.

*1956*இல் வெளியிடப்பெற்ற கோலாசலத் தலபுராணம் மொ. அ. துரை அரங்கசாமி அவர்களால் பதிப்பிக்கப்பெற்றது என்பதை அவர் எழுதியுள்ள முகவுரையால் அறிகிறோம். ஆனால் முகப்பில் பதிப்பாசிரியர் என இவர் பெயர் இடம்பெறவில்லை. நிறுவனத்தலைவர் பெயர் மட்டுமே பொதுப் பதிப்பாசிரியர் எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. பொதுவாக அந்நாளையக் கீழ்த்திசைச் சுவடி நூலகத்தில் செல்வாக்கு வாய்ந்த வெளிப்பதிப்பாசிரியர்கள் பதிப்புப் பணியைச் செய்திருந்தால் மட்டுமே அவர் பெயர் பதிப்புகளில் இடம் பெற்றுள்ளது. சி.எம்.இராமச்சந்திரன் செட்டியார், என். சுப்பிரமணியன், டி. இராமகிருஷ்ண ஐயங்கார் முதலிய சிலருக்கே பதிப்பாசிரியர் பெயர் தரப்பெற்று நிறுவனத்தலைவர் பொதுப் பதிப்பாசிரியர் ஆகியுள்ளார். மொ.அ. துரை அரங்கசாமி *(கோலாசலத் தலபுராணம்)*, எல். ஸ்ரீநிவாசன் *(கப்பற்கோவை)* ஆகியோர் பதிப்புப் பணியைச் செய்திருந்தும் அவர்கள் பெயர் பதிப்பாசிரியர்களாக இடம்பெறவில்லை.

உண்மையான உழைப்பாளர்களின் உழைப்புக்கு உரிய அங்கீகாரம் அளிக்கப்படாவிட்டால் அவர்கள் உற்சாகம் குன்றித் தம் உழைப்பில் உளம் செலுத்தாமல் போய்விடுவர் என்னும் நிர்வாக இயலின் அடிப்படைப் பாடத்திற்கு இந்நிறுவனத்தின் பதிப்புகள் சான்றுகளாகின்றன. நல்லகாலமாக இந்நிறுவனத்தில் இப்போது இந்த நிலை இல்லை.

கப்பலூர் கருமாணிக்கன் என்பானைப் பாட்டுடைத்தலைவனாகக் கொண்ட கப்பற்கோவை என்னும் அகப்பொருட்கோவை எல். ஸ்ரீநிவாசன் அவர்களால் மிகச் சிறப்பாகப் பதிப்பிக்கப்பட்டுள்ளது. நல்ல முன்னுரை, உரைமேற்கோள் நூலகராதி, அகத்துறை விளக்கம், செய்யுள் முதற்குறிப்பகராதி, அரும்பத அகராதி முதலிய சுவடிப்பதிப்பிற்குரிய அனைத்தும் அடங்கிய நல்ல பதிப்பாக இக்கப்பற்கோவை அமைந்துள்ளது.

*1960*இல் வெளியாகியுள்ள தனிப்பாடற்றிரட்டு சற்றும் பொருளுணர்ச்சி இல்லாமல் தொகுக்கப்பெற்றுள்ளது. ஒரே பாடல் இரு இடங்களிலும் *(56, 249; 178-268)*. ஒரே செய்யுளை இரண்டாக எண்ணியும் *(79-80)*, இரண்டை ஒன்றாக்கியும் *(911)* அச்சிடப்பட்டுள்ளதைக் காணலாம். தோத்திரப் பதிகங்களை யெல்லாம் தனிப்பாடல்களாகக் கொடுப்பது நகைப்பிற்குரியது. *(135-146; 747-756; 756-773; 765-773; 777-778; 784-791; 818-827; 837-846; 847-856; 857-865; 876-885; 886-895; 896-904;*

*911-919; 920-927; 928-937; 938-946* ஆகியன) ஒரு பதிகத்தில் ஓரிரண்டு பாடல்கள் வீழ்ந்துவிட்டால் எஞ்சியவை தனிப்பாடல்கள் ஆகிவிடா. அவ்வாறே *101-109* எண்ணுள்ள பாடல்கள் பருவத்திற்கு ஒரு பாடலாக அமைந்த நொள்ளைத் தமிழ் என்னும் வசை இலக்கியமாகும். *757-764*ஆம் செய்யுள்கள் வாரத்தோத்திரம் என்னும் சிற்றிலக்கியமாகக் கருதப்படவேண்டும். *866* முதல் *875* வரையுள்ள கவிகள் அந்தாதித் தொடை பெற்று நடப்பதால் ஒரு பதிற்றுப்பத்தந்தாதியின் பகுதியாகவும் இருக்கலாம் அல்லது பதிக அந்தாதி ஆகலாம். *948-964* செந்தில்நாதன் பவனிகண்டிரங்கல் என்னும் ஒரே துறையில் அமைந்த *17* செய்யுள்களாகும். பெரும்பாலும் *30* பாடல்களாலான (அல்லது அருகிய வழக்காக *20)* மாலையின் பகுதியாக இதனைக் கருதலாம். *1043-1051* காவை அகிலாண்டநாயகி பந்தடி என்னும் சிற்றிலக்கியமாகும். இவ்வாறு தனிப்பாடற்றிரட்டு எனப்பெயர் சூட்டப்பெற்றுள்ள இப்புத்தகத்தில் *747* முதல் *1051* முடிய உள்ளவை தனிப்பாடல்களாகா.

பாடல்களில் மட்டும் அல்ல; பொருள்கோளிலும் பிழைகள் ஏராளம். அன்னை மீனாட்சியை வணங்கினால் யமபயம் இல்லை என்னும் பாடல் மடல் ஊர்தல் எனக் கருதப்பட்டுள்ளது. (முன்னுரை பக். vii) ஓர் அடியார் இறைவனிடம் இறைஞ்சுதல் தலைவி கூற்று ஆகிறது *(36)*. தன்னுடைய மகனைப் பரத்தை கொஞ்சியதைக் கண்ட தலைவியின் சினம் மிக்க கூற்று பரத்தையின் கூற்றாகக் குறிக்கப்பட்டுள்ளது *(47)*. காதிர்பாய் என்னும் பாட்டுடைத் தலைவனின் பெயர் தலைப்பில் உருபாய பூபதி எனக் காணப்படுகிறது. இப்பதிப்பின் எழுத்துப் பிழையைக் காட்ட முயன்றால் மணற்சோற்றில் கல் பொறுக்கியதாக முடியும். பொதுவாக ஒரு தனிப்பாடல் திரட்டு எப்படி இருக்கக்கூடாது என்பதற்கு இப்பதிப்பு (மன்னிக்கவும் - அச்சடிப்பு) நல்லதோர் எடுத்துக்காட்டு ஆகும்.

தெ.பொ. மீனாட்சிசுந்தரனாரின் தொல்காப்பியச் சொல்லதிகாரக் கல்லாடனார் விருத்தி மிக அருமையானதோர் செம்பதிப்பு ஆகும். *9* சுவடிகளின் அடிப்படையில் உருவாகி உள்ள இதில் விரிவான முன்னுரை, போதுமான அளவு சுவடியியற் செய்திகள், தெளிவான பாட பேதங்கள், சொல்லகராதி ஆகிய அனைத்தும் அமைந்துள்ளன. கீழ்த்திசைச் சுவடி நூலகத்திற்குப் பெருமை சேர்ப்பது இந்தத் தொல்காப்பியப் பதிப்பு. பாட்டியல் இலக்கணமாகிய பிரபந்த மரபியல் என்னும் நூல் மு. அருணாசலம் அவர்களால் மிக நன்றாகப் பதிப்பிக்கப்பட்டுள்ளது. ஆழமான ஆய்வு முன்னுரை, பிற பாட்டியல்களோடு ஒப்பீடு, தேவையான பிற குறிப்புகள் அடங்கிய நல்ல பதிப்பு.

தமிழக அரசு கீழ்த்திசைச் சுவடி நூலகம் தன்னிடமுள்ள சுவடிகளுக்கான விவர அட்டவணையைப் பல தொகுதிகளாக

வெளியிட்டுள்ளது. இந்நூலகம் தான் வெளியிட்டு வரும் காலமுறை இதழின் வாயிலாக அருங்கலச் செப்பு, ஆத்திசூடி வெண்பா, ரிஷிவிந்தக் குறவஞ்சி, இலக்கண தீபம், கட்டி மகிபன் பள்ளு, நல்லபிள்ளை, சித்திர மடல், பர்த்ருஹரி சிங்கார சதகம், பிரபந்த மரபியல் (இது பிறகு தனி நூலாக வெளியாகியுள்ளது) விராலிமலைக் குறவஞ்சி (இது பிறகு தனியாரால் வெளியிடப்பட்டுள்ளது) முதலிய ஐம்பதுக்கு மேற்பட்ட நூல்களைப் பதிப்பித்துள்ளது. ஆய்வாளர் திரு. மோ.கோ. கோவைமணி இவற்றை விரிவாக ஆராய்ந்துள்ளார்.[29]

## 11. தமிழக அரசின் தொல்பொருள் துறை

தமிழக அரசின் தொல்பொருள் துறை *1981* ஆம் ஆண்டில் ஒன்பது சுவடிப்பதிப்பு நூல்களை வெளியிட்டது. காதல் கொத்து, கொடுமணல் இலக்கியங்கள், திருவேங்கடநாதன் வண்டுவிடுதூது, சங்கரமூர்த்தி கோவை, திருக்கீழ்வேளூர் உலா, சுசீல வள்ளல் அம்மானை ஆகிய *6* இலக்கியங்களும் பாளையப்பட்டுக்களில் வம்சாவளி என்னும் மூன்று தொகுதிகளும் இதில் அடங்கும். இங்கு ஆறு இலக்கியப் பதிப்புக்கள் பற்றி மட்டும் சிந்திக்கப்படுகின்றன.

1. **காதல் கொத்து:** குமரலிங்கன், சிவகங்கை இராசேந்திர பூபதி, கந்தப்பெருமாள் ஆகியோர் மீது எழுந்த காதல் பிரபந்தங்களின் தொகுப்பு இந்நூல். செய்திகள் நிறைந்த ஒரு நல்ல பதிப்பாய்வுரையும், பதிப்பாசிரியரால் அன்றுவரை அறியப்பெற்ற காதற் பிரபந்தங்களின் பட்டியலும், அருஞ்சொல் அகரவரிசையும் பதிப்பைப் பயனுடையதாக்குகின்றன. காதல் என்னும் சிற்றிலக்கியமே கவர்ச்சியான ஒன்று. இப்பதிப்பாசிரியர் காமச் சதுரங்கம், கூடல் அதிகாரம், தும்பிக்கு அழைப்பு ஏன், பூவைத்தேடும் பூந்தோட்டம், மலர்த்தவிசின் மேலே மன்மத விழா எனக் கவிதைத் தலைப்புக்களைப் போன்ற உள்தலைப்புக்களைக் கொடுத்துப் புத்தகத்தை ஒரு கவர்ச்சிக் களஞ்சியமாகவே ஆக்கியுள்ளார். மூல பாடத்திற்கு எழுதப்பெற்றுள்ள குறிப்புரை சுருக்கமாக இருந்தாலும் தேவையான எதையும் விட்டுவிடாமல் இருப்பதோடு தக்க மேற்கோள்களையும் கொண்டு உள்ளது. தமிழ் அச்சுப் புத்தகங்களில் தவிர்க்க முடியாத சிற்சில அச்சுப் பிழைகளைத் தவிர இப்பதிப்பு குறையற்றதோர் நற்பதிப்பாகத் தொல்பொருள் துறைக்குப் பெருமை தேடித்தந்துள்ளது.

2. **கொடுமணல் இலக்கியங்கள்:** கந்தசாமி காதல், கொடுமணல் பொன்னையன் காதல் ஆகிய இரண்டு குறும் பிரபந்தங்களும், குருப்பு நாட்டுப் பட்டயம் ஒன்றும், பல தனிப்பாடல்களும் இந்நூலில் இடம்பெற்றுள்ளன. வரலாற்றாய்விற்கு மிகப்பயன்படும் ஆய்வு முன்னுரை, அருஞ்சொல் அகராதி,

தேவையான அளவு வரலாற்றுக் குறிப்புகள், சுருக்கமான பதவுரை ஆகிய கூறுகளைப் பெற்றுள்ள இப்பதிப்பு வரலாற்று ஆராய்ச்சிக்கு - அதிலும் குறிப்பாகக் கொங்கியல் ஆய்விற்கு - மிகப் பயனுடையது ஆகும்.

3. **திருவேங்கடநாதன் வண்டுவிடு தூது:** வள்ளல் ஒருவரைப் போற்றும் *327* கண்ணிகளாலான இத்தூதுப் பிரபந்தம் மிகச் சிறப்பாகப் பதிப்பிக்கப்பட்டுள்ளது. மிக விரிவான முகவுரை, தெளிவான பொருளடைவு, சிறப்புப்பெயர் அகராதி, பாட்டுடைத்தலைவனைப் பற்றிக் கிடைக்கின்ற *31* தனிப்பாடல்கள் ஆகியவற்றுடன் இப்பதிப்பு மிகப் பயனுடைய ஒன்றாக மிளிர்கிறது. எப்படியும் அச்சுப் புத்தகங்களுக்குள் இடம்பிடித்து விடுகின்ற அச்சுப்பிழைப்பேய் இந்த நூலில் நன்றாகவே குடியேறியுள்ளது.

*4.* **சங்கரமூர்த்தி கோவை:** அகப்பொருட்கோவை சிற்றிலக்கியம் என்று கூறப்பட்டாலும் பெருங்காப்பியத்திற்கு நிகரானது. அதனால்தான் "யாவையும் பாடிக் கோவை பாடு" எனப் பழமொழி ஒன்று தோன்றியுள்ளது. ஐந்திணைக் கோவையை உரையெழுதிப் பதிப்பித்தல் எளிய பணி அல்ல. இந்தச் சங்கரமூர்த்தி கோவையை மிகக் குறுகிய காலத்தில் வெளியிட்டாக வேண்டிய கட்டாயம் இதன் பதிப்பாசிரியருக்கு நேர்ந்துவிட்டது போலத் தோன்றுகிறது. அதன் காரணமாகவே இது பிழைமலிந்த பதிப்பாகிவிட்டது. மூலபாட நிச்சயம், சொற்பொருள் உரைத்தல், வரலாற்று விளக்கம், இலக்கிய மரபு, யூகபாடம் கொள்ளல் என்னும் அனைத்து நிலைகளிலும் தவறுகள் இடம்பெற்றுவிட்டன. இப்பதிப்பு வேறோர் இடத்தில்[30] விரிவாகத் திறனாய்வு செய்யப்பட்டுள்ளதால் இங்கு விவரிக்கப்படவில்லை. நிதானமாக நல்ல முறையில் மறுபதிப்புப் பெற வேண்டியதோர் சிற்றிலக்கியப் பதிப்பு இது.

5. **திருக்கீழ்வேளூர் உலா:** இதன் முன்னுரை சுருக்கமாக இருந்தாலும் மிகச் சிறப்பாக உள்ளது. இதுவும் இலக்கியப் பார்வையில் பிழைகள் நிறைந்த பதிப்பு. இந்நூலைப் பற்றியும் மேலே காட்டப்பெற்ற கட்டுரையில்[30] செய்திகள் நிறைய உள்ளதால் இங்கே விரிக்கப்படவில்லை. இதுவும் தவறுகளற்ற பதிப்பாக மீண்டும் வெளியிடப்படவேண்டும்.

*6.* **சுசீல வள்ளல் அம்மானை:** *1880* அடிகளைக் கொண்ட இந்த அம்மானையோடு *66* வெண்பாக்களைக் கொண்ட முருகக் கடவுள் வருக்க வெண்பாவையும் இணைத்து நிறைய அகராதிகளையும் சேர்த்து மிகச்சிறப்பாக இந்நூல் வெளியிடப்பட்டுள்ளது. மிகத் தெளிவான பதிப்புரை, கதைச் சுருக்கம், அச்சில் வந்துள்ள அம்மானை நூல்களின் பட்டியல் முதலியவற்றோடு சுசீல வள்ளல் அம்மானை மிக நன்றாகப் பதிப்பிக்கப்பட்டுள்ளது.

இத்துடன் இணைக்கப்பட்டுள்ள வருக்கவெண்பா இறுதியில் முடிவெடுத்து அவசர அவசரமாக எழுதிச் சேர்க்கப்பெற்றது போலத் தோன்றுகிறது. ஏனெனில் அம்மானையிலுள்ள பதிப்புச் சீர்மையை இதில் காண முடியவில்லை.

பொதுவாகத் தமிழக அரசின் தொல்பொருள் துறையின் பதிப்புக்களைப் பார்க்கும்போது அவை நல்ல தாளில் அழகாக அச்சிடப்பெற்று மிகக்க குறைந்த விலையில் வழங்கப்பட்டுள்ளன. இது மிகப் பாராட்டிற்குரியது. இத்துறையின் பதிப்புத்தரம் ஒரே மாதிரியாக அமைவதில்லை என்று கூறலாம்.

**12. திருவாமாத்தூர்க் கௌமார மடாலயம்**

வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகளின் சமாதிக் கோயில் அமைந்துள்ள இடம் இது. இதுவரை வெளிவந்துள்ள அவருடைய நூல்கள் எல்லாமே இந்தத் திருமடத்தின் ஒத்துழைப்பால் தான் வெளிவந்துள்ளன. சுவாமிகளின் பேரர் திரு. தி.செ. முருகதாச ஐயா, அவர் மைந்தர் புலவர் திரு. தி.மு. சங்கரலிங்கம் ஆகிய இருவரும் சுவடி பெயர்த்தெழுதுதலில் வல்லவர்களாகவும், செய்யுள் இயற்றும் ஆற்றல் உள்ளவர்களாகவும் விளங்கினர்.

சுவாமிகளின் நூல்களைப் பதிப்பிப்பது இங்கு எப்போதுமே ஓர் இலக்கியப்பணியாகக் கருதப்பெற்றதில்லை. திருமடத்தின் ஒவ்வொரு சிறப்பு நிகழ்ச்சியின் போதும் ஏதாவது ஒரு நூலை அச்சிடுவது என்பது சமயச் சடங்குகளில் ஒன்றாகவே ஆகிவிட்டது. நிகழ்ச்சிக்குப் பத்துப் பதினைந்து நாளுக்கு முன்பு, ஏதாவது ஓர் அன்பர் வழங்கியுள்ள தொகைக்குள் எந்த நூலைப் போடமுடியுமோ அதைப் போடுவதுதான் நடைமுறை. ஓலைச் சுவடியில் ஒரு படியாக இருந்த நூலைப் பலர் படிப்பதற்கேற்றவாறு காகிதப்படிகளாகப் பெருக்குவதுதான் நோக்கம். அந்தப் புத்தகத்தைப் பெற்றுக் கொண்டு செல்பவர்களில் 5 விழுக்காட்டினராவது ஒரு முறையாவது படித்துப் பார்ப்பார்களா .என்பது ஐயமே. இந்தக் காரணங்களால் இங்குச் சுவடிப் பதிப்பு நெறிமுறைகளை எதிர்பார்க்க முடியாது. இவ்வாறு வெளியான நூல்கள்தான் - பெரும்பாலும் *300, 400* ரூபாய் செலவில் போடப்பட்டவை - எண்ணிக்கையில் அதிகம்.

என்றாலும் உரிய கவனம் எடுத்துக்கொண்டு மூல பாடத்தை நன்றாகக் கொடுத்த பதிப்புகளும் இல்லாமலில்லை. இங்கே இருப்பது எல்லாம் வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் அவர்களே தம் கையால் எழுதிவைத்துள்ள அவர் படைப்புகள் மட்டுமே. (ஓரிரண்டு சுவடிகள் வேறு கையெழுத்தாக இருக்கலாமோ என இப்போதைய ஆய்வுகளால் ஐயம்

தோன்றியுள்ளது.) இந்நூல்களை எல்லாம் ஊர்வாரியாகவும், நூல்வாரியாகவும் பிரித்து அவற்றை ஊர்ப்பெயரும் நூற்றொகையும் என இம்மடாலயம் *1964*இல் அட்டவணையிட்டு வெளியிட்டுள்ளது. சுவாமிகளின் நூல்களைப் பற்றித் தெரிந்து கொள்ள இப்பதிப்பு ஒரு நல்ல கையேடாகப் பயன்படுகிறது.

திருச்செந்திற்கோவை *(1925)*, மயிலாசலக் கலம்பகம் இரண்டாம் பதிப்பு *(1925)*, புலவர் புராணம் மூன்றாம் பதிப்பு *(1931)*, திருவாமாத்தூர்ப் புராணம் *(1965)*, குன்றக்குடிக் கலம்பகம் *(1968)*, வருக்கக்குறள் மூலமும் உரையும் *(1988)*, ஆகியன இம்மடாலய வெளியீடுகளில் குறிப்பிடத்தக்கன ஆகும்.

திருச்செந்தூர்க்கோவை, கௌமார விஜயம், கௌமாரத் தொகை ஆகிய மூன்று நூல்களையும் ஒரே புத்தகமாகப் பதிப்பித்துள்ளனர். *1925*ஆம் ஆண்டுப் பதிப்புகளைப் போலவே இதில் பாடல்கள் சந்தி பிரிக்காமலும், யாப்பிற்கேற்பச் சீர்களும் பிரிக்கப்படாமலும் அமைந்துள்ளன. அப்பொழுது நூல்களை அப்படித்தான் பதிப்பித்தார்கள் - படிப்பவர்கள் பொருளும் யாப்பும் உணர்ந்து படித்தார்கள். இப்போது தமிழ்க்கல்வி மிக வளர்ந்துவிட்டதால் நம்மனோரால் அத்தகைய பதிப்புகளால் பயன் கொள்ள முடியவில்லை. அக்காலப் பதிப்பு முறைப்படி இது ஒரு நல்ல பதிப்பு. மற்றொன்றும் சொல்ல வேண்டும். பழைய பதிப்புகளில் அச்சுப்பிழை என்பது மிகமிகக் குறைவு. மூன்று நூல்களில் தரமான மூலப்பதிப்பு இது.

இதே ஆண்டு வெளியான மயிலாசலக் கலம்பகத்தின் இரண்டாம் பதிப்பும் மேற்கூறிய பதிப்பைப் போன்றதே. *1965*ஆம் ஆண்டு வெளியான திருவாமாத்தூர்ப் புராணத்தின் *2*ஆம் பதிப்பு ஒன்றுதான் இம் மடாலயத்திலிருந்து வெளியான ஓரளவு இலக்கிய ஆய்வுத் தன்மை வாய்ந்த பதிப்பாகும். இதில் தலத்திற்குரிய திருமுறைப்பாடல்கள், அக்கோயில் கல்வெட்டுக்கள் இணைக்கப்பெற்று சுமாரான முன்னுரையையும் சுருக்கமான உரைக்குறிப்புக்களையும் கொண்டுள்ளது. செய்யுள் முதற்குறிப்பகராதி, அருஞ்சொல் அகரநிரல் போன்றவை கொடுக்கப்படவில்லை. இக்கால முறைப்படி சந்திகளும் சீர்களும் பிரித்துக் கொடுக்கப்பட்டுள்ளன. பொதுவாக இது ஒரு நல்ல பதிப்பு.

குன்றக்குடிக் கலம்பகம் ஒரு நல்ல மூலநூற் பதிப்பு. இத்தலத்திற்குரிய அகத்துறை வண்ணம் ஒன்று, வகுப்புகள் *6*, பதிகங்கள் *4* இதில் இணைக்கப்பட்டுள்ளன. வண்ணப்பாடல்கள் மிகுந்த இப்பதிப்பு யாப்புக் கண்ணோட்டத்தில் ஒரு நல்ல மூலப் பதிப்பாகவே விளங்குகிறது. தண்டபாணி சுவாமிகள்,

*"முற்றுணர்ந்தேம் எனும்இறுமாப் பெனக்கின்றே*
*எனினும்வண்ண முறைமை மட்டில்*
*சற்றும்எனைச் சார்ந்தோர்க்கும் சந்தேகம் இன்று"*[31]

என்பார். இந்தப் பதிப்பு அதை மெய்யாக்கிவிட்டது எனலாம்.

மொழிமுதல் எழுத்துக்களைக் கொண்டு தொடங்கும் குறள் வெண்பாக்களாலான வருக்கக்குறள் என்னும் நூல் சோழவந்தான் கந்தசாமி சுவாமிகளின் உரையுடன் *1988*இல் பதிப்பிக்கப்பட்டுள்ளது. பயனுள்ள இப்பதிப்பில் அச்சுப்பிழைகள் ஏராளம். ஆண்டு குறிப்பிடப்படாத தனிப்பாடல் திரட்டும் தண்டபாணி சுவாமிகளைப்பற்றி அறிந்துகொள்ள உதவும் நல்ல பதிப்பாக அமைந்துள்ளது.

பொதுவாகக் கூறுமிடத்துத் திருவாமாத்தூர்க் கௌமார மடாலயப் பதிப்புகளில் மிகப் பெரும்பாலானவை பதிப்பு நெறிமுறைகளைப் பற்றிச் சிந்திக்காத சுவடிநூற் பாதுகாப்புப் பதிப்புகளே எனலாம்.

## 13. திருவாவடுதுறை ஆதீனம்

*16*ஆம் நூற்றாண்டிலிருந்து இன்றுவரை உண்மையான தமிழ் வளர்ச்சிக்குத் தமிழ்நாட்டுச் சைவத் திருமடங்கள் ஆற்றிவரும் சுயவிளம்பரமற்ற நற்பணிகள் மொழிவளர்ச்சியில் நாட்டமுள்ள நல்லோர்களால் போற்றத்தக்கன. மாதவச் சிவஞான முனிவர், அவர் மாணவர் பன்னிருவர், மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளையவர்கள், அவர்தம் மாணவர்கள், அவர்களிலும் குறிப்பாகச் சுவடிப்பதிப்பின் கலங்கரை விளக்கமான தமிழ்த் தாத்தா முதலிய மிகப் பலரும் துறைசையாதீனத்தின் கொடையே.

துறைசையாதீனம் இதுவரை ஏறக்குறைய *400* நூல்களை வெளியிட்டுள்ளது. இவற்றுள் மிகப் பெரும்பாலானவை ஓலைச்சுவடிப் பதிப்புகள் அன்று. திரு. பொன்னோதுவா மூர்த்திகள், த.ச. மீனாட்சி சுந்தரம்பிள்ளை, மகாவித்வான் தண்டபாணி தேசிகர் ஆகியவர்கள் இவ்வாதீனத்தின் சிறப்புப் பெற்ற பதிப்பாசிரியர்கள் ஆவர். இவ்வாதீனப் பதிப்புகள் சாத்திர தோத்திர நூல்களைக் கற்க விரும்புபவர்களை மட்டுமே கருதி அமைவனவாகத் தோன்றுகின்றன. இப்பதிப்புக்களில் சுவடிகள் பற்றிய விவரங்களோ, பதிப்பு முயற்சியோ விரிவாகக் குறிப்பிடப்படுவதில்லை. எனினும் எடுத்துக்கொண்ட நூல் நுவல் பொருளைக் கற்போருக்குத் தெளிவாக விளக்குவதில் இப்பதிப்புகள் சிறந்து விளங்குகின்றன.

## 14. பவானந்தர் கழகம், சென்னை.

காவல்துறையில் உயர் அலுவலராகப் பணியாற்றிய இராவ்பகதூர் சரவண பவானந்தம் பிள்ளையவர்கள் *1916*இல் தொல்காப்பியம் பொருளதிகாரம், நச்சர், பேராசிரியர் உரையைப் பதிப்பித்துள்ளார். இவரே பவானந்தர் கழகத்தை நிறுவினார். யாப்பருங்கல விருத்தி, இறையனார் அகப்பொருள் முதலிய இலக்கண நூல்கள் இக்கழகத்தின் பதிப்புகளில் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கன ஆகும்.

## 15. பிரெஞ்சிந்திய நிறுவனம், பாண்டிச்சேரி.

இந்த நிறுவனமும் பல சுவடிகளைச் சேகரித்துப் பல சுவடிப் பதிப்புகளை வெளியிட்டுள்ளது. அவற்றில் *1984, 1986*ஆம் ஆண்டுகளில் வெளியிடப்பெற்ற தேவாரம் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கது. இதனைப்பற்றித் தமிழ் அறிஞர் திரு.தி.வே. கோபாலய்யர், "பொருள் புலப்பாடு ஒன்றனையே பெரிதாகக் கருத, இப்பதிப்புகளோடு (இந்நாள் வரை பதிப்பாகியுள்ள தேவாரப் பதிப்புகளோடு) கிட்டிய பல ஓலைச்சுவடிகளையும் நோக்கி நல்ல பாடங்களை ஏற்றுச் சொற்களைப் பொருள் புலப்பாட்டுக்கு இழுக்கு வராத வகையில் பிரித்துத் தேவையான நிறுத்தக்குறியீடுகளை இட்டு முதல் தொகுதியாக *1984*இல் ஞானசம்பந்தர் தேவாரமும் அடுத்த தொகுதியாக *1986*இல் நாவுக்கரசரும், சுந்தரரும் அருளிய தேவாரமும் புதுவை பிரெஞ்சு இந்தியக்கலை நிறுவனத்தாரால் பதிப்பிக்கப்பட்டுள்ளன"[32] என்று கூறுகிறார்.

இந்த நிறுவனம் முதல் ஐந்திலக்கணம் ஆகிய வீரசோழியத்திற்கு ஓர் ஆராய்ச்சிப் பதிப்பை வெளியிட உள்ளதாகத் தெரிகிறது.

## 16. பேரூர் தவத்திரு சாந்தலிங்க அடிகளார் தமிழ்க்கல்லூரி, கோயமுத்தூர்.

பெரும்புலவர் எழுமாத்தூர் திரு. வே.ரா. தெய்வசிகாமணிக் கவுண்டர் அவர்கள் கொங்குநாட்டுப்பகுதிகளில் மிகப் பாடுபட்டுத் தேடி நிறைய ஓலைச்சுவடிகளைத் தொகுத்து வைத்திருந்தார்கள். அவர்கள் காலமானபிறகு ஒரு வாரம் எழுமாத்தூரிலேயே தங்கி *1977*ஆம் ஆண்டு அவர் இல்லத்திலிருந்த சுவடிகளைப் பட்டியலிட்டேன். அப்போது அங்கு இருந்த சுவடிகளின் எண்ணிக்கை *374*. இதற்கு ஏற்பாடு செய்தவர்கள் சாந்தி டிரஸ்ட் நிறுவனர் தாசநாயக்கன்பாளையம் திரு. என்.வி. நாயுடு அவர்களும் தமிழ்நாடு உயர்நீதிமன்ற நீதிபதி மேதகு. ஆர். செங்கோட்டுவேலன் அவர்களும் ஆவர். பட்டியலிடப்பட்ட பிறகு அச்சுவடிகள் அனைத்தும் பாதுகாப்பிற்காகவும், மேலாய்விற்காகவும், வெளியீடுகளுக்காகவும் திருப்போரூர் சாந்தலிங்கர்

திருமடத்திற்குக் கவுண்டர் ஐயா அவர்களின் குமாரர் திரு. திருநாவுக்கரசு அவர்களால் நன்கொடையாக வழங்கப்பட்டுப் பேரூர்த் தமிழ்க்கல்லூரிக்குக் கொண்டு வரப்பட்டன. இதுதான் தவத்திரு சாந்தலிங்க அடிகளார் தமிழ்க்கல்லூரியில் தமிழ்ச்சுவடிகள் சேர்ந்த வரலாறு. அச்சுவடிகள் அங்கு இன்னும் பாதுகாக்கப்பெற்று வருகின்றன.

ஆனால் கவுண்டர் ஐயா அவர்களின் சுவடிகள் இங்கு வருவதற்கு முன்பே திருப்பேரூராதீனத்தின் பதிப்புப்பணி தொடங்கிவிட்டது எனலாம். கவுண்டர் ஐயா அவர்களே பதிப்பித்த வாலசுந்தரக் கவிராயரின் கொங்கு மண்டல சதகம், புறப்பாட்டுரை ஆகிய இரு நூல்களும் இவ்வாதீன வெளியீடுகளே. அவற்றைப் பற்றிச் சுருக்கமாகக் காண்போம்.

**கொங்குமண்டல சதகம்:** வாலசுந்தரக் கவிராயரின் கொங்குமண்டல சதகப் பதிப்பிற்கு ஆதாரமாக இருந்த சுவடிகளைப்பற்றிக் கவுண்டர் ஐயா அவர்கள் "பழைய கோட்டை அரண்மனையிற் கிடைத்த ஏட்டுப் பிரதி ஒன்றும், வெள்ளோடு சாமிநாதப் புலவர் எழுதி வைத்திருந்த குறைப்பிரதியொன்றும் பூந்துறை நாட்டுக் கொல்லம்பட்டப் புலவர் வீட்டிற் கிடைத்த குறைப்பிரதியொன்றும், திருச்செங்கோடு முத்துசாமிக் கோனாரவர்களின் காகிதக் கையெழுத்துப் பிரதிகள் மூன்றும் ஆகிய ஆறு பிரதிகளின் உதவிகொண்டு இந்நூல் பரிசோதிக்கப்பெற்றது. இந்நூற்பாக்களில் சில வேற்றுத்தளை விரவியும், சொல்லிலக்கணம் சிதைந்தும் காணப்படுகின்றன. அவற்றை உள்ளவாறே வெளியிடலாயிற்று"[33] என்கிறார். இந்த நூல் முதன் முதலாகத் தமிழ்க் கல்லூரியின் ஆண்டு மலரில் *(1970)* வெளியிடப்பட்டது. அடுத்து *1971*ஆம் ஆண்டில் தனி நூலாகப் பதிப்பிக்கப்பெற்றது. கார்மேகக் கவிஞர், கம்பநாத சுவாமிகள் ஆகிய இருவரின் கொங்குமண்டல சதகத்துடன் இணைத்துக் கொங்குமண்டல சதகங்கள் என்னும் பெயரோடு இக்கல்லூரியால் *1986*ஆம் ஆண்டு மீண்டும் பதிப்பிக்கப்பெற்றுள்ளது.

**புறப்பாட்டுரை**

இந்தப் பதிப்பின் தோற்றம் பற்றித் திரு. தெய்வ சிகாமணிக் கவுண்டர் அவர்கள், "சுமார் *40* ஆண்டுகளின் முன்பு (இது *24.8.1976* அன்று எழுதப்பெற்றது) வித்துவான் திரு. சிவன்பிள்ளை அவர்கள் வீட்டில் கிடைத்த ஏட்டுப் பிரதிகள் இரண்டு. அவற்றுள் ஒன்று புறப்பாட்டு மூலமும் உரையுமாக இருந்தது. இவற்றுள் முந்தியது மிகவும் சிதைந்து இருந்தது. பிந்தியதே சிதையாமல் கிடைத்தது. புறநானூற்றின் சாரமானதும், பழைய தொகுப்பானதும் ஆகிய இந்நூலை அழியாமல் வெளிவரச் செய்யவேண்டுமென எண்ணிக் காகிதத்தில் பிரதி செய்வித்துப் பரிசோதித்து வைத்திருந்தேன். இந்நூலை

ஏட்டிலிருந்து பிரதிசெய்ய உடனிருந்து உதவியவர் திரு.வே.ரா. நடராஜன் எம்.எஸ்.ஸி. அவர்கள். இந்நூல் திருத்தமுறக் காகிதத்தில் மறுபிரதி செய்ததற்கும் ப்ரூப் பார்த்ததற்கும் உதவி புரிந்தவர்கள் பேரூர் சாந்தலிங்கர் தமிழ்க் கல்லூரிப் பேராசிரியர்கள் திரு. ந. முத்துக்குமாரசாமி எம்.ஏ., பி.எல்., திரு. சென்னியப்பன் எம்.ஏ., கோவை நிர்மலா கல்லூரிப் பேராசிரியை திருமதி ந. சுப்புலட்சுமி எம்.ஏ.,பிஓஎல். ஆகிய மூவர்."[34] எனக் குறிப்பிட்டுள்ளார். இந்நூல் சாந்தி ட்ரஸ்ட்டால் வெளியிடப்பட்டிருப்பினும், இதன் உருவாக்கத்தில் உழைத்தவர்கள் இக்கல்லூரிப் பேராசிரியர்கள் என்பதாலும், இந்நூல் உரிமைகள் அனைத்தும் கல்லூரிக்கே அளிக்கப்பட்டுள்ளதாலும் புறப்பாட்டுரைப் பதிப்பை இத் தமிழ்க்கல்லூரியின் பதிப்பாகவே கொள்ளலாம்.

## கம்பநாத சுவாமிகள் கொங்குமண்டல சதகம்

திரு. தெய்வசிகாமணிக் கவுண்டர் தொகுப்பிலிருந்த நூல்களுள் ஒன்று கம்பநாத சுவாமிகளின் கொங்குமண்டல சதகம். இது எழுதப்பெற்றிருந்த சுவடி மிகவும் செல்லரிக்கப் பெற்றிருந்ததால் புலவர் சில கைப்பிரதிகளையும் எழுதி வைத்திருந்தார். இதற்குரிய பாடல்கள் *30* கட்டளைக் கலித்துறைகள் மட்டுமே அவற்றைக் கவுண்டரவர்கள் குறித்து வைத்திருந்த பாட பேதங்களோடு இக்கரை போளுவாம்பட்டி ஐ. இராமசாமி அவர்கள் செப்பனிட்டுக் கொடுக்கப் பேரூர்த் தமிழ்க்கல்லூரி *1986*இல் மற்ற இரு கொங்குமண்டல சதகங்களோடு சேர்த்துக் கொங்குமண்டல சதகங்கள் என்னும் பெயரில் வெளியிட்டுள்ளது. இப்புத்தகத்தில் அடங்கியுள்ள மூன்று கொங்கு மண்டல சதகங்களில் இரண்டு இவ்வாதீனத்தின் முதல் பதிப்புகள் என்பது குறிப்பிடத்தக்கது.

திருப்பேரூராதீனம் மைய அரசின் நல்கையையும் தனியார் நிதிஉதவியையும் பெற்று ஒருமுறை சுவடிப் பாதுகாப்புப் பட்டறையையும் ஒரு முறை சுவடி பெயர்த்தெழுதும் பயிலரங்கத்தையும் சிறப்பாக நடத்தியுள்ளது.

மதுரை காமராசர் பல்கலைக்கழகம் திருக்குறள் உரைவளத்தைப் பதிப்பித்தபோது இக்கல்லூரிச் சுவடி நூலகத்திலிருந்த திருக்குறள் உரைச் சுவடிகள் அனைத்தையும் மகாவித்வான் ச. தண்டபாணி தேசிகர் அவர்கள் வழியாக அப்பல்கலைக்கழகத்திற்கு இவ்வாதீனம் வழங்கியது.

இங்கு இலக்கண சூடாமணி என்னும் யாப்பு நூல் இரண்டு சுவடிகளில் உள்ளன. இரண்டும் மூலமும் உரையுமாக உள்ளன. இரண்டினுள் ஒன்று ஓரளவு நல்ல நிலையிலும் மற்றொன்று மிகச் சிதைந்தும் இருக்கின்றன. இச்சுவடிகளின் அடிப்படையில், பேரூர்த் தமிழ்க்கல்லூரி முதல்வர் முனைவர் ர. வையாபுரி அவர்களை நெறியாளராகக் கொண்டு த. இரமணி என்னும் மாணவி கோவை பாரதியார் பல்கலைக்கழகத்தின் எம்.பில் ஆய்வுப் பட்டம் பெற்றுள்ளார். தமிழ்ப்

பல்கலைக்கழகத்தின் ஓலைச்சுவடித்துறையிலிருந்த சுவடியின் அடிப்படையில் இலக்கண சூடாமணியை முனைவர் சா. கிருட்டினமூர்த்தி அவர்கள் செம்பதிப்பாகப் பதிப்பித்தபோது பேரூராதீனம் தன் சுவடிகளையும் ஆய்வேட்டையும் பதிப்பில் பயன்கொள்ள அனுமதித்தது.

இவ்வாறே இச்சொற்பொழிவாளர் இப்போது கிடைக்கும் அகத்துறை வண்ணப் பிரபந்தங்கள் அனைத்தையும் திரட்டி வண்ணப்பெருந்திரட்டு என்னும் பெயரில் தஞ்சை, சரசுவதி மகாலுக்குப் பதிப்பிப்பதற்காக அளித்த போதும் *(1995*இல்*)* இவ்வாதீனச் சுவடி நூலகத்தில் இருந்த எல்லா வண்ணங்களையும் படியெடுத்துக்கொள்ள அனுமதி வழங்கியது. இவ்வாறாகப் பேரூர்த் தமிழ்க்கல்லூரி தானே சுவடிப்பதிப்புகளை வெளியிடுவதுடன் இத்துறையில் ஈடுபடும் ஆய்வாளர்களுக்கும் தன்னிடம் உள்ள ஓலைச்சுவடிகளை வழங்கிப் பேருதவி புரிந்துவருகிறது.

## 17. மதுரைத் தமிழ்ச்சங்கம்

பாலவனத்தம் பெருநிலக்கிழார் பாண்டித்துரைத் தேவர் அவர்கள் இராமநாதபுர மன்னர் பாஸ்கர சேதுபதியின் துணைகொண்டு *1901*ஆம் ஆண்டு செப்டம்பர்த் திங்கள் பதினான்காம் நாளன்று மதுரையில் தமிழ்ச் சங்கத்தை நிறுவினார். இங்கிருந்த பேரறிஞர்களின் தகுதியாலும், இச்சங்கம் தமிழ் வளர்ச்சிக்காகச் செய்துள்ள நிலையான மெய்ப்பணிகளாலும் மதுரைத் தமிழ்ச்சங்கத்தை நான்காம் சங்கம் என்றே போற்றுவர்.

இச்சங்கத்தின் வழியாகச் சுவடிப்பதிப்பில் ஈடுபட்டிருந்த சான்றோர்களின் பெயரைக் கேட்டாலே இதன் பெருமை உள்ளங்கை நெல்லிக்கனி என விளங்கும். மகாவித்துவான் ரா. ராகவையங்கார், மு. இராகவையங்கார், நாராயணையங்கார், சேற்றூர்ச் சுப்பிரமணியக் கவிராயர், திரு. கி. இராமாநுஜையங்கார் முதலியோர் மதுரைத் தமிழ்ச்சங்கச் சான்றோர் ஆவர். தமிழ்த்தாத்தா டாக்டர் உ.வே.சாமிநாதையர் அவர்களும், ஆராய்ச்சிப்பேரறிஞர் பேரா. வையாபுரிப்பிள்ளை அவர்களும், இச்சங்கத்தின் வழியாகச் சில நூல்களைப் பதிப்பித்துள்ளனர்.

தமிழ் ஆய்விற்கு வசதியாக இச்சங்கத்தில் பாண்டியன் புத்தகசாலை என நூலகம் ஒன்று நிறுவப்பட்டது. அதில் அச்சு நூல்களும் ஓலைச்சுவடிகளும் தொகுக்கப்பெற்றன. மதுரைத் தமிழ்ச்சங்கம் *1903*ஆம் ஆண்டில் செந்தமிழ் என்று ஒரு மாதப் பத்திரிகையைத் தொடங்கியது. இந்த இதழின் வழியாகப் பல இலக்கியங்களும், ஆய்வுக் கட்டுரைகளும், பேரிலக்கியங்களின் பாடபேதங்களும், வரலாற்றுச் செய்திகளும் வெளியாயின. பதிப்புப் பணிகளுக்கு

வசதியாக தமிழ்ச்சங்க முத்திராசாலை என அச்சகம் ஒன்றும் இச்சங்கத்தில் நிறுவப்பெற்றது.

பல ஆண்டுகளுக்கு முன்னால் இச்சங்கத்தில் ஏற்பட்ட விபத்து ஒன்றினால் ஏராளமான சுவடிகளும், காகிதக் கையெழுத்துப் படிகளும், அச்சு நூல்களும் தீக்கிரையாகிவிட்டன என்பது மிகப்பெரிய இழப்பாகும். எஞ்சிய சில சுவடிகள் இப்போதும் மதுரைத் தமிழ்ச்சங்கத்தில் போதிய பாதுகாப்போ, பெயர்த்தெழுதுதல் முதலிய வளர்ச்சிப் பணிகளோ இன்றிச் சிதைந்து வருகின்றன. இந்த ஓலைச்சுவடிகள் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், கீழ்த்திசைச் சுவடிநூலகம், தஞ்சை, சரசுவதி மகால் நூலகம், தமிழ்ப் பல்கலைக்கழகம் போன்ற நிறுவனங்களுள் ஏதாவது ஒன்றில் வைத்துப் பாதுகாக்கப்பட்டால் தமிழாய்விற்குப் பயனுடையதாக இருக்கும். உரியவர்கள் இத்துறையில் சிந்தனையைச் செலுத்துவது நல்லது.

மதுரைத் தமிழ்ச்சங்கத்தின் சுவடிப்பதிப்புகள் செந்தமிழ் இதழில் வெளிவந்த பிறகு தனி நூலாக மீண்டும் வெளியிடப்பெற்றவை செந்தமிழ்ப் பிரசுரம் என்றும், தனியாகவே பதிப்பிக்கப் பெற்றவை சங்கப் பிரசுரம் என்றும் குறிப்பிடப்பட்டுள்ளன. இரண்டும் மதுரைத் தமிழ்ச் சங்கப் பதிப்பே ஆதலின் இக்கட்டுரையில் அவற்றை வேறுபடுத்திப் பார்க்கவில்லை. திரு.மோ. கோ. கோவைமணி செந்தமிழ் இதழில் சுவடிப்பதிப்புகள் என்னும் கட்டுரையில்[35] செந்தமிழ்ப் பிரசுரங்களை முழுமையாகத் தொகுத்தளித்துள்ளார். மதுரைத் தமிழ்ச் சங்கப்பதிப்புகளில் சிலவற்றை நோக்குவோம்.

இரணியவதைப்பரணி, கடம்பர் கோயில் உலா, கலைசைக் கோவை, கீழ்வேளூர் உலா, கூடற்புராணம், சிராமலைக்கோவை, திருச்சிறு புலியூர் உலா, திருவாரூர் உலா, சிதம்பரப்பாட்டியல், *(மாறன்)* பா பாவினம், பிரபந்த தீபிகை, மாறன் அகப்பொருளும் திருப்பதிக் கோவையும், மாறனலங்காரம், தேவையுலா, திருவருணைக் கலம்பகம், திருக்கலம்பகம், தொல்காப்பியம் செய்யுளியல் நச்சர் உரை முதலியன குறிப்பிடத்தக்க பதிப்புகள் ஆகும்.

## இரணியவதைப் பரணி

நூலாசிரியர் பெயர் அறியப்பெறாத இப்பிரபந்தம் செந்தமிழ் இதழின் பதினைந்தாவது தொகுதியின் *5* பகுதிகளில் *(1916-17)* சு. நல்லசிவன்பிள்ளை அவர்களால் முதன்முதலில் பதிப்பிக்கப்பெற்றது. அவர், "இது மதுரைத் தமிழ்ச்சங்கத்தைச் சார்ந்த பாண்டியன் புத்தக சாலையில் இதுவரை அச்சுக்கு வாராத தமிழ் நூல்களுட் பரிசோதிக்க இயலாது ஒரே பிரதியாய் ஏட்டிற் சிதைவடைந்து இருப்பதால் அதன் சொரூபமழியாது பாதுகாக்கக் கருதி

இருந்தபடியே வெளியிடப்படுகிறது” எனக் கூறியுள்ளார். இந்நூல் மதுரைத் தமிழ்ச் சங்கத்தால் தனி நூலாக வெளியிடப்பட்டதாகத் தெரியவில்லை. *1904*ஆம் ஆண்டில் மகாவித்வான் பீளமேடு மு.வேணுகோபாலசாமி நாயுடு அவர்கள் ஓர் ஓலைச்சுவடியிலிருந்து படியெடுத்து வைத்திருந்த காகிதப் பிரதியின் அடிப்படையில் அறிஞர் நா. வரதராஜுலு நாயுடு அவர்கள் இந்த இரணியவதைப் பரணியை *1976*ஆம் ஆண்டு சாந்தி ட்ரஸ்ட் வெளியீடாகப் பதிப்பித்துள்ளார்.

**கடம்பர் கோயில் உலா**

*1932*ஆம் ஆண்டில் டாக்டர் உ.வே.சா. இவ்வுலாவைக் குறிப்புரையுடன் செந்தமிழ் இதழில் வெளியிட்டார். அடுத்துச் செந்தமிழ்ப் பிரசுரம் *59* ஆக அதே ஆண்டு தனிநூலாக வெளியிடப்பட்டது. இப்பதிப்பு திருவாவடுதுறை ஆதீனத்திலிருந்து அவர் பெற்ற ஓலைச்சுவடியின் அடிப்படையில் அமைந்தது ஆகும்.

**கலைசைக் கோவை**

தொட்டிக்கலை சுப்பிரமணிய முனிவரால் இயற்றப்பெற்ற அகப்பொருட்கோவையாகிய கலைசைக்கோவை செந்தமிழ் இதழின் *31, 32*ஆம் தொகுதிகளில் டாக்டர் உ.வே.சா. அவர்களால் குறிப்புரை முதலியவற்றுடன் வெளியிடப்பெற்றது. திருவாவடுதுறை ஆதீனச் சுவடியோடு வேறு சில சுவடிகளும் இப்பதிப்பிற்கு ஆதாரமாக அமைந்தன. இந்த ஐந்திணைக்கோவை செந்தமிழ்ப் பிரசுரம் *61* ஆக *1935*ஆம் ஆண்டு தனி நூலாக வெளியிடப்பட்டது.

**கீழ்வேளூர் உலா**

அந்தகக்கவி வீரராகவ முதலியாரால் இயற்றப் பெற்றுள்ள இந்த உலா செந்தமிழ் இதழின் *24*ஆம் தொகுதியில் *(1926)* குறைநூலாகத் திருவாரூர் சோமசுந்தர தேசிகரால் பதிப்பிக்கப்பட்டுள்ளது. இதில் *403* கண்ணிகளே உள்ளன; தெரிவை, பேரிளம் பெண்ணிற்குரிய பகுதிகள் சிதைவுற்றன. இது குறைநூலாதலின் தனியாகப் பதிப்பிக்கப்படவில்லை போலும்.

உ.வே.சா. நூலகச் சுவடி ஒன்றிலிருந்து பிரதி செய்யப்பெற்று இப்பிரபந்தம் தமிழக அரசு தொல்பொருள் துறையினரால் *1981*இல் பதிப்பிக்கப்பெற்றுள்ளது. இதில் பழைய பதிப்பைப் பெற்ற செய்திகள் எதுவுமே இல்லை.

### கூடற்புராணம்

மதுரைப் பெருநகரத்தின் மையப்பகுதியில் உள்ள கூடலழகப்பெருமாள் திருக்கோவிலின் வரலாற்றைக் கூறுவதும் ஆசிரியர் பெயர் அறியப்பெறாததுமாகிய கூடற்புராணம் என்னும் தலபுராணம் *1922-23*ஆம் ஆண்டுகளில் செந்தமிழ்ப் பத்திரிகையில் அவ்விதழின் உதவி ஆசிரியராகிய கி. இராமாநுஜையங்கார் அவர்களால் வெளியிடப்பட்டது. பிறகு *1929*ஆம் ஆண்டு செந்தமிழ்ப் பிரசுரம் *52* ஆகத் தனிநூலாகவும் வெளியிடப்பட்டுள்ளது. அதில் "இக்கூடற்புராணம் இம்மதுரைத் தமிழ்ச் சங்கத்துப் பாண்டியன் புத்தகசாலைக்குரிய ஒரே ஏட்டுப்பிரதியின் உதவியைக் கொண்டு செந்தமிழ்ப் பிரசுரமாக வெளியிடப்பட்டிருக்கின்றது"[37] என அறிவித்துள்ளார்.

### சிராமலைக்கோவை

இந்த ஐந்திணைக் கோவையின் ஆசிரியர் பெயர் அறியப் பெறவில்லை. இவ்விலக்கியம் செந்தமிழ்த் தொகுதிகளில் *1935, 36, 37*ஆம் ஆண்டுகளில் டாக்டர் உ.வே.சா. அவர்களால் வெளியிடப்பட்டுள்ளது. பிறகு *1937*ஆம் ஆண்டு செந்தமிழ்ப் பிரசுரம் *64*ஆகத் தனி நூலாகவும் வெளியாகியுள்ளது. திருவாவடுதுறை ஆதீனச் சுவடி ஒன்று, திருநெல்வேலி சாலிவாடீசுவர ஓதுவார் வீட்டுச் சுவடி ஒன்று ஆகிய இரு ஓலைச்சுவடிகள் இப்பதிப்பிற்கு ஆதாரமாக அமைந்துள்ளன.

### திருச்சிறுபுலியூர் உலா

ஆசிரியர் பெயர் அறியப்பெறாத இவ்வுலாப் பிரபந்தமும் கி. இராமாநுஜ அய்யங்கார் அவர்களால் செந்தமிழ்ப் பத்திரிகையில் *1949-50*ஆம் ஆண்டுகளில் பிரசுரிக்கப்பெற்று, *1951*ஆம் ஆண்டு செந்தமிழ்ப் பிரசுரம் *70*ஆகத் தனியாகப் பதிப்பிக்கப்பெற்றுள்ளது. இது காகிதக் கையெழுத்துப் படியிலிருந்து தோன்றிய பதிப்பாயினும் அதன் மூலம் ஐயமின்றி ஓர் ஓலைச்சுவடியாகத்தான் இருக்க முடியும் என்னும் துணிவாலும், இவ்வுலாப் பதிப்பில் உள்ள வைணவ சமயத்தொடர்பான செய்திகளை இன்றைய ஆய்வாளர்கள் தெரிந்துகொள்ள வேண்டும் என்னும் அவாவாலும் இங்கு இடமளிக்கப்பெற்றது.

### திருவாரூர் உலா

அந்தகக்கவி வீரராகவ முதலியாரால் இயற்றப்பெற்ற இந்த உலாப்பிரபந்தம் செந்தமிழ் இதழில் *1905*ஆம் ஆண்டு தமிழ்த்தாத்தா உ.வே.சா. வால் பதிப்பிக்கப்பெற்றது. இதே சிற்றிலக்கியம் *1925*ஆம் ஆண்டு

செந்தமிழ்ப்பிரசுரம் 16ஆக இரண்டாம் பதிப்பு என்னும் குறிப்புடன் வெளியிடப்பட்டுள்ளது. அதில் உ.வே.சா. எழுதியுள்ள முகவுரையால் முதல் பதிப்பு 1910இல் வெளியானதாக அறிகிறோம்.

திருவாடுதுறை ஆதீனத்துப் பிரதி ஒன்று, மகாவித்துவான். மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்களின் பிரதி ஒன்று, கொட்டையூர் சிவக்கொழுந்து தேசிகர் வீட்டுப் பிரதி ஒன்று, காஞ்சிபுரப் பிரதி ஒன்று என நான்கு ஓலைச்சுவடிகள் இப்பதிப்பிற்கு அடிப்படையாக அமைந்தன.

### சிதம்பரப் பாட்டியல்

புராணத் திருமலைநாதர் மைந்தர் பரஞ்சோதியாரால் இயற்றப்பெற்றுள்ள சிதம்பரப் பாட்டியல் என்னும் பிரபந்த இலக்கணம் 1911ஆம் ஆண்டுவாக்கில் மு. இராகவையங்கார் அவர்களால் முதற்பதிப்பாக வெளியிடப்பெற்றது. பிறகு இதன் திருந்திய இரண்டாம் பதிப்பு கி. இராமாநுஜையங்காரால் 1932இல் வெளியிடப்பட்டுள்ளது. இந்த இலக்கண நூல் சங்கத்தின் நூலகத்தின் மூன்று சுவடிகளைக் கொண்டு பதிப்பிக்கப்பட்டது ஆகும்.

### பன்னிரு பாட்டியல்

மூல நூற்றொகை, ஆசிரியர்கள் முதலியவற்றைப் பற்றி ஆதாரபூர்வமாக அறிய முடியாத இந்தப் பிரபந்த இலக்கணம் 1904 - 1905ஆம் ஆண்டுகளில் பாஷா கவிசேகர மகாவித்துவான் ரா. இராகவையங்கார் அவர்களால் முதல் பதிப்பாக வெளியிடப்பட்டது. 1951ஆம் ஆண்டு வேறு சுவடிகளில் காணப்பெற்ற பிரதிபேதம் முதலியவற்றோடு இராமாநுஜையங்கார் அவர்களால் இரண்டாம் பதிப்பும் வெளியாகியுள்ளது.

“இவ்விரண்டாம் பதிப்பு முடிந்தபின் இதனைக் கண்ணுற்ற முன்னாட் சென்னைப் பல்கலைக்கழகத் தமிழாராய்ச்சித் துறைத்தலைவரும் என் அருமை நண்பருமான ராவ்சாஹிப் திரு. எஸ். வையாபுரிப் பிள்ளையவர்கள் தம்மிடம் உள்ள பன்னிருபாட்டியல் பிரதிகளோடு இவ்விரண்டாம் பதிப்புப் பிரதியினையும் வைத்து ஒப்பு நோக்கித் தாம் கண்ட பிரதிபேதம் முதலியவற்றை அன்புடன் குறித்தனுப்பினார்கள் அவை ஏற்றபெற்றி அடுத்த பதிப்பிற் சேர்த்துக் கொள்ளப்படும்”[38] என்பது இரண்டாம் பதிப்பின் முன்னுரைச் செய்தி, மூன்றாம் பதிப்பு வெளிவந்ததாகத் தெரியவில்லை. வையாபுரியாரின் சுவடியியற் குறிப்புகள் இப்போது மதுரைத் தமிழ்ச் சங்கத்தில் இருக்கிறதா என்பதும் தெரியவில்லை. தமிழ் இலக்கண ஆர்வலர்கள் இதைத் தேடிப் பாதுகாத்தல் மிகச் சிறந்த சிற்றிலக்கிய ஆய்வு அடிப்படைப் பணியாக அமையும்.

## மாறன் பா, பா இனம்

திருக்குருகைப் பெருமாள் கவிராயர் என்னும் பெரும்புலவரால் இயற்றப்பெற்றுள்ள யாப்பியற் சான்றிலக்கியம் மாறன் பா, பா இனம் ஆகும். இது செந்தமிழ்த் திங்கள் இதழில் *1931*ஆம் ஆண்டு திரு. கி. இராமாநுஜையங்கார் அவர்களால் பதிப்பிக்கப்பெற்றுள்ளது. அடுத்து *1932*ஆம் ஆண்டில் அவராலேயே செந்தமிழ்ப் பிரசுரம் *56*ஆகப் பதிப்பிக்கப்பட்டுள்ளது. செந்தமிழ்ப் பதிப்பாசிரியர் திரு. நாராயண அய்யங்கார் அவர்களிடமிருந்து பெற்ற ஒற்றைச் சுவடியே இதற்கு அடிப்படை ஆகும். "இந்நூலின் இறுதிப்பகுதி செந்தமிழில் வெளியிடப்படும் தருணத்தில் இந்நூல் முன்னமே கலாநிலையத்தில் வெளியிடப் பட்டுள்ளதென்றறிந்தேன்"[39] என இதன் பதிப்பாசிரியர் குறிப்பிட்டுள்ளார்.

"இலக்கியம் கண்டதற்கு இலக்கணம் இயம்பல் என்பது போல, இலக்கியம் காட்டி இலக்கணம் விளக்கலாக இந்நூல் *(சிதம்பரச் செய்யுட்கோவை)* முழுதுற இயலுதல் புதியதோர் நூன்முறை உத்தியாகக் கொள்ளலாம். இதற்குப் பிறநூல் எடுத்துக்காட்டுகளிலும் "பாப்பாவினம்" நேரிடைச் சான்றாக இருந்திருக்கக்கூடும். குருபரரின் பிறந்தகமும் *(திரு வைகுண்டமும்)* திருக்குருகைப் பெருமாள் கவிராயர் பிறந்தகமும் *(ஆழ்வார் திருநகரி)* நெல்லை நாட்டில் அணித்தான ஊர்கள் என்பது அறியத்தக்கது"[40] என்பார் அறிஞர் புலவர் இளங்குமரன். செய்யுட்கோவைக்குப் பாப்பாவினம் தூண்டுகோலாக இருந்திருக்கலாம் என்னும் இக்கருதுகோள் மேலாய்விற்கு உரியது.

"பாப்பாவினம் முழுமையாகச் செம்மைப்படுத்தப்பெற்று அரங்கேற்றப்படாமையாலும், அதன் சுவடிப்படிகள் கிடைக்காமையாலும், இன்று வரை இது அதிகம் அறியப்படாத நூலாகவே இருப்பதாலும், குமரகுருபரர் நெடுநாட்கள் தம் பிறந்த ஊரில் இருந்ததாகத் தெரியவில்லையாதலாலும், அவர் இந்நூலைப் பார்த்திருக்க வாய்ப்பில்லை. மிக அதிகமாகப் போனால் இவ்வாறு ஒரு நூல் உருவாகி உள்ளது எனக் கேள்விப்பட்டிருக்கலாம். இந்நிலையில் செய்யுட்கோவைக்குப் பாப்பாவினத்தை நேரிடைச்சான்று எனக் கருத வழியில்லை. பாப்பாவினத்தைக் குமரகுருபரர் பார்த்திருந்தால் செய்யுட்கோவை இன்னும் விரிவாக உருவாகியிருக்கும் என்பது ஒரு தலை."[41]

## பிரபந்த தீபிகை

"மதுரைத் தமிழ்ச்சங்கப் பத்திரிக்கையான செந்தமிழ், பிரபந்த தீபிகையின் முதல் இருபத்தாறு பாடல்கள் *(26*வது பாடலில் ஒன்றரை அடிவரை*)* *1918-19*இல் வந்த *17*ஆவது தொகுதியில் *(பக்கம் 153-158)* முதன் முதல்

வெளியிட்டது."[42] இந்தப் பாட்டியல் நூலின் ஆசிரியர் முத்துவேங்கடசுப்பையர் என்பவர். இந்த நூல் முழுமையாகச் செந்தமிழ் இதழிலோ தனியாகவோ *1982*வரை அச்சேறவில்லை.

சென்னை அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகத்தின் காகிதப் பிரதி ஒன்றின் அடிப்படையில் பேரா. ச.வே.சு., பேரா. அன்னிதாமசு ஆகிய இருவரும் இணைந்து *1982*ஆம் ஆண்டில் இந்தப் பிரபந்த தீபிகையை உலகத் தமிழாராய்ச்சி நிறுவன வெளியீடாகப் பதிப்பித்துள்ளனர். இந்தக் காகிதச்சுவடி மதுரைத் தமிழ்ச்சங்கத்து ஒலை ஏட்டின் படிதான் என்பதையும் இப்பேராசிரியர்கள் குறித்துள்ளனர்.

## மாறன் அகப்பொருளும் திருப்பதிக்கோவையும்

சடையன் என்னும் இயற்பெயர் கொண்ட திருக்குருகைப் பெருமாள்-கவிராயரால் இயற்றப்பெற்ற அகப்பொருள் இலக்கணமும் அதற்கு மேற்கோளாக அவராலேயே யாக்கப்பெற்ற இலக்கியமும் இணைந்த இந்நூல் செந்தமிழ்த் திங்களிதழில் *1928-29, 1931*ஆம் ஆண்டுகளில் வெளியிடப்பெற்று, *1932*இல் தனிப்புத்தகமாகப் பதிப்பிக்கப்பெற்றது. இதன் பதிப்பாசிரியர் செந்தமிழ் உதவிப்பதிப்பாசிரியர் திரு. கி. இராமாநுஜையங்கார்.

"மாறனகப்பொருட் களவியல் வரைவியற் கற்பியற் சூத்திரங்களும் அவற்றுக்கிலக்கியமாயமைந்த திருப்பதிக்கோவையும் வரையப்பட்ட தோரேட்டுச்சுவடி மதுரைத் தமிழ்ச்சங்கத்துப் பாண்டியன் புத்தகசாலையிற் காணப்பட்டது. அவற்றைச் செந்தமிழ் நேயரும் படித்துப் பயனடையுமாறு தனிப்புத்தக உருவிற் செந்தமிழ்ப் பிரசுரமாக வெளியிடலானேன். சங்கத்துப் பிரதியொன்றனையே துணையாகக் கொண்டு முதலில் யான் வெளியிட்ட சில பக்கங்களைக் கண்ணுற்ற மஹாமஹோபாத்யாய தாக்ஷிணாத்ய கலாநிதி ப்ரும்ம ஸ்ரீஉ.வே. சாமிநாதையரவர்கள் தமிழினிடத்தும் தமிழ் கற்பாரிடத்தும் தமக்கியல்பாயமைந்த அன்பின் பெருக்காற் சிறியேனாகிய என்னிடத்தும் அன்பு கூர்ந்து இம்முயற்சியில் யான் ஊக்கமடையுமாறு நிருபமுகமாக ஆசி கூறியதன்றி வேறு பிரதி இருக்குமிடமும் தெரிவித்தார்கள். பின் அவர்கள் குறித்த பிரதியும் சிதம்பரம் ஸ்ரீ இராமாநுஜ தரிசன வித்யாசாலைத் தலைமையாசிரியரான ஸ்ரீமான் மாதவநாயுடு அவர்களிடமிருந்து கிடைக்கப்பெற்றேன். மாறனகப் பொருளைந்தியலும் திருப்பதிக்கோவையும் பூரணமாயமைந்த பிரதியுடையார் கொடுத்துதவுவார்களாயின் இப்பதிப்பில் விடுபட்டவற்றை இரண்டாம் பதிப்பிற் சேர்த்துச் செப்பஞ்செய்து வெளியிட உதவியாயிருக்கும்"[43] என இந்நூலின் பதிப்பு வரலாறு சுட்டப்பெற்றுள்ளது.

**மாறனலங்காரம்**

திருக்குருகைப் பெருமாள் கவிராயரால் இயற்றப்பெற்ற அணியிலக்கணமாகிய மூலமும் அதற்குத் தென்திருப்பேரை காரிரத்நக் கவிராயர் செய்த உரையுமாகிய இந்நூல் செந்தமிழாம் திங்கள் இதழில் *1912, 1913, 1914* ஆம் ஆண்டுகளில் வெளியிடப்பெற்று, *1915* ஆம் செந்தமிழ்ப்பிரசுரம் *37* ஆகத் தனியாக வெளியிடப்பெற்றுள்ளது. இதன் பதிப்பாசிரியர் செந்தமிழின் ஆசிரியராகிய திரு. நாராயணையங்கார் அவர்கள். இந்தப் பதிப்பின் முகவுரை, **மாறனலங்கார வரலாறு, நூல் உரையாசிரியர் வரலாறுகள் மிகச் சிறப்பாக** எழுதப்பெற்றுள்ளன. சிறப்புப் பொருளகராதி, விஷய சூசிகை முதலியவற்றின் அகராதி என்னும் பெயரில் கொடுக்கப்பட்டுள்ளது. உரை மேற்கோள் விளக்க அட்டவணை, பந்தங்களாக அமைந்த மிறைக்கவிகளுக்குத் தெளிவான படங்கள், சூத்திர முதற்குறிப்பகராதி, உதாரணச் செய்யுள் முதற்குறிப்பகராதி, அச்சுப்பிழைத் திருத்தம் ஆகிய இன்றியமையாத சுவடிப் பதிப்புக்கூறுகளுடன் இந்த மாறனலங்காரம் பதிப்பு மிக உயர்ந்த பதிப்பாக இலங்குகிறது.

இப்பதிப்பிற்கான மூலஏடு ஆழ்வார் திருநகரியில் தாயவலந்தீர்த்தான் கவிராயர் வீட்டிலிருந்து கிடைத்தது ஆகும். "பின்பு மற்றொரு குறைப்பிரதியும் சங்கத்துக்குக் கிடைத்திருக்கிறது. சங்கத்திலிருந்த பிரதிகளிரண்டையும் வைத்துக்கொண்டே யிடர்பாடுற்றச்சிட்டுச் சில பாரங்கள் வெளியிட்டு வந்த எளியேன்மீதன்பு கூர்ந்து எனது வேண்டுகோட்கிணங்கி மஹாமஹோபாத்யாயர் பிர்ம்ம ஸ்ரீ உ.வே.சாமிநாதையரவர்களும், புதுக்கோட்டைக் காலேஜ் பிரின்ஸிபாலாகவிருந்த ஸ்ரீமத் எஸ். இராதாகிருஷ்ணையர் பி.ஏ., எப்.எம்.யு அவர்களும் அருமையா யெழுதி வைத்திருந்த பிரதிகளையருளி யுபகரித்தார்கள். அப்பிரதிகளுள் மஹாமஹோபாத்யாயரவர்களது பிரதி சில பிரதிகளோ டொப்புப் பார்த்துப் பிரதிபேதங்கள் குறிக்கப்பட்டதாயுமிருந்தது மிகவும் சாதகமாயிற்று. அதன் பின்பு பரங்கிப்பேட்டை ஸ்ரீமத் இலக்குமணப் பிள்ளையவர்களாலொரு பிரதி கொடுக்கப்பட்டது."[44] இந்நூலின் பொருளணியியலின் முதல் பதினைந்து அணிகள் மட்டும் சில கல்வி நிலையங்களில் தேர்வுகளுக்குப் பாடமாக வைக்கப்பட்டிருந்ததால் இப்பகுதி மட்டும் *1974* ஆம் ஆண்டு வெளியிடப்பட்டுள்ளது.

மாறனலங்காரம் தண்டியலங்காரத்தைவிட விரிவும் நுட்பமும் திட்பமும் உடையது. அணிகள் தெளிவாக விளக்கப்பட்டுள்ளதால் அணியியற் கல்விக்கும் ஆய்விற்கும் இந்த நூல் மிக இன்றியமையாததாகும். எனவே, இதனை மறுமுறை செம்பதிப்பாகப் பதிப்பித்தல் நலம்பயக்கும்.

## தேவையுலா என்னும் இராமேஸ்வர உலா

பலபட்டடைச் சொக்கநாதன் கவிராயரால் இயற்றப்பெற்ற இப்பிரபந்தம் உ.வே.சா. அவர்களால் *1907* ஆம் ஆண்டு வாக்கில் செந்தமிழில் வெளியிடப்பெற்று *1911*இல் தனி நூலாகப் பதிப்பிக்கப்பட்டுள்ளது. இது மூன்று சுவடிகளின் அடிப்படையில் அமைந்த பதிப்பாகும். இந்த உலா மதுரைத் தமிழ்ச்சங்கத்தாரின் அனுமதி பெற்று *1925*இல் உ.வே.சா. அவர்களால் சொந்தப்பதிப்பாக மறுபதிப்புச் செய்யப்பெற்றுள்ளது.

## திருவருணைக் கலம்பகம்

சைவ எல்லப்ப நாவலரால் இயற்றப்பெற்றுள்ள இச்சிற்றிலக்கியம் சே.ரா.சுப்பிரமணியக் கவிராயரின் குறிப்புரையுடன் பதினொன்றாவது செந்தமிழ்ப் பிரசுரமாக வெளியிடப்பட்டது. *1930* ஆம் ஆண்டு இரண்டாம் பதிப்பும் வெளிவந்துள்ளது. இந்த அருணைக்கலம்பகம் மூலம் மட்டுமாகவும் பலவித உரைகளுடனும் பலரால் பல பதிப்புகளைப் பெற்றுள்ளது.

## திருக்கலம்பகம் மூலமும் உரையும்

உதீசி தேவரால் இயற்றப்பெற்றுள்ள இப்பிரபந்தம் இரண்டு காரணங்களால் தனிச் சிறப்பை உடையது. முதலாவது இது *110* செய்யுட்களைப் பெற்றுக் கலம்பக நூல்களில் எண்ணிக்கையில் மிக அதிகக் கவிகளைப் பெற்றதாக விளங்குகிறது. மற்றொன்று இது சமண சமயச் சார்புடையது என்பதாம்.

இந்தத் திருக்கலம்பகம் மூலமும் பழைய உரையும் முதலில் செந்தமிழ்ப் பத்திரிகையில் வெளியிடப்பெற்றுப் பிறகு செந்தமிழ்ப் பிரசுரம் *22* ஆகத் தனியாக வெளிவந்தது. மு.இராகவையங்கார் அவர்களால் பதிப்பிக்கப் பெற்ற இச்சிற்றிலக்கியம் *1951* ஆம் ஆண்டில் இரண்டாம் பதிப்பைப் பெற்றுள்ளது. இப்பதிப்பின் முகவுரையைப் படிப்பவர்கள் இது மு. இராகவையங்காருடையது தானா என ஐயுறும்படி செய்திகளே இல்லாமல் பள்ளிக்கூடப் பாடப்புத்தகத்தைப் போல இருக்கிறது. செய்யுள் முதற்குறிப்பகராதியைத்தவிர வேறெந்த ஆய்வுக் கருவிகளும் இதில் இடம்பெறவில்லை.

## தொல்காப்பியம் - செய்யுளியல் - நச்சினார்க்கினியம்

மதுரைத் தமிழ்ச்சங்கப் பதிப்பாக இது முதன்முதலில் *1917* ஆம் ஆண்டு மகாவித்வான் ரா. ராகவையங்கார் அவர்களால் தமிழ்ச்சங்கப் பிரசுர எண் *10* ஆக வெளியிடப்பட்டுள்ளது. பிறகு *1965*இல் கு. சுந்தரமூர்த்தி அவர்களால் சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகவாயிலாக மறுபடியும் வெளியிடப்பெற்றுள்ளது.

நூற்றுக்கு மேற்பட்ட நல்ல பதிப்புக்களைச் சிறந்த பதிப்பாசிரியர்களைக் கொண்டு வெளியிட்டுள்ள மதுரைத் தமிழ்ச்சங்கம் மற்ற பதிப்புக்களுக்கும் ஊக்கமளித்து வந்துள்ளது. திரு. உ.வே.சாவின் திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணம் பதிப்புக்குத் தன்னிடமிருந்த சுவடியைக் கொடுத்துதவியது. மேலும் இச்சங்கத் தாபகர் அந்நூற்பதிப்பை விரைவுபடுத்தினார். இச்செய்தியை, "இந்நூலைப் பின்னும் சிலமுறை ஆராய்ச்சி செய்ய வேண்டுமென்கிற விருப்பமிருந்தும் இதனை விரைவிற் பதிப்பித்து வெளிப்படுத்துகவென்று மதுரைத் தமிழ்ச்சங்கத் தாபகரும் பாலவனத்தம் ஜமீன்தாருமாகிய இராமநாதபுரம் மகாராஜ ராஜஸ்ரீ பொ. பாண்டித்துரைஸாமித் தேவரவர்கள் வற்புறுத்திச் சொன்னமையால் அவர்கள் சொல்லை மறுத்தற்கஞ்சி விரைந்து பதிப்பிக்கத் துணிந்தேன்"[45] என்னும் டாக்டர் உ.வே.சாவின் உரையால் அறியலாகும்.

அண்மைக்காலத்தில் தொல்காப்பிய உரைவளம், பல பாட்டியல் நூல்கள் எனப் பயனுள்ள இலக்கண நூல்களை நல்ல பதிப்பாக வெளியிட்டு உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் தலைசிறந்த தமிழ்ப்பணி ஆற்றிவருகிறது. மதுரைத் தமிழ்ச்சங்கத்தின் இலக்கணப் பதிப்புகள் மிகச் சிறப்பு வாய்ந்தன. இவை எல்லாவற்றையும் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் அப்படியே மாற்றமின்றி வெளியிட்டு, அடிக்குறிப்பில் வடமொழிச் சொற்களுக்குத் தமிழ்ப்பொருள், பிற இலக்கண நூல்களுடன் ஒப்பீடு, மேற்கோள் பாடல்களின் அருஞ்சொற் பொருள் ஆகியவற்றைச் சேர்த்து வெளியிட்டால் தமிழ் இலக்கண ஆய்வு தரம் பெற்றுச் சிறக்கும். முதன்மையானதாக மாறனலங்காரம், மாறன் பா பாவினம் ஆகிய இரண்டையும் இந்த நிறுவனம் பதிப்பிக்க எடுத்துக்கொள்ளவேண்டும் என வேண்டுகிறேன். வணிக நோக்கம் இல்லாமல், நல்ல ஆய்வுப் பதிப்பாக நிறுவனத்தால் மட்டுமே இத்தகைய இலக்கண நூல்களைக் கொண்டுவர இயலும் என்பது தெரிந்ததே. எனவே, தக்க அறிஞர்களைத் தன்பால் பெற்றுள்ள உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் இத்துறையில் ஈடுபட்டால் நலமாக இருக்கும்.

## 18. சமரச சன்மார்க்க ஆராய்ச்சி நிலையம், வடலூர்.

சன்மார்க்க தேசிகன் பதிப்பு என வழங்கப்பெறும் ஊரன் அடிகளாரின் திருவருட்பாப் பதிப்பும் ஒரு சுவடி ஆய்வுப் பதிப்பாதலின் ஈண்டுச் சிந்திக்கத் தக்கதாம். அடிகள் தம் காலம் வரை அச்சாகியிருந்த திருவருட்பாப் பதிகங்கள் அனைத்தையும் ஆதாரமாகக் கொண்டதோடு வள்ளலாரின் சொந்தக் கையெழுத்துப் படிகளையும் ஆராய்ந்துள்ளார். வள்ளல்பெருமானின் திருக்கரங்களாலேயே எழுதப்பெற்ற மூல ஏடுகளைப்பற்றி ஊரன் அடிகள்,

"அடிகள் தாம் பாடியருளிய திருஅருட்பாக்களைத் தம் கரத்தாலேயே எழுதியும் அருளியிருக்கிறார்கள். திருஅருட்பாப் பாடல்கள் *5818*இல் பெரும்பாலானவற்றிற்கு அடிகளின் கையெழுத்து மூலங்களே கிடைத்துள்ளன. அவை ஓலைச்சுவடிகளாகவும், காகித ஏடுகளாகவும், நோட்டுப் புத்தகங்களாகவும் உள்ளன. *1 ,2, 3, 5* திருமுறைகளின் மூலங்கள் பனைஓலைச் சுவடிகள்; மிகச் சிறுபான்மை காகித ஏடுகள்; *4, 6* திருமுறைகள் முழுவதும் காகிதம்" எனக் கூறுகிறார்.[46] இந்தப் பதிப்பு வள்ளலார் பாடிய வரலாற்று முறைப்படி திருவருட்பாச் செய்யுட்களைத் தொகுத்தமைத்த ஒன்று என்பது மற்றொரு சிறப்பாகும்.

இந்தப் பதிப்பின் முன்னுரை, வள்ளலாரின் வரலாற்றுச் சுருக்கம், திரு அருட்பா வரலாறும் ஆராய்ச்சிக் குறிப்புகளும் ஆகிய விரிவான கட்டுரைகளும், வள்ளலாரின் வரலாற்றுக் குறிப்புகள், அடிகள் வரலாற்றுக் காலக் குறிப்புகள், அடிகளின் சமகாலப் பெரியோர்களும் புலவர்களும், அடிகளால் பாடப்பெற்ற பதிகள் அடிகளால் பாடப்பெற்ற தெய்வங்கள், அடிகளால் பாடப்பெற்ற ஞானிகள், அடிகளின் அருளிச் செயல்கள், யாப்பு அட்டவணை, அகப்பொருள் பதிகங்கள், பாடல்கள், இசைப்பாடல்கள், வைணவபரமான பாடல்கள், அரும்பொருட் குறிப்புகள், பதிக அட்டவணை, திருவருட்பா முழுவதற்குமான தொடர் எண்களும் செய்புள் முதற்குறிப்பகராதியும் என ஏராளமான பட்டியல்கள் இப்பதிப்பை அணி செய்கின்றன.

*1972*ஆம் ஆண்டு சமரச சன்மார்க்க ஆராய்ச்சி நிலையத்தின் பதிப்பாக வெளிவந்த திருவருட்பா சன்மார்க்க தேசிகன் பதிப்பு *1981*ஆம் ஆண்டு சென்னை இராமலிங்கர் பணிமன்றத்தால் இரண்டாம் பதிப்பாக வெளியிடப்பட்டுள்ளது. பொதுவாக இந்தச் சன்மார்க்க தேசிகன் பதிப்பு அருட்பிரகாச வள்ளலாரின் அன்பர்கள், தமிழ் இலக்கிய ஆர்வலர்கள், ஆய்வாளர்கள் ஆகிய எல்லாத் தரப்பினருக்கும் பயன்படுமாறு அமைந்துள்ளது.

இதுகாறும் சுவடிப்பதிப்புத் துறையோடு தொடர்புடைய பதினெட்டு நிறுவனங்களைப்பற்றி இயன்ற அளவு செய்திகள் தொகுத்துப் பார்க்கப்பட்டன. தொடர்ந்து இத்துறையில் பணியாற்றுகின்ற பல்கலைக்கழகங்களைப் பற்றிச் சிந்திப்போம்.

## II. சுவடிப்பதிப்பில் பல்கலைக்கழகங்கள்

### தோற்றுவாய்

தொடக்கத்தில் மாணவர்களுக்குப் பட்டப்படிப்பை அளிப்பதை மட்டுமே தம் குறிக்கோளாகக் கொண்டிருந்த பல்கலைக்கழகங்கள் காலப்போக்கில் பாடநூல்களை வெளியிடத் தொடங்கிப் பிறகு ஆய்வு நூல்களையும்

இலக்கியங்களையும் வெளியிடத் தொடங்கின. தமிழ்நாட்டுப் பல்கலைக்கழகங்களுள் அண்ணாமலைப் பல்கலைக்கழகம், சென்னைப் பல்கலைக்கழகம், தமிழ்ப் பல்கலைக்கழகம், மதுரைப் பல்கலைக்கழகம் ஆகிய நான்கும் சுவடிப் பதிப்புகளை வெளியிட்டுள்ளன. அந்தச் சுவடிப் பதிப்புகளைப் பற்றிப் பல்கலைக்கழக வாரியாகச் சுருக்கமாகக் காணலாம்.

### 1. அண்ணாமலைப் பல்கலைக்கழகம், சிதம்பரம்.

செட்டிநாட்டரசர் ராஜா.சர். அண்ணாமலைச் செட்டியார் அவர்களால் *1929*இல் நிறுவப்பெற்ற அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தின் தமிழ்ப்பணி போற்றுதற்குரியது. இது பல தமிழாசிரியர்களையும் அரசியல்வாதிகளையும் உருவாக்கி உயர்ந்துள்ளது.

அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் உள்ள *182* தமிழ்ச் சுவடிகளுக்கான பட்டியலை இப்பல்கலைக்கழக நூலகம் *1987*ஆம் ஆண்டு வெளியிட்டுள்ளது. இதில் திருக்கோனார் திருப்பணிமாலை என ஒரு சுவடி *(எண். 88, பக். 32)* குறிக்கப்பட்டுள்ளது. இது திருக்கோளூர் திருப்பணி மாலையாக இருக்கலாம். இங்குள்ள கீழ்வேளூர் உலா *(38)*, சங்கரமூர்த்திக் கோவை *(44)*, சுப்பிரமணியர் வண்ணம் *(85)*, மாறன் வருக்கக்கோவை *(67)* ஆகியன இச்சிற்றிலக்கியங்களின் செம்பதிப்புக்கு உதவலாம். நவநீதப்பாட்டியல் உரையும் *(15)* பிரபந்த இலக்கண ஆய்விற்குத் துணை செய்யலாம்.

அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தின் சுவடிப்பதிப்பு வரலாறு *1952*ஆம் ஆண்டுதான் தொடங்குகிறது. ஆனால் தொடக்கப்பதிப்பே இமாலயச் சாதனையாக அமைந்துவிட்டது. ஆம். அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் கம்பராமாயணச் செம்பதிப்பைத்தான் குறிப்பிடுகிறேன். *1952*இல் தொடங்கிய இந்த மாபெரும்பணி பதினெட்டு ஆண்டுகள் நீடித்து *1970*இல் நிறைவேறி யுள்ளது. கம்பராமாயணத்தின் ஆறு காண்டங்களும், பதினாறு மடலங்களாக வெளியிடப்பட்டுள்ளன. இப்பதிப்பைப்பற்றி விரிவாகக் கூறத்தகும்.

கம்பரின் *10, 534* செய்யுள்களும் தமிழ் யாப்பு மரபின்படி சந்திபிரிக்காமல் முதலில் தரப்பெற்றுக் கீழே ஒவ்வொரு சொல்லாகச் சந்தி பிரிக்கப்பெற்று எல்லோராலும் எளிதில் பொருள் புரிந்துகொள்ள வாய்ப்பாகக் கொடுக்கப்பட்டுள்ளன. இப்படியாக இப்பதிப்பில் மூலபாடமே இருமடங்கு ஆகியுள்ளது. உரை செப்பமாக எழுதப்பட்டுள்ளது. கதைச்சுருக்கம், யாப்புக்குறிப்பு கொடுக்கப்பட்டுள்ளது. பாடல்களுக்கு மேலே கதைப் போக்கையொட்டிய தலைப்புக்கள் கொடுக்கப்பட்டுள்ளன. செய்யுள் முதற் குறிப்பகராதியும் இடம் பெற்றுள்ளது. ஆய்வுப் பதிப்பிற்குத் தேவையான இந்தக்

கூறுகள் அனைத்தையும் பெற்றுச் சிறப்படைந்துள்ளது அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தின் கம்பராமாயணப்பதிப்பு ஆகும்.

என்றாலும் இதன் தனிப்பெரும் சிறப்பு இப்பதிப்பில் கொடுக்கப்பட்டுள்ள பாடபேதங்கள்தான். ஆறு காண்டங்களும் சேர்ந்து இந்த இராமாயணத்தில் ஏறக்குறைய *16,000* பக்கங்கள் உள்ளன. இதில் பாட பேதங்களின் தொகுப்பாக அமைந்ததை மட்டும் ஏறத்தாழ *5,500* பக்கங்கள். மொத்தப் பக்கங்களில் மூன்றில் ஒரு பங்கு பாடபேதத் தொகுப்பாகவே அமைந்துள்ளது. சுத்தாங்கரின் மகாபாரதப் பதிப்போடு ஒப்புநோக்கிப் பேசத் தகுந்த ஒரே ஒரு தமிழ்ப்பதிப்பு இந்தக் கம்பராமாயணப்பதிப்பு எனலாம்.

### சுவாமிநாதம்

அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தைச் சேர்ந்த பேராசிரியர் முனைவர் செ.வை. சண்முகம் *1972* ஆம் ஆண்டு ஆய்வுப்பணி மேற்கொண்டு இங்கிலாந்து நாட்டிற்குச் சென்றிருந்தார். அப்போது லண்டன் மாநகரில் உள்ள பிரிட்டிஷ் பொருட்காட்சி சாலையின் கீழ்த்திசை நூலகத்தில் சுவாமிநாதம் என்னும் ஐந்திலக்கண நூலின் காகிதக் கையெழுத்துப்படியைக் கண்டார். இந்நூல் தமிழகத்தில் பரவலாக அறிமுகம் ஆகாததாகவும், முழுமையாகக் கிடைக்காததாகவும் இருந்ததால் அந்தச் சுவாமிநாதத்தின் கையெழுத்துப்படியை முழுவதுமாக நிலைமின்படி *(ஜெராக்ஸ்)* எடுத்து வந்தார். அதுதான் அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தின் சுவாமிநாதப் பதிப்புக்கு அடிப்படைப் பிரதியாக அமைந்தது.

ஆனால் இதற்குப் பல ஆண்டுகளுக்கு முன்பே நெல்லை நீலமேகம் பிள்ளை என்பவர் கொடுத்த ஓலைச்சுவடியின் அடிப்படையில் திரு. இ. கோவிந்தசாமி பிள்ளை கரந்தைத் தமிழ்ச்சங்க வெளியீடாகிய தமிழ்ப்பொழிலில் *(1924,* துணர். *4)* வெளியிடத் தொடங்கினார். பாயிரம், எழுத்தாக்க மரபு, பதமரபு என *34* நூற்பாக்கள் மட்டுமே *(*சுவாமிநாத நூலின் நூற்பாக்கள் எண்சீர்க்கழிநெடிலடி ஆசிரிய விருத்தங்களாக அந்தாதித்தொடை பெற்று நடப்பவை*)* தமிழ்ப்பொழிலில் வந்தன. பிறகு ஏனோ நின்றுவிட்டது. கேரளப் பல்கலைக்கழகக் கீழ்த்திசைச் சுவடி நூலகத்தில் சுவாமிநாத விருத்திஉரைச் சுவடி இருக்கிறது. இதில் எழுத்தாக்க மரபுவரை தான் உள்ளது*;* மேலே இருக்கவேண்டிய பகுதிகள் காணப்படாத குறைச்சுவடி இது.

இந்த மூன்று கையெழுத்துப்படிகளின் ஆதாரத்துடன் செ.வை.சண்முகம் சுவாமிநாதத்தை உரையெழுதிப் பதிப்பித்துள்ளார். இதன் முதற் பதிப்பு *1975* ஆம் ஆண்டு வெளியிடப்பட்டுள்ளது. விரிவான

முன்னுரையில் இந்நூல் பிற இலக்கண நூல்களோடு ஒப்பாய்வு செய்யப்பட்டுள்ளது. நூலின் உரை பொழிப்புரையாகவும், தேவையான விளக்கம் தனியாகக் கொடுக்கப்பெற்றும் வரையப்பட்டுள்ளது. நூற்பா முதற்குறிப்பும் இடம் பெற்றுள்ளது. பதிப்பாசிரியர் மொழியியல் வல்லுநராதலின் உரையில் மரபிலக்கண நெறியைவிட இன்றைய மொழியியற் கருத்துக்களின் தாக்கம் அதிகமாக இருக்கிறது.

அண்ணாமலைப் பல்கலைக்கழகம் தொல்காப்பியம், ஐங்குநூறு, யாப்பருங்கலக்காரிகை, நம்பியகப்பொருள், சிவஞானபோதச் சிற்றுரை, மங்கையர்க்கரசி வெண்பா போன்ற பல இலக்கியங்களைத் திருப்பனந்தாள் ஸ்ரீ காசி மடத்தின் நல்கை பெற்றுப் பதிப்பித்திருப்பினும் அவை ஓலைச்சுவடிப் பதிப்புகள் அன்மையின் இங்கே குறிக்கப் பெறவில்லை.

## 2. சென்னைப் பல்கலைக்கழகம்

சென்னைப் பல்கலைக்கழகத்தின் தமிழ்த்துறை தமிழாய்வு எனக் காலமுறை இதழ் ஒன்றை வெளியிட்டு வருகிறது. இதில் அச்சில் வாரா அருந்தமிழ் என்பது ஒரு பகுதி. பதிப்பாகாத தமிழ் இலக்கியங்களை நல்ல முறையில் வெளியிடுவதே இதன் நோக்கம். 1972ஆம் ஆண்டு முதல் 1980ஆம் ஆண்டு வரை இந்தத் தமிழாய்வின் வழியாக 10 நூல்கள் சுவடிப்பதிப்பாக வெளிவந்துள்ளன.

அப்பாண்டை நாதர் உலா, திருமேற்றிசை அந்தாதி, நாககுமார காவியம், ஈனமுத்துப் பாண்டியன் கதை, அடிமதிக்குடி அய்யனார் பிள்ளைத் தமிழ், மெய்மொழிச்சரிதை, மேருமந்திர மாலை, தாகந்தீர்த்த செழியன் மஞ்சரி, பாரத தீப நிகண்டு ஆகியன சென்னைப் பல்கலைக்கழகத்தின் சுவடிப் பதிப்புகளுள் குறிப்பிடத்தக்கன ஆகும். இவை அனைத்துமே பதிப்பரசர் புலவர்மணி பேரா. மு. சண்முகம் பிள்ளை அவர்களின் பதிப்புக்கள்தாம். சென்னைப் பல்கலைக்கழகத்தின் சுவடிப்பதிப்பு வரலாறு பேரா. மு. சண்முகம்பிள்ளை அவர்கள் அங்கே பணி ஏற்ற நாளில் தொடங்கி அவர் விலகிய நாளில் தொய்வடைந்துவிட்டது எனலாம்.

### அப்பாண்டைநாதர் உலா

சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ்த்துறை வெளியிடும் தமிழாய்வு மாலையில் இணைக்கப்பெற்ற முதல் அருந்தமிழ் மலர் என அறிமுகப்படுத்தப்படும் இந்தச் சிற்றிலக்கியம் முதன் முறையாக 1972இல் வெளியாயிற்று. இது திருநறுங்கொண்டை என்னும் சமணத்தலத்தில் திருக்கோவில் கொண்டுள்ள பார்சுவநாதரைப் போற்றும் பிரபந்தம் ஆகும்.

பார்சுவநாதர் அப்பாண்டை நாதர் என வழங்கப்படுகிறார். *620* கண்ணிகளால் இயன்ற இந்த உலாப்பிரபந்தத்துள் பேதை முதலிய ஏழு பருவ மகளிரும் பார்சுவ நாதரின் உலாவைப் பார்த்து அவர்மீது மோகங்கொள்வதில்லை; மாறாக அவருடைய தெய்வீக ஒளியால் ஆட்கொள்ளப்பெற்று அவரைத் துதிக்கத் தொடங்குகின்றனர். உலாவின் பாடுபொருளில் இது ஒரு புதுமை ஆகும். பேரா. சண்முகம்பிள்ளை அவர்களுக்கே உரிய முறையில் விளக்கமான பதிப்புரை, சிறப்புப் பெயர் முதலியவற்றின் அகராதி, திருநறுங்கொண்டைக் கல்வெட்டுகள் முதலியன இப்பதிப்பை அணி செய்கின்றன. இந்த அப்பாண்டை நாதர் உலா *1974*இல் தனி நூலாக வெளியிடப்பெற்றது. அப்போது அதில் திருமேற்றிசை அந்தாதி என்னும் சிற்றிலக்கியம் பிற்சேர்க்கையாகச் சேர்க்கப்பெற்றுள்ளது.

### நாக குமார காவியம்

*1973*ஆம் ஆண்டு இக்காவியம் தமிழாய்வில் வெளியாயிற்று. இது காகிதச் சுவடியின் அடிப்படையில் அமைந்ததெனினும் அந்தக் கடிதப்படி பழைய ஓலைச்சுவடியிலிருந்து பிரதி செய்யப்பெற்றது ஆகும். அதனால்தான் இங்கு இடம் பெறுகிறது. இச்சிறு காப்பியங்களுள் ஒன்று இந்த நாக குமார காவியம். கிடைத்த ஒரே ஒரு கடிதப்பிரதியின் அடிப்படையில் பதிப்பிக்கப் பெற்றுள்ளது. நாக குமாரன் வரலாறு கூறும் நூல்களின் பட்டியல் இணைக்கப்பெற்றுள்ளது சிறப்பாகக் குறிப்பிடத்தக்கதாகும். வழக்கமான பதிப்புரை, சிறப்புப் பெயர் விளக்கம், செய்யுள் முதற்குறிப்பகராதி முதலிய பதிப்புக் கூறுகளுடன் இக்காப்பியப் பதிப்பு சிறந்து காணப்படுகிறது.

*1974*ஆம் ஆண்டு ஈனமுத்துப்பாண்டியன் கதை என நாட்டார் இலக்கியத்தைச் சேர்ந்த கதைப்பாடல் ஒன்று வழக்கமான முறையில் வெளியாயிற்று. *1975*ஆம் ஆண்டு தமிழாய்வு ஐந்தாவது இதழில் வெளியான அடிமதிக்குடி அய்யனார் பிள்ளைத்தமிழ் சிறப்பாகக் குறிப்பிடப்பட வேண்டியதோர் சிற்றிலக்கியப்பதிப்பு ஆகும். பாடல்களுக்காகச் சுருக்கமான குறிப்புரை எழுதப் பெற்றுள்ளது. இதில் இடம் பெற்றுள்ள சாத்தன் வரலாறு என்னும் ஆராய்ச்சி உரை பயனுடையது. சுவடிப்பதிப்புக்குரிய பிற அம்சங்களும் இப்பதிப்பில் நிறைவாக உள்ளன.

*1977*ஆம் ஆண்டு தமிழாய்வு ஆறாம் இதழில் மெய்ம்மொழிச்சரிதை என்னும் நூல் வெளியாயிற்று. மெய்ம்மொழிச் சரிதையின் சுவடி மூலமும் உரையுமாக அமைந்திருந்தபோதிலும் ஒப்பிட்டுப்பார்க்க வேறு பிரதிகள் கிடைக்காமையால் மூலம் மட்டும் பதிப்பிக்கப்பட்டுள்ளது. இந்தப் பதிப்பும் பேரா.

மு. சண்முகம்பிள்ளை அவர்களுக்குரிய பாணியிலேயே அமைந்துள்ளது. *1978*ஆம் ஆண்டு தமிழாய்வின் ஏழாம் இதழில் சேலம் தாலந்தீர்த்த செழியன் மஞ்சரி மூலம் மட்டுமாக வந்தது. இதைப்பற்றிய பிற செய்திகள் தமிழ்ப் பல்கலைக்கழகத்தைப் பற்றிய பகுதியில் செழியதரையன் பிரபந்தங்கள் பற்றிச் சொல்லும்போது கூறப்படும்.

## மேருமந்திர மாலை

இது *1978*ஆம் ஆண்டு தமிழாய்வின் எட்டாம் இதழில் பதிப்பிக்கப் பெற்றது. மேருமந்தரபுராணம் என்பது ஒரு சமணக்காப்பியம். அதன் வழிநூலாக அம்மானை வடிவில் பாடப்பட்டுள்ள நூல் இந்த மேருமந்திரமாலை. இதில் மூலநூலாகிய மேருமந்திர புராணத்துடன் ஒப்பீடு, புராணப் பாத்திரங்களின் வரலாற்றுச் சுருக்கம், அருஞ்சொற்பொருள் ஆகியன இடம் பெற்றுள்ளன.

## பாரதிதீபம்

தமிழாய்வில் வெளிவந்த பிறகு இந்தப் பாரதிதீப நிகண்டு *1980*இல் தனிநூலாகவும் வெளியிடப்பட்டுள்ளது. *665* கட்டளைக் கலித்துறைகளால் பன்னிரண்டு தொகுதிகளாக அமைந்த இந்த நிகண்டின் பதிப்பில் தெளிவான முகவுரை, செய்யுள் முதற்குறிப்பகராதி, முதல் பத்துத் தொகுதிகளின் பொருளகராதி மற்ற இரு தொகுதிகளுக்கான பெயரகராதி ஆகியன இடம் பெற்றுள்ளன.

ஆய்வுப் பேரறிஞர் வையாபுரிப்பிள்ளையவர்களின் அணுக்கத் தொண்டராக இருந்த மு. சண்முகம்பிள்ளை அவர்களின் பதிப்புச் சீர்மையை இந்த நிகண்டில் முழுமையாகக் காணமுடிகிறது. டாக்டர். உ.வே.சா.நூலகத்தின் ஒரே ஒரு சுவடியின் ஆதாரத்தில் இந்த நிகண்டுப் பதிப்பு உருவாகியுள்ளது. இந்தப் பதிப்பின் அமைப்பைப்பற்றிப் பேராசிரியர், "பாடல்களில் அமைந்துள்ள பொருள்கள் விளங்கும் வகையில் உரிய சொற்கோவையைப் பிரித்துத் தனியான உரைபாடம் அமைந்தால்தான் எல்லாரும் எளிதில் அறிதல் கூடும். அதற்குரிய கால அவகாசம் இன்மையாலும், நூலின் அளவு மிகப் பெருகுமாதலாலும் தலைப்பு மட்டும் தந்து இப்பதிப்பினை அமைத்துள்ளேன். இனி வருங்காலத்தில் உரைபாடத்துடன் கூடிய பதிப்பும் வெளியிடப்படுதல் வேண்டும்"[47] என்று கூறியுள்ளார்.

முன்பே குறிப்பிடப்பெற்றவாறு *1980*ஆம் ஆண்டிற்குப் பிறகு சென்னைப் பல்கலைக்கழகத்தில் குறிப்பிட்டுச் சொல்லுமளவு ஓலைச்சுவடி ஆய்வுப்பதிப்புகள் எதுவும் நடைபெற்றதாகத் தெரியவில்லை.

## 2. தமிழ்ப்பல்கலைக்கழகம், தஞ்சாவூர்

ஓலைச்சுவடிகளைத் தொகுத்தல், ஆராய்தல், பட்டியல்களைப் பதிப்பித்தல், நூல்களுக்கு உரை எழுதி வெளியிடுதல், கருத்தரங்கங்கள், அறக்கட்டளைச் சொற்பொழிவுகள் வழியாக ஆய்வுகளை அறிஞர் உலகத்தோடு பகிர்ந்துகொள்ளுதல் ஆகிய சுவடிப்பணிகளுக்காகவே தமிழ்ப் பல்கலைக்கழகத்தில் தனியாக ஓலைச்சுவடித்துறை என ஒன்று சுவடிப்புலத்தின் முதன்மைத் துறையாகத் தோற்றுவிக்கப்பட்டது. தமிழ்ப் பல்கலைக்கழகம் *1981*ஆம் ஆண்டு செப்டம்பர்த் திங்கள் *15*ஆம் தேதி தோன்றியது. *1982*ஆம் ஆண்டுத் தொடக்கத்திலிருந்தே சுவடி திரட்டும் பணியைச் சுவடிப்புலத் தலைவராக இருந்த பேரா. கே.எம். வெங்கடராமையா அவர்கள் தொடங்கி விட்டார். இச்சொற்பொழிவாளர் தொழில்நுட்ப உதவியாளராக *10-5-1982* அன்று சுவடிநூலகப் பொறுப்பை ஏற்றுக்கொண்டபோதே அதில் ஏறத்தாழ *500* ஓலைச்சுவடிகள் இருந்தன. அந்த மாதமே *(1982 மே)* சுவடிகளின் விவரப்பட்டியல் தயாரிக்கும் பணி தொடங்கிவிட்டது. தமிழ்ப் பல்கலைக்கழகத்தில் ஓலைச்சுவடித்துறை தொடக்கத்திலிருந்தே தொய்வின்றித் தன் பணிகளைச் செய்து வருகிறது. சுவடிகள் சேகரித்து விவர அட்டவணை வெளியிடுதல், சுவடிகளிலிருந்து படியெடுத்து உரைக்குறிப்புகளோடு நூல்கள் வெளியிடுதல், கருத்தரங்கங்கள் அறக்கட்டளைச் சொற்பொழிவுகளுக்கு ஏற்பாடு செய்து அக்கட்டுரைகளை நூலாக்குதல், ஆகிய தலைப்புகளில் இத்துறையின் செயல்களைச் சிந்திப்போம்.

### 1. சுவடிகள் சேகரித்தல்

இத்துறையைச் சேர்ந்த சுவடி நூலகத்தில் இன்று ஏறத்தாழ *4000* தமிழ் ஓலைச்சுவடிகள் உள்ளன. இவை இதற்காகத் தனியே வடிவமைக்கப்பெற்ற மரப்பேழைகளில் பாதுகாக்கப்படுகின்றன. தமிழைத் தவிரக் கிரந்த எழுத்தில் எழுதப்பெற்ற ஏராளமான வடமொழிச் சுவடிகள், சில தெலுங்குச் சுவடிகள், ஓரிரு கன்னடச் சுவடிகள், சிங்கள மொழியில் எழுதப்பெற்ற பௌத்த மத நூற் சுவடி ஒன்று என மூவாயிரம் பிற மொழிச் சுவடிகளும் இங்கு உள்ளன.

### 2. சுவடிகளுக்குப் பட்டியல், விவர அட்டவணை வெளியிடுதல்

முதன் முதலாக இத்துறை நூலகத்தில் *1123* சுவடிகளில் உள்ள நூல்களுக்கு நூற்பெயர், ஆசிரியர் பெயர், நூல் செய்யுளா உரைநடையா, எத்தனை இதழ்கள் உள்ளன, முழுமையானதா அல்லது குறையானதா என்னும் விவரங்களை எழுதிக் கணிப்பொறி வழியாக ஆங்கிலத்தில் *1985*ஆம் ஆண்டு

வெளியிட்டது. இது சுவடி நூலகம், பொது நூலகம், கணிப்பொறித்துறை ஆகிய மூன்றின் கூட்டு முயற்சியால் நிறைவேறிய பணி ஆகும்.

அடுத்து மைய அரசின் தேசிய ஆவணக் காப்பகத்தின் நல்கை பெற்றுத் தமிழ்ச்சுவடி விளக்க அட்டவணை வெளியிடும் திட்டம் மேற்கொள்ளப் பட்டது. இந்தச் சுவடி விளக்க அட்டவணையில் நூற்பெயர், ஆசிரியர் பெயர், சுவடியின் அமைப்பும் நிலையும், நூலின் தொடக்கம் முடிவு பற்றிய குறிப்புகள், ஏட்டின் தொடக்கத்திலும் இறுதியிலும் ஏதாவது குறிப்புகள் இருப்பின் அவை ஆகிய செய்திகள் கொடுக்கப்பட்டுள்ளன. இதில் ஒரே சுவடியில் பல நூல்கள் இருப்பின் *1-1, 1-2, 1-3* எனக் குறிக்கப்பட்டுள்ளன. ஒரு தொகுதிக்கு *500* நூல்களாக விளக்க அட்டவணை வெளியிடுதல் என முடிவெடுக்கப்பட்டு *2000* நூல்களைப் பற்றிய விவரங்கள் *(1556* சுவடிக் கட்டுகளில் இந்த *2000* நூல்கள் இடம்பெற்றுள்ளன*) 4* தொகுதிகளாக *1987*ஆம் ஆண்டு வெளியிடப்பெற்றன. இத்தொகுதிகளின் பிற்சேர்க்கையாக நூலாசிரியர் அகரவரிசை, நூற்பெயர், அகரவரிசை ஆகியனவும் இடம் பெற்றுள்ளன. இதன் முதல் தொகுதியில் பேரா. மு. சண்முகம்பிள்ளை எழுதியுள்ள முகவுரை சுவடி இயலுக்கே ஓர் அறிமுக உரையாக அமைந்துள்ளது.

இவ்வாறே மற்றுமொரு முறை நல்கை பெற்று இந்தத் தமிழ்ச் சுவடி விளக்க அட்டவணையின் ஐந்தாம் தொகுதி *1989*ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது. எல்லாவகையிலும் முதல் நான்கு தொகுதிகளையொத்த இதிலும் *394* சுவடிக்கட்டுகளில் இடம் பெற்றுள்ள *500* நூல்களைப் பற்றிய விவரங்கள் பிற்சேர்க்கைகளுடன் இடம் பெற்றுள்ளன.

இவ்விளக்க அட்டவணையின் ஆறாம் தொகுதியும் தேசிய ஆவணக் காப்பகத்தின் நல்கை பெற்று *1992*இல் வெளியிடப்பட்டுள்ளது. இவ்வாறு இதுவரை தமிழ்ப் பல்கலைக்கழக ஓலைச்சுவடித்துறையின் சுவடி நூலகத்திலுள்ள *3000* நூல்களைப்பற்றிய விவரங்கள் *(2260* சுவடிக்கட்டுகள்*)* அச்சிடப்பெற்று ஆய்வாளர்கட்குப் பயன்தந்து கொண்டுள்ளன.

இதற்கு அடுத்து வரவேண்டிய ஏழாம் எட்டாம் தொகுதிகளும் அச்சகத்திற்குச் செல்ல ஆயத்தமாக ஓலைச்சுவடித் துறையில் உள்ளன. காலம் கனிந்தால் கண்ணால் காணலாம்.

### 3. அனைத்துலகத் தமிழ் ஓலைச்சுவடிகள் அட்டவணை

தமிழ்ப் பல்கலைக்கழகத்தில் மட்டுமன்றிப் பிற இடங்களிலும், *46* வெளிநாட்டு நூலகங்களிலும் உள்ள *21, 972* தமிழ்ச் சுவடிகள் பற்றிய

செய்திகள் மைய அரசின் நல்கையைக் கொண்டு தொகுக்கப்பெற்று கணிப்பொறி வழியே ரோமன் எழுத்தில் *1986*ஆம் ஆண்டு உருவாக்கப்பெற்றது. எனினும் அப்போது அது அச்சிடப்பெறவில்லை.

*1986*ஆம் ஆண்டு தொகுக்கப்பெற்ற இந்தப் பேரட்டவணை ஐந்து தொகுதிகளாக ஆங்கிலம், தமிழ் ஆகிய இரு மொழிகளிலும் *1991*இல் வெளியிடப்பட்டுள்ளது.

## 4. சுவடிப் பதிப்புகள்

தமிழ்ப் பல்கலைக்கழகத்தின் சுவடிப்பதிப்புக்களை ஆண்டு வாரியாகக் காண்போம். இது *1985*இல் தொடங்குகிறது. இந்த ஆண்டில் ஆத்திசூடி உரை, குறுந்தொகை, சீவேந்திர சரிதம், தொல்காப்பியம் - செய்யுளியல் - இளம்பூரணம் ஆகிய நான்கு நூல்கள் வெளியாகியுள்ளன.

**ஆத்திசூடி உரை:** மகாவித்துவான் ரா. ராகவையங்கார் அவர்களால் வரையப்பெற்ற ஆத்திசூடி அகல உரையின் காகிதச் சுவடி மகாவித்வான் அவர்களின் குடும்பத்தாரிடமிருந்து புலவர் மு. சண்முகம்பிள்ளையால் தனிப்பட்ட முறையில் பெறப்பட்டு அவராலேயே பதிப்பிக்கப்பெற்றுள்ளது. ஆய்வு முகவுரை, உரையாசிரியர் வரலாறு ஆகியவற்றுடன் உரை வேறுபாடு, பாட வேறுபாடு, சொல்லடைவு ஆகியன முனைவர் சா. கிருட்டினமூர்த்தி அவர்களால் உருவாக்கப்பட்டு அனைத்துக் கூறுகளுடனும் இந்த நூல் விரிவாகப் பதிப்பிக்கப்பட்டுள்ளது.

**குறுந்தொகை:** இப்போது அச்சில் உள்ள எல்லாக் குறுந்தொகைப் பதிப்புகளையும், அப்பதிப்பாசிரியர்களுக்குக் கிடைக்காத சில சுவடிகளையும் கொண்டு பேரா. மு. சண்முகம்பிள்ளை எட்டுத்தொகையுள் ஒன்றாகிய குறுந்தொகையை ஆய்வுப் பதிப்பாக அளித்துள்ளார். இப்பதிப்பில் பாடபேதங்களும் பிற்சேர்க்கைகளும் நூலுக்குச் சமமாக அமைந்துள்ளன. இதன் சொல்லடைவு, தொடரடைவு சங்க நூலாராய்ச்சிக்கு மிகப் பயன்படும் ஒரு நல்ல கருவி ஆகும்.

**தொல்காப்பியம்-செய்யுளியல்-இளம்பூரணம்:** பேரா. அடிகளாசிரியர் அவர்களின் அரிய உழைப்பால் உருவான அருமையான பதிப்பு இது. செய்யுளியல் இளம்பூரணர் உரையின் அனைத்து அச்சுப் புத்தகங்களையும், தமிழில் உள்ள பழைய யாப்பிலக்கணங்கள் எல்லாவற்றையும் நுட்பமாக ஆராய்ந்து இது உருவாக்கப்பட்டுள்ளது. தொல்காப்பியர் செய்யுள் வெண்பா என்று தனியாக வெண்பாஇனம் ஒன்றைக் கூறியுள்ளார் என்பது இப்பதிப்பு வெளிப்படுத்தும் புதிய செய்தி. நல்ல பதிப்புரை, நூற்பாச் சொல்லகராதி,

உரைப்பொருளடைவு, உதாரண மேற்கோள் அகராதி, நூற்பா முதற் குறிப்பகராதி என்னும் இன்றியமையாத கூறுகளுடன் இப்பதிப்பு பொலிவு பெற்றுள்ளது. தமிழ்ப் பல்கலைக்கழகத்திற்குப் பெருமை சேர்க்கும் சில பதிப்புகளில் இதுவும் ஒன்று.

**சீவேந்திரர் சரிதம்:** *சீவக சிந்தாமணியின் வழிநூலாக அம்மானை யாப்பில் கதைப்பாடலாக அமைந்தது சீவேந்திரர் சரிதம்* என்னும் நூல். மு. சண்முகம்பிள்ளை அவர்களின் சொந்தத் தொகுப்பிலிருந்த இரு சுவடிகளின் அடிப்படையில் இப்பதிப்பு வெளிவந்தது. தஞ்சை, *சரசுவதி மகால்* நூலகம் கேரளப் பல்கலைக்கழகச் சுவடியிலிருந்து முற்பகுதியையும் தன்னிடம் இருந்த சுவடியிலிருந்து பிற்பகுதியையும் சேர்த்து இந்த அம்மானையை *1982*இல் வெளியிட்டுள்ளது. அப்பதிப்பும் இப்பதிப்பிற்குப் பயன்படுத்திக்கொள்ளப்பட்டது. நூல் முழுமைக்கும் குறிப்புரையும், பாட வேறுபாடுகளும் முனைவர் சா. கிருட்டினமூர்த்தி எழுதியுள்ளார். இக்குறிப்புரை அருஞ்சொற்பொருள், செய்தி விளக்கம், இலக்கணக் குறிப்புக்கள் என அமைந்துள்ளன. சா. கிருட்டினமூர்த்தி அவர்களின் குறிப்புரையைச் சிவ. ஆதிநாதன் என்பார் பார்த்துச் சமண சமயக் கோட்பாடுகளுக்கேற்பத் திருத்தியுள்ளார். இப்பதிப்பில் இந்த அம்மானை முழுவதற்குமான சொல்லடைவு முனைவர் சா. கிருட்டினமூர்த்தியால் சேர்க்கப்பெற்றுள்ளது.

இந்தச் *சீவேந்திரர் சரிதத்தின்* பதிப்பாசிரியராகக் குறிப்பிடப் பெற்றுள்ள மு. சண்முகம்பிள்ளை முகவுரையையும், *சீவேந்திரர் சரிதத்தின்* சில தனிக்கூறுகள் என்னும் கட்டுரையையும் எழுதியுள்ளார். குறிப்புரையாளர் எனக் குறிப்பிடப்பட்டுள்ள முனைவர். சா. கிருட்டினமூர்த்தி *சீவக* சிந்தாமணியின்படி *சீவகன்* வரலாற்றையும் எழுதியுள்ளார்.

**செழியதரையன் பிரபந்தங்கள்:** *1986*ஆம் ஆண்டு செழியதரையன் பிரபந்தங்கள் என்னும் சிற்றிலக்கியத்திரட்டு ஒன்று மட்டுமே வெளியாகியுள்ளது. இதில் கங்காதரச் செழியன் பேரில் திரு வாணி வாது *(104* விருத்தங்கள்*)*, திருவேங்கடச் செழியன் நன்னெறி *(43* கட்டளைக் கலித்துறைகள்*)*, தாகந்தீர்த்த செழியன் கோவை *(75* கட்டளைக் கலித்துறைகள் மட்டும், குறைநூல்*)*, கங்காதரச் செழியன் வண்ணம் *(*குறைநூல்*)*, தாகந்தீர்த்த செழியன் பிள்ளைத்தமிழ் *(103* பெரிய ஆசிரிய விருத்தங்கள்*)*, அந்தாலந்தீர்த்த செழியதரையன் மஞ்சரி (காப்புவெண்பா, *1, 395* கண்ணிகளாலான கலிவெண்பா, *1)* என ஆறு சிற்றிலக்கியங்கள் குறிப்புரையுடன் இடம் பெற்றுள்ளன. அனைத்து நூல்களுக்கும் தனித்தனியாகச் சொல்லடைவு இணைக்கப்பட்டுள்ளது.

இந்த ஆறு பிரபந்தங்களில் ஈற்றில் குறிப்பிடப்பெற்றுள்ள அந்தாலந்தீர்த்தான் மஞ்சரி மூலம் மட்டும் சென்னைப் பல்கலைக்கழகத்தில் தமிழாய்வின் ஏழாம் தொகுதியில் *1978*இல் ஒரே ஏட்டின் துணையுடன் பேரா. மு. சண்முகம்பிள்ளை அவர்களால் வெளியிடப்பட்டது. இந்தத் தமிழ்ப் பல்கலைக்கழகப் பதிப்பிற்கு அந்தச் சுவடியுடன் அதற்கு *40* ஆண்டுகளுக்கு முன் எழுதப்பெற்ற மற்றொரு சுவடியும் கிடைத்தது. தமிழ்ப் பல்கலைக்கழகத்தின் பதிப்பில் உரையும் எழுதப்பட்டுள்ளது.

இந்த மஞ்சரி ஒன்றைத்தவிர ஏனைய ஐந்து பிரபந்தங்களும் முதன்முறையாக உரையுடன் இப்பதிப்பில் வெளியாகி உள்ளன. பாட நிர்ணயம், உரை, சொல்லடைவு முதலிய பதிப்புப்பணிகள் யாவும் இச்சொற்பொழிவாளரால் செய்யப்பெற்றன. மைய அரசு நல்கைத் திட்டத்தின் இயக்குநர் மற்றும் ஓலைச்சுவடித்துறைத் தலைவர் என்பதால் பேரா. மு. சண்முகம்பிள்ளை அவர்கள் பொதுப் பதிப்பாசிரியராக அமைந்தார். அவர் விரிவான முகவுரை வரைந்துள்ளார்.

தமிழ்ப் பல்கலைக்கழகத்தின் தமிழியல் காலாண்டு ஆய்விதழாகிய தமிழ்க்கலையின் *1983*ஆம் ஆண்டு செப்டம்பர் இதழில் *(தமிழ் 1, கலை 3)* இச் சொற்பொழிவாளன் வெளியிட்டிருந்த "சேலம் செழியதரையர்கள் - ஒரு சிற்றாய்வு" என்னும் வரலாற்றுக் கட்டுரையை அடியொற்றி, இப்பதிப்பின் முகவுரையில் பேரா. மு. சண்முகம்பிள்ளை எழுதிய செழியதரையர்களின் வரலாறு இடம் பெற்றுள்ளது. இந்தச் செழியதரையன் பிரபந்தங்களே மைய அரசு நல்கைத் திட்டத்தின் இறுதிப்பணியாதலின் தமிழ்ப் பல்கலைக் கழகத்தின் முதன்மைத் துணைவேந்தர் ஆகிய முதுமுனைவர் வ.ஆய். சுப்பிரமணியம் அவர்கள் நல்கைத் திட்டம் முழுவதற்குமான அறிக்கையைப் போலப் பின்னுரை வழங்கியுள்ளார்.

## தொல்காப்பியம் - சொல்லதிகாரம் - இளம்பூரணம்

*1988*இல் இந்த இலக்கண உரை வெளியாயிற்று. அன்றுவரை வெளியாகியிருந்த இளம்பூரணச் சொல்லதிகாரப் பதிப்புகளோடு பேரா. அடிகளாசிரியர் அவர்கள் அரிதின் தேடிச் சேமித்து வைத்திருந்த இரண்டு ஓலைச்சுவடிகளும் ஆராயப்பெற்றன. இப்பதிப்பின் பயனைப் பற்றிப் பதிப்பாசிரியராகிய அடிகளாசிரியர், "யான் செய்த ஆராய்வால் பல பிழைகள் திருந்தின. நூற்பாக்களுக்கும் உரைக்கும் நல்ல பாடங்கள் கிடைத்தன. வேண்டும் குறிப்புகளை எழுதிச் சேர்த்தேன். உரையைப் படித்துக் கொண்டு வரும்பொழுது உரையிலும் இடைச்செருகல் இருப்பதாக உணர்ந்தேன். பெயரியலில் பல நூற்பாக்கட்கும் வினையியலில் சில நூற்பாக்கட்டும்

எழுதப்பட்டிருந்த இளம்பூரணர் உரை எக்காரணத்தினாலோ சிதைந்து போக, சிதைந்த இடங்களில் சேனாவரையர் உரையை வைத்து யாரோ நிறைவு செய்துள்ளனர் என்னும் செய்தி புலனாயிற்று"[48] எனக் கூறுகிறார்.

நூற்பாச் சொல்லகராதி, உரைப்பொருளடைவு, உதாரண மேற்கோள் அகராதி, நூற்பா முதற்குறிப்பகராதி ஆகிய இணைப்புகள் இப்பதிப்பின் பயன்பாட்டை மிகுவிக்கின்றன. பொதுவாகக் கூறுமிடத்துத் தொல்காப்பிய ஆய்வில் இப்பதிப்பு மிகச்சிறப்பாகக் குறிப்பிடப்பட வேண்டிய ஒன்று.

**இலக்கணச் சூடாமணி:** இதுவரை அச்சாகாத இந்த யாப்பிலக்கணம் *1990*ஆம் ஆண்டு வெளியிடப்பெற்றது. சுவடி நூலகத்தின் சுவடியோடு, சென்னை டாக்டர். உ.வே.சா. நூலகம், கோவை பேரூர்த் தமிழ்க் கல்லூரி ஆகிய இடங்களிலிருந்த சுவடிகளும் பதிப்பிற்குப் பயன்கொள்ளப் பெற்றன. இப்பதிப்பிற்கு முனைவர் சா. கிருட்டினமூர்த்தி குறிப்பாசிரியராகவும், முனைவர் த.கோ. பரமசிவம் பொதுப் பதிப்பாசிரியராகவும் நூலில் குறிப்பிடப்பட்டுள்ளனர். பொதுப் பதிப்பாசிரியரின் பதிப்புரையோடு நூலின் பதிப்புப் பணியை மேற்கொண்ட முனைவர் சா. கிருட்டினமூர்த்தியவர்களின் விளக்கமான ஆய்வுரை, இயல் விளக்கக் கட்டுரைகள், நூற்பா முதற்குறிப்பகராதி, உதாரண முதல்நினைப்புக்காரிகை, அகரநிரல், நூற்செய்யுள் சொல்லகர நிரல், உரைச்சொல் - தொடர் அகரநிரல், இலக்கண மேற்கோள் அகரநிரல், இலக்கிய மேற்கோள் அகரநிரல் ஆகியன இப்பதிப்பை அணிசெய்கின்றன. பொதுவாகக் கூறுமிடத்து இந்த இலக்கணச் சூடாமணி யாப்பியல் ஆய்விற்குப் பெரிதும் துணை செய்வதாகும்.

**அறுவகை இலக்கணம்:** எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி என்பனவற்றோடு புலமை இலக்கணமும் சேர்ந்து இந்நூலில் ஆறு வகைகள் இடம் பெறுகின்றன. வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகளால் இயற்றப்பெற்ற இந்நூல் நூலாசிரியரின் காலத்திலேயே பூவை. கல்யாண சுந்தர முதலியாரால் *1893*ஆம் ஆண்டு பதிப்பிக்கப்பெற்றது. அடுத்து *1978*இல் திருப்பேரூராதீன வெளியீடாக மறுபதிப்பு வந்தது. இரண்டும் மூலம் மட்டுமே அமைந்த பதிப்புகள் ஆகும்.

வண்ணச்சரபர் தம் கைப்பட எழுதிய ஓலைச்சுவடி அவருடைய வழிமுறையினரிடமிருந்து பெற்றுவரப்பட்டு இந்தப் பதிப்பிற்கு மூல ஏடாகப் பயன்படுத்தப்பெற்றது. தெளிவான உரை, நூற்பா முதற்குறிப்பு அகர வரிசை, மேற்கோள் இலக்கண நூற்பா அகராதி, மேற்கோள் இலக்கியப் பாக்களின் அகராதி முதலியன இப்பதிப்பில் இடம் பெற்றுள்ளன. உரையும் பதிப்பும்

முழுமையாக நிறைவேற்றப்பெற்று இந்த அறுவகை இலக்கணத்தின் தட்டச்சுப்படியை *1984*ஆம் ஆண்டு சமர்ப்பித்தேன். இது *1991*ஆம் ஆண்டு வெளியிடப்பெற்றது.

இந்த இலக்கியப் பதிப்புகளைத் தவிரத் தமிழ்ப் பல்கலைக்கழகத்தின் ஓலைச்சுவடித்துறை சித்த மருத்துவத் துறையின் போகர் வைத்தியம் *700* (முதல் பதிப்பு *1985*, இரண்டாம் பதிப்பு *1991*) அகத்தியர் குழம்பு (*1986*) ஆகிய உரையோடு கூடிய சுவடிப்பதிப்புக்களிலும் பங்கேற்றது.

அச்சாகிவிட்ட இந்த நூல்களேயன்றி வீரபாண்டியக் கட்ட பொம்மனின் வரலாற்றைக் கூறும் கலியுகப் பெருங்காவியம் (*3003* பாடல்), தருமர் அசுவமேத யாகத்தை இஸ்லாமியக் கவிஞர் ஒருவர் வருணிக்கும் சாந்தாதி அசுவமகம் (ஏறத்தாழ *4100* விருத்தங்கள்), செழியதரையன் பஞ்சதந்திரம் (சற்றேறக்குறைய *800* செய்யுள்கள்) ஆகிய மூன்று நூல்கள் பதிப்புப் பணிகள் நிறைவேறி, அச்சுக்கு ஆயத்தமான நிலையில் ஓலைச்சுவடித் துறையில் உள்ளன. விரைவில் இவையும் தமிழ்கூறு நல்லுலகில் உலாவரும் என நம்புகிறேன்.

5. **கருத்தரங்கங்கள்:** தமிழ்ப் பல்கலைக்கழகத்தின் ஓலைச்சுவடித்துறை இதுவரை நான்கு கருத்தரங்குகளை நடத்தியுள்ளது.

*1) 1998*ஆம் ஆண்டு மார்ச் மாதம் *22, 23, 24* ஆகிய மூன்று நாட்கள் சுவடிப்பதிப்பு நெறிமுறைகள் என்னும் பொதுத்தலைப்பில் இத்துறையின் முதல் கருத்தரங்கம் நடைபெற்றது. இதில் *21* ஆய்வுக் கட்டுரைகள் படிக்கப்பட்டு விரிவாக விவாதிக்கப்பெற்றன. இக்கருத்தரங்கக் கட்டுரைகளும், அமர்வுச் சிந்தனைகள் என்னும் தலைப்பில் விவாதச் சுருக்கமும் சேர்ந்த ஆய்வுமலர் சுவடிப்பதிப்பு நெறிமுறைகள் என்னும் பெயரால் *1989*ஆம் ஆண்டு மார்ச் மாதம் பதிப்பிக்கப்பெற்றுள்ளது.

*2)* இத்துறையின் இரண்டாவது கருத்தரங்கு *1989*ஆம் ஆண்டு மார்ச்சுத் திங்கள் *15, 16, 17* ஆகிய தேதிகளில் நடைபெற்றது. மொழிவளர்ச்சியில் சுவடி பதிப்பித்தலின் தேவை என்னும் பொதுத் தலைப்பில் *22* ஆய்வுக் கட்டுரைகள் அரங்கேற்றப்பட்டு விவாதிக்கப்பட்டன. இக்கட்டுரைத் தொகுப்பு அச்சில் ஏறும் நாளை எதிர்பார்த்துக் கொண்டுள்ளது.

*3)* சுவடிப்பதிப்பு வரலாறு என்னும் பொதுத்தலைப்பில் மூன்றாவது கருத்தரங்கம் *1990*ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் *2, 3, 4* ஆம் தேதிகளில் நடைபெற்றது. இதில் *23* கட்டுரைகள் அரங்கேறின. விவாதமும் நடந்தது. ஆனால் அச்சேறவில்லை.

*4)* அதே சுவடிப் பதிப்பு வரலாறு தொடர்பான கருத்தரங்கம் *1994*ஆம் வருடம் ஏப்ரல் மாதம் *25, 26* ஆம் நாள்களில் நிகழ்ந்தது. *26* கட்டுரைகள் அரங்கேற்றி விவாதிக்கப்பட்டன. இந்தக் கட்டுரைத் தொகுப்பும் பதிப்பாக வேண்டிய நிலையில் உள்ளது.

6. **அறக்கட்டளைச் சொற்பொழிவுகள்:** இத்துறையில் சொற்பொழிவிற்காக திரு. உபயத்துல்லா அறக்கட்டளை உள்ளது. இந்த அறக்கட்டளையின்படி பல சொற்பொழிவுகள் நிகழ்ந்துள்ளன. அவற்றுள் இரண்டு மூன்று சொற்பொழிவுகள் மட்டும் நூலாக வெளியிடப்பட்டுள்ளன.

பொதுவாகக் கூறுமிடத்துத் தமிழ்ப் பல்கலைக்கழகத்தின் சுவடியியற் பணிகள் பன்முகப்பட்டதாக உள்ளன எனலாம்.

## 4. மதுரைப் பல்கலைக் கழகம்

இப் பல்கலைக்கழகத்தில் பல ஏட்டுச் சுவடிகள் தொகுத்து வைக்கப்பெற்றுள்ளன. இந்தத் தொகுப்பிலிருந்து ஐவர் அம்மானை என்ற நாட்டுப்புறப்பாடல் ஒன்று தனியார் வெளியீடாக வெளிவந்துள்ளது. மதுரைப் பல்கலைக்கழகம் நாட்டார் இலக்கியங்களைச் சுவடிகளிலிருந்து வெளியிடுவதற்கே முழு முதன்மை தந்து செயல்படுகிறது.

வீரபாண்டிய கட்டபொம்மு கதைப்பாடல், முத்துப்பட்டன் கதை, காத்தவராயன் பாடல், கட்டபொம்மு கூத்து, கான்சாகிபு சண்டை, ஐவர் ராசாக்கள் கதை ஆகிய நூல்கள் நாட்டுப்புறப் பாடல்களுக்குரிய பதிப்பு நெறிமுறைகளின்படி அச்சாகியுள்ளன. மண்டல வரலாற்று ஆய்விற்கும், வட்டாரமொழி, பேச்சுமொழி பற்றிய மொழியியல் ஆய்விற்கும், சமுதாயப் பழக்க வழக்கங்களைத் தொகுத்துப் பார்க்கும் மானிடவியல் ஆய்விற்கும் இத்தகைய பதிப்புகள் தேவையாகின்றன. இப்போது நிறைய இளைஞர்கள் இவ்வாய்வில் ஈடுபடுகின்றனர். அவர்களுக்கு இத்தகைய பதிப்புகள் பேருதவியாக இருக்கும்.

### நிறைவுரை

நிறைவாக இந்தத் துறையில் இனிமேல் செய்யவேண்டுவன யாவை என்னும் வகையில் சில கருத்துக்களைக் காணலாம்.

இப்போது ஏறக்குறைய *30,000* தமிழ்ச் சுவடிகளைப் பற்றிய செய்திகள் அறியப்பட்டுளவேனும் எல்லாப் பழஞ்சுவடிகளும் கண்டுபிடிக்கப்பட்டுவிட்டன எனக் கூறமுடியாது. இன்னமும் சில ஆயிரம் ஓலைச்சுவடிகள் ஆங்காங்குப் பதுங்கியிருக்கலாம். அவை நாளுக்குநாள் அழிந்து கொண்டிருக்கின்றன என்பதை மறந்துவிடலாகாது. எனவே இப்போது

அழியாமல் உள்ள சுவடிகள் அனைத்தையும் தொகுப்பதற்கான முயற்சி இடைவிடாமல் நடந்துகொண்டே இருக்க வேண்டும்.

அவ்வாறு தொகுக்கப்படும் சுவடிகளுக்கு எல்லாம் முதலில் பெயர்ப்பட்டியலும், அடுத்து விரிவாகச் சுவடிவிளக்க அட்டவணையும் தயாரிக்கப்பெற்று வெளியிடப்பெறவேண்டும்.

பட்டியலிடப்படுவதோடு பதிப்பிக்கப்படாத நூல்கள், ஒருமுறை அச்சேறியும் கிடைக்காத நூல்கள் ஆகியவற்றிற்கு முன்னுரிமை கொடுத்து அனைத்துச் சுவடிகளுக்கும் பார்வைப்படி தெளிவாக எழுதப்படவேண்டும். கம்பராமாயணம், கந்தபுராணம் போன்ற மிகப்பெரிய நூல்களுக்கு வேண்டுமானால் ஏதாவது ஒரு நல்ல பதிப்பின் அடிப்படையில் பாடபேதங்கள் மட்டும் குறிக்கப்படலாம். முன்பு செந்தமிழ் மாத இதழில் கம்பராமாயணம் பாடாந்தரம் என்று தலைப்பில் இவ்வாறு செய்யப்பெற்றது எல்லோரும் அறிந்ததே.

இந்தச் சுவடிப்பணிகள் இப்போது பல நிறுவனங்களில் மிகச் சிறப்பாக நடைபெற்று வருகின்றன. ஆனால் அந்த நிறுவனங்களுக்கிடையே முழுமையான கருத்துப்பரிமாற்றம் இருப்பதாகத் தெரியவில்லை. இணைந்து செய்தால் விளையும் பயன் மிகச் சிறப்பாக இருக்கும். பணியிலே போட்டி இருக்கலாம். ஆனால் பொறாமையோ மறைவோ தேவையில்லை. யார் செய்தாலும் பணி தமிழ்ப்பணிதானே? இணைந்து செய்தால் ஒன்றையே பலர் செய்தல், முடிந்தவற்றை மீண்டும் செய்தல், குறையாகச் செய்தல் போன்ற பலவற்றைத் தவிர்க்கலாம். இதற்கு வாய்ப்பாகத் தமிழ்ச் சுவடிநூலகத் தலைவர்கள் மூன்று மாதத்திற்கு ஒருமுறையாவது ஓரிடத்திற்கூடித் தங்கள் செயல்பாடுகளைப் பரிமாறிக் கொண்டால் ஆய்வின் அளவும் தரமும் மிகும். உலகமே ஒரு கிராமமாகச் சுருங்கிவிட்டது எனக் கூறிக்கொள்ளும் இன்றைய சூழ்நிலையில் சுடிவயியலாரின் சிந்தனை இத்துறையில் செல்லவேண்டும்.

இத்துறையில் உழைப்பவர்கள் ஓர் உண்மையைத் தம் கவனத்தில் கொள்ளவேண்டும். இந்தச் செயல்கள் எல்லாம் தமிழில் பட்டமேற்படிப்பு முடித்த மாணவர்களில் ஒரு விழுக்காட்டினருக்குக்கூட நேரிற் பயன்தராது. உண்மை இப்படியிருக்கப் பொதுமக்களைப் பற்றிக் கூறவே வேண்டாம். சுவடியியற் பணிகள் அடிப்படை அறிவியல் (Basic Science) ஆய்வுகளைப் போன்றவை. இது விரல்விட்டு எண்ணக்கூடிய மிகச் சிலருக்குத்தான் நேரடியாகப் பயன்படும். ஆனால் இதுதான் தொழில்நுட்பத்திற்கு (Technology) அடிப்படை. தொழில்நுட்பமாக வந்துவிட்ட பிறகு அனைவருக்கும் பயன்படும். இந்த உண்மை உள்ளத்தில் பதிந்துவிட்டால் சுவடியியல் ஆய்வாளர்களுக்கு நமக்குச் சமுதாயத்தில் பெரிய விளம்பரம் கிடைக்கவில்லையே என்ற ஏக்கம் இருக்காது.

சுவடிப்பதிப்பில் ஈடுபடுபவர்கள் தாம் மேற்கொள்ளும் பதிப்புப் பணி இலக்கியமில்லாமல் வேறு துறையைச் சார்ந்ததாக இருந்தால் (மருத்துவம், சோதிடம், தத்துவம், இசை போன்றவை) அத்துறையில் வல்ல ஒருவரின் துணையோடு பதிப்பிக்க வேண்டும். இவ்வாறு செய்தால் நூல்களில் செய்திப் பிழைகள் (factual errors) ஏற்பட வாய்ப்புக்கள் குறைவு.

சுவடியியலில் ஈடுபடுவோர் மெய்ப்புத் திருத்துதல், பக்கம் அமைத்தல் (page setting) போன்ற அச்சகப் பணிகளிலும் திறமை வாய்ந்தவர்களாக இருந்தால் பதிப்பு மிகச் சிறப்புடையதாக விளங்கும்.

தமிழ்ச் சுவடியியற் பணிகளுக்குத் தமிழக அரசு நல்கைகளை மிகத் தாராளமாக வழங்க வேண்டும் - அதற்காக உச்சவரம்பு எதுவும் இல்லாமலிருந்தாலும் நல்லதே. ஆனால் வழங்கப்படும் தொகை தக்காருக்குத் தக்க பணிகளுக்காக உரிய நேரத்தில் அளிக்கப்படுகிறதா? அது சரியாகப் பயன்படுத்தப்படுகிறதா? என்பனவற்றைக் காய்தல் உவத்தல் இன்றி உண்மையாகப் பார்வையிடுதலில் மிகக் கவனமாக இருக்க வேண்டும். இத்துறையில் தவறு செய்வோர் மிக விரைவில் ஊரறிய ஒதுக்கப்படவேண்டும்.

சுவடிப் பதிப்பாசிரியர்கள் இன்றைய வணிக நோக்கு அச்சகங்களால் படுகின்ற இன்னல்கள் அனைவரும் அறிந்த ஒன்று. நல்ல இலக்கியப் பதிப்புகளுக்காகச் சுவடி நூலகங்கள் எல்லாம் இணைந்து தனியாக அச்சகம் ஒன்றை நிறுவிக் கொண்டால் பதிப்புக்களின் இலக்கியத்தரம் உயரும் என்பது ஒருதலை. இன்றைய அறிவியல் வளர்ச்சியால் அச்சுக்கலை எவ்வளவோ முன்னேற்றமடைந்திருந்த போதிலும், பாமர மக்களால் பயன்படுத்தப்படாத இலக்கியங்களைப் பதிப்பிக்கும் சுவடிப் பதிப்பாசிரியர்களுக்கு இந்தப் புதுமையான வசதிகள் முழுமையாகக் கிட்டுவதில்லை. எனவே, தமிழ்ச்சுவடிப் பதிப்புக்களுக்காகச் சிறப்பாக அச்சகம் ஒன்று அவசியம் தேவை. இதை எப்படி நிறுவலாம், எவ்வாறு நிர்வகிக்கலாம் எனச் சிந்தித்துச் செயல்படுத்துவது நலம்.

இறுதியாக ஒரு கருத்து. இன்று பல இளைஞர்கள் சுவடியியலில் ஆர்வம்கொண்டு கற்றுக்கொள்ளவும், பணிபுரியவும் விரும்புகின்றனர். ஆனால் ஒரு சிலர் இந்தச் சுவடியியலைக் கற்க விழைபவர்களின் ஊக்கம் குன்றும்வகையில், இதன் சிரமங்களை அளவுக்குமேல் மிகைப்படுத்திக் கூறி, அச்சத்தை ஏற்படுத்துகின்றனர். இது தமிழ்ச்சுவடிகள் யாவும் விரைவில் இனம்காணப்பட்டுப் பதிப்பும் பெறவேண்டும் என்னும் பொதுத்தமிழ் - வளர்ச்சிக் கொள்கைக்கு ஊறு விளைவிப்பதாகும். எனவே, சுவடியியல் மூதறிஞர்கள் இத்துறையில் நுழையும் இளைஞர்களுக்கு ஊக்கமளித்தும் துணை செய்தும் அவர்கள் வளர வழி வகுக்க வேண்டும்.

## அடிக்குறிப்புகள்

| | |
|---|---|
| 1. முனைவர் இ. சுந்தரமூர்த்தி | பழந்தமிழ்ப்பதிப்புகள் (கட்டுரை), சுவடிப்பதிப்பு நெறிமுறைகள், தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர், 1989, பக். 104. |
| 2. முனைவர் ம. இராசேந்திரன் | நூலாக்கத்தில் தாள் சுவடிகளும் ஓலைச்சுவடிகளும் (கட்டுரை), சுவடிப்பதிப்பு நெறிமுறைகள், பக். 90. |
| 3. பேரா. மு. சண்முகம் பிள்ளை | தமிழ்ச் சுவடி விளக்க அட்டவணை முதல் தொகுதி, தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர், 1987, முகவுரை, பக். xiv. |
| 4. மேலவர் | மேலது, பக். xiv. |
| 5. முனைவர் ஆறு. இராமநாதன் | கதைப்பாடல் பதிப்புகள் (கட்டுரை) சுவடிப்பதிப்பு வரலாறு 2 - கருத்தரங்கக் கட்டுரைகள், 1994, அச்சிடப்படாதது. ஓலைச் சுவடித்துறை, தமிழ்ப் பல்கலைக்கழகம் |
| 6. முனைவர் கி. ஜெயகுமார் | ஆசியவியல் நிறுவனச் சுவடிப்பணிகள் (கட்டுரை), சுவடியியல் சுவடுகள், தமிழ்த்துறை, ஸ்ரீராமகிருஷ்ணா மிஷின் வித்யாலயம், கோயமுத்தூர்-20, முதற் பதிப்பு. 1999, பக். 52. |
| 7. ----- | கணபதி ஆயிரம், உலகத் தமிழ்க்கல்வி இயக்கம், சென்னை, 1984, பின் அட்டை. |
| 8. ----- | மேலது. |
| 9. முனைவர் ச.வே. சுப்பிரமணியன் | மேலது, முகவுரை, பக். vii. |
| 10. முனைவர் கி. நாச்சிமுத்து | கேரளத்திலுள்ள சுவடித் தொகுப்புகள் (கட்டுரை), சுவடியியல் சுவடுகள், தமிழ்த்துறை, ஸ்ரீஇராமகிருஷ்ண மிஷின் வித்யாலயம், கோயமுத்தூர் - 20, 1999, பக். 23. |
| 11. மேலவர் | மேலது, பக். 24. |

| | |
|---|---|
| 12. முனைவர் ப. பத்மநாபன் தம்பி | கேரளத் தமிழ்ப் பதிப்புக்கள் (கட்டுரை), சுவடிப்பதிப்பு வரலாறு 2 - கருத்தரங்கக் கட்டுரைகள், 1994, அச்சிடப்படாதது, ஓலைச் சுவடித்துறை, தமிழ்ப் பல்கலைக்கழகம். |
| 13. முனைவர் கி. நாச்சிமுத்து | தமிழ்ச் சுவடிப்பதிப்பில் கேரளம் (கட்டுரை), சுவடிப்பதிப்பு வரலாறு 2 - கருத்தரங்கக் கட்டுரைகள், 1994, அச்சிடப்படாதது, ஓலைச் சுவடித்துறை, தமிழ்ப் பல்கலைக்கழகம். |
| 14. இரா. நிர்மலாதேவி | திருவனந்தபுரம் கேரளப் பல்கலைக்கழகத் தமிழ்ச் சுவடிகள் அட்டவணை, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1983, பதிப்பாசிரியர் முன்னுரை, பக். vi. |
| 15. முனைவர் ய. மணிகண்டன் | சரசுவதி மகால் நூலகத் தமிழ்ச் சுவடிகள்- ஆய்வுப் பதிப்புகள் (கட்டுரை), சுவடியியல் தேசியக் கருத்தரங்கக் கட்டுரைகள் (அச்சாகாதது), 1997, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை. |
| 16. மு. சதாசிவம் | சுவடிப்பதிப்பும் சரசுவதி மகால் நூலகமும் (கட்டுரை), சுவடிப்பதிப்பு வரலாறு, 1990, கருத்தரங்கக் கட்டுரைகள், அச்சாகாதது, ஓலைச் சுவடித்துறை, தமிழ்ப் பல்கலைக்கழகம். |
| 17. ப.வே. நாகராஜன் | டாக்டர் ஐயர் அவர்களுக்குப் பிந்தைய சுவடி நூலகப் பதிப்புகள் (கட்டுரை), சுவடிப்பதிப்பு வரலறு, கருத்தரங்கக் கட்டுரைகள், 1990, அச்சாகாதது, ஓலைச் சுவடித்துறை, தமிழ்ப் பல்கலைக்கழகம். |
| 18. முனைவர் ய. மணிகண்டன். | சரசுவதி மகால் நூலகத் தமிழ்ச் சுவடிகள் ஆய்வுப் பதிப்புகள் (கட்டுரை), சுவடியியல் தேசியக் கருத்தரங்கக் கட்டுரைகள் (அச்சாகதது), 1997, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை. |

| | |
|---|---|
| *19.* முனைவர் ஆர். கௌசல்யா | தமிழிசைப் பதிப்புகள் *(கட்டுரை),* சுவடிப் பதிப்பு வரலாறு *2* - கருத்தரங்கக் கட்டுரைகள், *1994,* அச்சாகாதது, ஓலைச் சுவடித் துறை, தமிழ்ப் பல்கலைக்கழகம். |
| *20.* டாக்டர் நா. மகாலிங்கம் | புலவர் புராணம், இராமானந்த அடிகளார் அறக்கட்டளை, கோயமுத்தூர் - *6, 1994,* பதிப்புரை பக். xiii. |
| *21.* ---- | மேற்படி, நூல், பக். *712.* |
| *22.* வ. சுப்பையா பிள்ளை | பதிப்புத் துறைப் பட்டறிவு *(கட்டுரை),* செந்தமிழ்ச் செல்வி இதழ், சிலம்பு. *45,* பக். *556.* |
| *23.* இரா. இளங்குமரன் | சுவடிப்பதிப்பு வரலாறு *(அறக்கட்டளைச் சொற்பொழிவு),*தமிழ்ப் பல்கலைக்கழகம், பக். *70-71.* |
| *24.* ம. பாலசுப்பிரமணிய முதலியார் | பெரிய புராணம், சைவ சித்தாந்த மகாசமாஜம், சென்னை, *1934,* பதிப்புரை, பக்கம் iv. |

*25.* இதுபற்றிய செய்தி ஒன்றைத் தஞ்சை சரசுவதி மகால் நூலகம் இச்சொற்பொழிவாளரின் பதிப்பில் வெளியிட்டுள்ள திருவேட்டைநல்லூர் ஐயனார் பள்ளு என்னும் நூலின் பதிப்புரையின் *24, 25*ஆம் பக்கங்களிற் காண்க.

| | |
|---|---|
| *26.* ---- | கமலாலயச் சிறப்பு. டாக்டர். உ.வே.சா. நூல்நிலையம், சென்னை, *1961,* முன்னுரை, பக். x. |
| *27.* ---- | ஸ்ரீமத் கம்பராமாயணம், பாலகாண்டம், டாக்டர் உ.வே.சா. நூல்நிலையம், சென்னை, *1967,* பதிப்புரை, பக். v. |
| *28.* ---- | மேலது, முகவுரை, பக். xv - xvi. |
| *29.* மோ.கோ. கோவைமணி | சென்னை அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகப் பருவ இதழில் சுவடிப் பதிப்புகள் *(கட்டுரை),* சுவடியியல் தேசியக் கருத்தரங்கக் கட்டுரைகள், *1997,* உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை. |

| | |
|---|---|
| *30*. ப.வெ. நாகராஜன் | தொல்பொருள் துறைப் பதிப்புகள் (கட்டுரை), சுவடிப்பதிப்பு வரலாறு *2* - கருத்தரங்கக் கட்டுரைகள், *1994*, ஓலைச் சுவடித்துறை, தமிழ்ப் பல்கலைக்கழகம். |
| *31*. வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் | குருபர தத்துவம் - சென்னைச் சருக்கம், சிரவை யாதீனம் - முதற்பதிப்பு, *1966*. |
| *32*. தி.வே. கோபாலய்யர் | சுவடிப்பதிப்பு வரலாற்றில் தேவாரத் திருமுறைகளும் திவ்வியப் பிரபந்தமும் (கட்டுரை), சுவடிப்பதிப்பு வரலாறு, கருத்தரங்கக் கட்டுரைகள், *1990*, அச்சாகாதது, ஓலைச் சுவடித்துறை, தமிழ்ப் பல்கலைக்கழகம். |
| *33*. வே.ரா. தெய்வசிகாமணிக் கவுண்டர் | கொங்குமண்டல சதகங்கள், தவத்திரு, சாந்தலிங்க அடிகளார் தமிழ்க் கல்லூரி, பேரூர், கோவை. *10*, *1986*, பக். *152*. |
| *34*. மேலவர் | புறப்பாட்டுரை சாந்தி ட்ரஸ்ட், பொள்ளாச்சி - *638202*, *1976*, பதிப்புரை, பக். *2*. |
| *35*. மோ.கோ. கோவைமணி | செந்தமிழ் இதழில் சுவடிப் பதிப்புகள் (கட்டுரை), சுவடிப்பதிப்பு வரலாறு, *2* - கருத்தரங்கக் கட்டுரைகள், *1994*, அச்சாகாதது, ஓலைச் சுவடித் துறை, தமிழ்ப் பல்கலைக்கழகம். |
| *36*. சு. நல்லசிவன் பிள்ளை | செந்தமிழ் மாத இதழ் தொகுதி - *15*, பகுதி - *1* |

(மேற்கோள் - இரணியவதைப் பரணி - சாந்தி ட்ரஸ்ட், பொள்ளாச்சி, பக். xlii.

| | |
|---|---|
| *37*. கி. இராமாநுஜையங்கார் | கூடற்புராணம். மதுரைத் தமிழ்ச்சங்கம், *1929*, முன்னுரை, பக். *4*. |
| *38*. மேலவர் | பன்னிரு பாட்டியல், மதுரைத் தமிழ்ச் சங்கம், *2*-ம் பதிப்பு, *1951*, பதிப்பாசிரியர் முன்னுரை, பக். *2*. |
| *39*. மேலவர் | பாப்பாவினம், மதுரைத் தமிழ்ச்சங்கம், *1932*, முகவுரை பக். ii. |

| | |
|---|---|
| *40*. இரா. இளங்குமரன் | இலக்கண வரலாறு, மணிவாசகர் நூலகம், சிதம்பரம், *1988*, பக். *360*. |
| *41*. ப.வெ. நாகராஜன் | செய்யுட்கோவையும் பாப்பாவினமும் *(கட்டுரை)*, குமரகுருபரர் ஆய்வு மாலை - குமரகுருபரர் இலக்கிய ஆய்வு விழா வெளியீடு, வாரணாசி, *1999*, தொகுதி, *2* பக். ii. *37*. |
| *42*. முனைவர் ச.வே. சுப்பிரமணியன் முனைவர் அன்னி தாமசு | பிரபந்த தீபிகை, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, *1982*, முன்னுரை, பக். vii. |
| *43*. கி. இராமாநுஜையங்கார் | மாறனகப் பொருளும் திருப்பதிக் கோவையும், மதுரைத் தமிழ்ச் சங்கம், *1932*, முகவுரை, பக். vi, vii. |
| *44*. நாராயணையங்கார் | மாறனலங்காரம், மதுரைத் தமிழ்ச்சங்கம், *1915*, முகவுரை, பக். ரு. |
| *45*. டாக்டர். உ.வே.சாமிநாதையர் | திருவாலவாயுடையார் திருவிளையாடற்புராணம், *1906*, முகவுரை, பக். *7*. |
| *46*. ஊரன் அடிகள் | திரு அருட்பா *1-5* திருமுறைகள், இராமலிங்கர் பணி மன்றம், சென்னை - *86*, இரண்டாம் பதிப்பு, *1981*, பக். *58*. |
| *47*. சண்முகம் பிள்ளை | பாரதி தீபம், சென்னைப் பல்கலைக் கழகம், *1980*, பக். xiii. |
| *48*. திரு. அடிகளாசிரியர் | தொல்காப்பியர்-சொல். இளம்பூரணம், தமிழ்ப் பல்கலைக்கழகம், *1988*, பதிப்பாசிரியர் உரை, பக். *8*. |

# 3. சுவடி நூலகங்களின் பதிப்பு முயற்சி (சென்னை அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகம், சரசுவதிமகால் நூலகம்)

மோ. கோ. கோவைமணி

அச்சுக்கலை உருவாவதற்கு முன்னரே சுவடிகளில் பதிப்பு முயற்சி நடைபெற்றிருக்கிறது. ஒரே நூல் கொண்ட பல சுவடிகளை ஆய்ந்து எழுதிய திருத்தச் சுவடிகளைச் 'சுவடிப்பதிப்புச்சுவடி' எனலாம். இதன் வளர்நிலையில், அச்சுக்கலை அறிமுகமான பிறகு ஒரு நூல் கொண்ட பல சுவடிகளையோ ஒரு சுவடியையோ ஆய்ந்து சரியான பாடத்தைத் தெரிவு செய்து அச்சிட்டு வெளிப்படுத்தியதையே 'சுவடிப்பதிப்பு நூல்கள்' என்கிறோம். தமிழில் முதல் சுவடிப்பதிப்பு நூல் கி.பி. *1812*இல் 'திருக்குறள்-நாலடியார்' எனும் இரண்டு நூல்களும் ஒரே பதிப்பாக வெளிவந்துள்ளது. இதனைத் தொடர்ந்து பல சுவடிப்பதிப்பு நூல்கள் தனிமனிதனால் பதிப்பிக்கப் பெற்றுள்ளன. பல அமைப்புகளின் சுவடி நூலகத் தோற்றத்திற்குப் பிறகே 'சுவடி நூலகப் பதிப்புகள்' வெளிவந்துள்ளன.

## சுவடி நூலகம்

வாய்மொழியாக வழங்கிவந்த இலக்கியங்கள்-இலக்கணங்கள் ஆசிரியராலோ மாணாக்கர்களாலோ பிறராலோ ஏட்டுருவம் பெற்றுப் பல படிநிலைகளில் அந்நூல்கள் பல்கிப் பெருகிப் பரவலாயின. புலவர்கள் எல்லோரிடமும் எல்லா வகையான நூல்களும் இருக்கும் என்று சொல்லமுடியாது. ஒருவரிடம் உள்ள சுவடி மற்றொருவரிடம் இருக்காது. அவரிடமுள்ள சுவடி வேறொருவரிடம் இருக்காது. இப்படி எத்தனையோ சுவடிகளில், ஒருவரிடம் உள்ளது மற்றொருவரிடம் இல்லாதிருக்கின்றது. தங்களுக்குத் தெரிந்த தேவையான நூல்களை மட்டுமே அக்காலத்தில் அவர்கள் படியெடுத்து வைத்துக்கொண்டனர். மேலும் அவர்கள், தம் சுவடிகளுக்கு மாற்றுச் சுவடிகளைப் பெற்றும் வழங்கியும் இருக்கின்றனர். இப்படிப் பல புலவர்களிடம் பற்பல சுவடிகள் சேர்ந்திருக்கின்றன. இப்படியாகப் புலவர்கள் தம்முடைய நூல்களையும் பிறருடைய நூல்களையும் தொகுத்து வைத்திருந்தனர். ஒவ்வொரு புலவரிடமும் சுவடி நூலகம் ஒன்று நிச்சயம் இருந்திருக்க வேண்டும். இந்நூலகங்களில் ஒரு நூல் ஒருபடியை மட்டுமே

கொண்டதாக இருந்திருக்க வேண்டும். ஏனெனில், ஒரு நூலின் இரண்டாவது படியை எழுதும், எழுதுவிக்கும் நேரத்திற்கும், ஆகும் செலவிற்கும் மற்றொரு தேவையான நூலை எழுதிவிடலாம் அல்லவா! இவ்வாறு இவர்கள் போற்றி வளர்த்துச் சேகரித்த சுவடிகள் இவர்களது வழித்தோன்றல்களின் கவனக் குறைவாலும் இயற்கைச் சீர்கேடுகளினாலும் மூடப்பழக்க வழக்கங்களினாலும் பல்வேறு காலகட்டங்களில் அழியத் தொடங்கின. இந்நிலைகண்ட தமிழறிஞர்களும் தமிழார்வலர்களும் சுவடிகளை மேலும் மேலும் அழிவிலிருந்து காக்க திரட்டவும் தொகுக்கவும் செய்தனர்.

சுவடிகள், புலவர்கள் வீடுகளில் மட்டுமல்லாமல் சில குறுநில மன்னர்கள், வளமனைகள், சைவ-வைணவ மடங்கள் போன்றவற்றில் தொகுத்து வைக்கப்பெற்றிருந்தன. குறுநில மன்னர்கள் மொழிப்புலமையும், புலவர்களைப் போற்றும் இயல்பும், சுவடிகளைச் சேகரிக்கும் தன்மையும் பெற்றிருந்தனர். இவ்வகையில் இராமநாதபுரம் சேதுபதிகள், சேற்றூர் மன்னர்கள், சிவகங்கைக் குறுநில மன்னர்கள், எட்டையபுரம் குறுநில மன்னர்கள், சிவகிரி குறுநில மன்னர்கள், சொக்கம்பட்டி மற்றும் ஊற்றுமலை குறுநில மன்னர்களும், மருதுபாண்டியர், வரதுங்கராமபாண்டியர், அதிவீர ராமபாண்டியர், அமைச்சர் வடமலையப்ப பிள்ளை ஆகியோரும் சுவடிகளைத் தொகுத்து வைத்தவர்களுள் குறிப்பிடத்தக்கவர்களாவர்.

பழம்புலவர்களின் வழிமுறையினரும் சுவடிகளைப் போற்றிப் பாதுகாத்து வந்துள்ளனர். மிதிலைப்பட்டி அழகிய சிற்றம்பலக் கவிராயர், அம்பலவாணக் கவிராயர், திருவம்பலத்தின்னமுதம் பிள்ளை, திருப்பாற்கடனாதன் கவிராயர், திரிகூடராசப்பக் கவிராயர், அண்ணாசாமி உபாத்தியாயர், திருமயிலை சண்முகம்பிள்ளை, தே. இலட்சுமண கவிராயர், தி.த. கனகசுந்தரம்பிள்ளை, திரிசிரபுரம் மீனாட்சிசுந்தரம் பிள்ளை, உ.வே. சாமிநாதையர், சி.வை. தாமோதரம்பிள்ளை போன்றோர் குறிப்பிடத் தக்கவர்களாவர்.

புலவர்களும், மன்னர்களும், குறுநில மன்னர்களும் சுவடிகளைச் சேகரித்து வைத்ததைப் போல் சில மடங்களும் இப்பணியில் தங்களை முழுமையாக ஈடுபடுத்திக் கொண்டுள்ளன. மடங்களின்/ஆதீனங்களின் வழியாகத் தொகுக்கப் பெற்ற சுவடிகள் பெரும்பாலும் சமயம் தொடர்பான சுவடிகளாகவே இருந்தன. அழிந்துபோகும் நிலையில் உள்ள சுவடிகளை இம்மடங்கள் படியெடுத்துப் பாதுகாத்து வந்துள்ளன என்று அறியும்போது பெருமையாக இருக்கிறது. இவ்வகையில் பணியாற்றிய மடங்களும் ஆதீனங்களும் சிலவே எனினும் சிறப்பாகப் பணியாற்றின எனலாம். சைவ மடங்களுள் திருவாவடுதுறை ஆதீனம், தருமபுர ஆதீனம், திருப்பனந்தாள்

காசித் திருமடம், காஞ்சி ஞானப்பிரகாசர் மடம், மதுரைத் திருஞானசம்பந்தர் மடம், நெல்லைச் செங்கோல் மடம், திருக்கோவலூர் ஞானியார் மடம், குடந்தை வீரசைவ மடம், சிதம்பரம் வீரசைவ மடம், திருவண்ணாமலை வீரசைவ மடம், துறையூர் மற்றும் மயிலம் வீரசைவ மடங்களும் சுவடிகளைத் தொகுத்துப் பாதுகாத்து வந்தவையாகும். இதுபோல் வைணவ மடங்களும் கோயில்களும் வைணவச் சுவடிகளைச் சேகரித்து வைத்துள்ள செய்திகளையும் அறியமுடிகிறது. குறிப்பாகத் திருவரங்கம் கோயிலில் பலநூறு வைணவச் சுவடிகள் சேகரித்து வைத்திருந்தமை புலப்படும். இச்சுவடிகள் இன்று தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக்கழகத்தில் போற்றிப் பாதுகாத்து வருவது குறிப்பிடத்தக்க ஒன்றாகும்.

புலவர்கள், மன்னர்கள், குறுநில மன்னர்கள், மடங்கள், ஆதீனங்கள் ஆகியன எல்லாம் சுவடிகளைச் சேகரித்தன/படியெடுத்தன என்றாலும் பயன்பாட்டினைப் பார்க்கும் போது, இவை சுயநலப்போக்கிலேயே இருந்துள்ளன. தங்களுக்காகவும், தங்களின் ஆய்வுக்காகவும் மட்டுமே இச்சேகரிப்புகள் பயன்பட்டு வந்துள்ளன. பொதுவாக ஒவ்வோர் இடத்திலும் சேகரித்து வைக்கப்பெற்ற சுவடிகளின் தொகுப்பைச் 'சுவடி நூலகம்' என்று சொல்கிறோம். ஆயினும் இச்சுவடிகள் பொதுமக்களுக்குப் பயன்படுவதில்லை. எனவே, இவற்றைப் பெயரளவிலேயே சுவடி நூலகம் என்று சொல்லமுடிகிறது. பொதுமக்களின் பயன்பாட்டிற்கு உதவும் வகையில் எத்தொகுப்பு உள்ளதோ அதுவே முழுமையான 'சுவடி நூலகம்' என்று சொல்லலாம். இவ்வகையில் சுவடிகளைத் தொகுத்தலையும், சேகரித்தலையும், ஆராய்தலையும், நூல் வெளியிடுதலையும் முக்கிய நோக்கமாகக் கொண்ட சில அமைப்புகள், தோன்றின. இவ்வமைப்புகள் தாம் சேகரித்த சுவடிகளைத் தொகுத்துச் சுவடி நூலகம் ஒன்றைத் தனியே நடத்தி வருகின்றன. இந்நிலையில் அரசினர் கீழ்த்திசைச்சுவடிகள் நூலகம், சென்னை; தஞ்சை சரஸ்வதி மகால் நூல் நிலையம்; மதுரைத் தமிழ்ச்சங்கம்; புதுவைத் தமிழ்ச்சங்கம்; கோவைத் தமிழ்ச் சங்கம்; சரவணபவானந்தம் பிள்ளை அவர்களின் பவானந்தர் கழகம்; மதுரைப் பல்கலைக்கழகம்; தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக்கழகம்; டாக்டர் உ.வே. சாமிநாதையர் நூல் நிலையம்; பேரூர் சாந்தலிங்க அடிகளார் தமிழ்க்கல்லூரி சுவடி நூலகம்; சென்னை அடையாறு நூலகம்; உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை; ஆசியவியல் நிறுவனம், சென்னை; கேரளப் பல்கலைக்கழகக் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகம்; கல்கத்தா தேசிய நூலகம் மற்றும் பல சுவடி நூலகங்கள் குறிப்பிடத்தக்கனவாகும்.

இந்நூலகங்களைப் பற்றியும், அந்நூலகங்களின் பதிப்பு முயற்சிகள் பற்றியும் ஆராயின் ஆய்வு விரியும். எனவே, முழுக்க முழுக்கச் சுவடிகளை

மட்டுமே ஆதாரமாகக் கொண்டு இயங்கிவரும் சென்னை, அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகம் மற்றும் தஞ்சை, சரஸ்வதிமகால் நூல் நிலையம் ஆகிய இவ்விரண்டு நூலகங்கள் மட்டுமே இங்கு ஆய்வுப் பொருளாக எடுத்துக் கொள்ளப்பெற்றுள்ளன.

## சென்னை, அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகம்

கணக்கியலில் ஆர்வமும் திறமும் மிகக்கூர்ந்த 'ஸ்காத்லாந்து நாட்டைச் சேர்ந்த 'கர்னல் காலின் மெக்கன்சி' என்பார் தமிழகத்தில் சர்வேயர் செனரலாகப் பணியாற்றினார். இவர் இந்திய நாட்டு வரலாறு, பண்பாடு பற்றி ஆராயும் போக்கில் அதற்குத் தேவையான ஓலைச்சுவடிகளையும், கல்வெட்டுகளையும் விலைகொடுத்து வாங்கியும், படியெடுத்தும் வைத்திருந்தார். *1818*ஆம் ஆண்டுவரை தென்னாட்டில் இருந்து இப்பெருமகனார் தொகுப்புப் பணியை மேற்கொண்டார். இறுதியாக 'இந்தியாவின் சர்வேயர் செனரல்' என்னும் பதவி உயர்வு பெற்றுக் கல்கத்தாவுக்குச் சென்றார். அங்கே தாம் தொகுத்த ஏட்டுச் சுவடிகளையும் கல்வெட்டுப் படிகளையும் உடன்கொண்டு சென்றார். *1821*ஆம் ஆண்டு இப்பெருமகனார் இயற்கை எய்தினார். இவர்தம் தொகுப்பு நாட்டுக்குப் பயன்பட வேண்டி, கல்கத்தா ஆசிய சங்கத்தாரிடம் ஒப்படைக்கப்பட்டது. இத்தொகுப்பில் தமிழ், தெலுங்கு, மலையாளம், கன்னடம், மராத்தி, அரபி, பாரசீகம், வடமொழி ஆகிய மொழிகளில் சுவடிகள் இருந்தன. இதில் தென்னிந்திய மொழிச் சுவடிகளை*1828*ஆம் ஆண்டு சென்னைக் கல்விச் சங்கம் பெற்றது. இங்கு இச்சுவடிகள் படுத்துறங்கியதால் சென்னை இலக்கிய சங்கம் *1830*ஆம் ஆண்டு மெக்கன்சியின் சுவடிகளைப் பெற்றது.அதன் பின்னர்க் கல்விச் சங்கத்தின் சுவடித் தொகுப்பு, டாக்டர் லைடன் என்பார் தொகுத்து இங்கிலாந்தில் இருந்த சுவடித்தொகுப்பு, சென்னைக் கல்விச் சங்கத்தின் தொகுப்பு, இலக்கியச் சங்கத்தின் தொகுப்பு ஆகியனவெல்லாம் மெக்கன்சியின் தொகுப்புடன் இணைக்கப்பெற்றன. இவ்வாறு எல்லாத் தொகுப்புகளும் இணைக்கப்பட்ட பிறகு மீண்டும் சென்னைக் கல்விச் சங்கத்திற்கே தரப்பெற்றன. இந்நிலையில் *1858*ஆம் ஆண்டில் வில்லியம் டெய்லர் என்பார் விளக்கமான ஒரு பட்டியல் எழுதினார். பிறகு சென்னை மாநிலக்கல்லூரி நூல்நிலையத்துடன் இணைக்கப்பெற்றது. இந்நூல் நிலையம் 'அரசினர் கீழை நாட்டுக் கையெழுத்து நூல் நிலையம்' எனப் பெயர் பெற்றது. இதனைச் சுருக்கமாக 'அரசினர் ஓலைச்சுவடி நூல்நிலையம்' என்றும் அழைப்பர். இன்று இந்நூலகம் சென்னைப் பல்கலைக்கழக நூலகக் கட்டட மேல்தளத்தின் ஒரு பகுதியாக இயங்கி வருகின்றது.

இந்நூலகத்தின் முதல் பதிப்பு முயற்சி கிபி. *1921*ஆம் ஆண்டு தான் தொடங்குகிறது. தி. சந்திரசேகரன் அவர்கள் இந்நூலகக் காப்பாட்சியராக

இருந்த காலத்தில்தான் அதிகமான நூல்கள் ஓலைச்சுவடிகளிலிருந்து பதிப்பாகி இருக்கின்றன. இவரைத் தொடர்ந்து பி. திருஞானசம்பந்தம், ஏ.ஏ. இராமநாதன், ஆர்.கே. பார்த்தசாரதி, ஆர்.என். சம்பத், சி.ஆர். விட்டோபாவு போன்றோரும் காப்பாட்சியராகப் பணியாற்றியுள்ளனர். தற்போது முனைவர் எஸ். சௌந்தரபாண்டியன் அவர்கள் காப்பாட்சியராக இருந்து வருகிறார். முன்னாள் காப்பாட்சியர் தி. சந்திரசேகரன் அவர்களின் காலத்துச் சூழ்நிலை காலத்தில் மீண்டும் தொடங்கிப் பல பதிப்பு நூல்கள் இப்பொழுது வெளிவந்து கொண்டிருக்கின்றன. கிபி. *1948*ஆம் ஆண்டு முதல் இந்நூலகம் அரையாண்டு இதழ் ஒன்றைத் தொடங்கி அதன் மூலம் பல பதிப்பு நூல்களை வெளியிட்டிருக்கிறது.

## சரஸ்வதி மகால் நூல் நிலையம்

கிபி. *1676* முதல் *1855* வரை தஞ்சைப் பகுதியை மராட்டிய மன்னர்கள் ஆட்சி செய்து வந்தனர். அம்மன்னர்களுள் சரபோசியும் ஒருவர். பன்மொழிப் புலமையுடைய அவர் கலைச்செல்வங்களைச் சேகரிப்பதிலும் பாதுகாப்பதிலும் தம்மை முழுமையாக ஈடுபடுத்திக் கொண்டவர். தஞ்சை சரஸ்வதி மகால் நூல் நிலையத்தை நிறுவியவரும் இவரே. தமிழ் மண்ணில் ஆட்சி செய்த சரபோசிக்குத் தமிழ் மொழியின் அருமைபெருமைகள் முதலில் தெரியாமல் தான் இருந்திருக்கிறது. அதனால் தான் அவரது தொகுப்பில் சமஸ்கிருதம், தெலுங்கு, மராட்டி மொழிச் சுவடிகள் உள்ள அளவிற்குத் தமிழ் மொழிச் சுவடிகள் இல்லாமல் போனது எனலாம்.

காசியில் ஏற்பட்ட அனுபவத்தால் தான் சரபோசி மன்னர் தமிழ்ச் சுவடிகளைத் தொகுக்கவும், படியெடுக்கவும், விலைகொடுத்து வாங்கவும் தொடங்கினார். இப்படியாக இந்நூல் நிலையத்தில் பல்வேறு மொழிச் (தமிழ், தெலுங்கு, மலையாளம், மராத்தி, சமஸ்கிருதம்) சுவடிகளும், கலைநூல் சுவடிகளும் பல்லாயிரமாகப் பல்கிப் பெருகின. தமிழ்ச் சுவடிகளை ஒழுங்குபடுத்தி வைக்கத் தமிழ்ப் புலமையாளர்களான கொட்டையூர் சிவக்கொழுந்து தேசிகர், காரைக்குறிச்சி வேலாயுத உபாத்தியாயர், திருவேங்கடத்தாபிள்ளை, சுப்பராயக் கவிராயர், வேங்கடாசலம் பிள்ளை, புலவர் வீ. சொக்கலிங்கம்பிள்ளை ஆகியோர் பணிபுரிந்திருக்கின்றனர். இந்நூலகத்தின் முதல் பதிப்பு முயற்சி கி.பி. *1949*ஆம் ஆண்டில் தொடங்குகின்றது. கி.பி. *1939*ஆம் ஆண்டு முதல் இந்நூலகம் நாத்திங்கள் இதழ் (நான்கு மாதத்துக்கு ஒருமுறை வந்த இதழ்) ஒன்றை வெளியிட்டு அதன் வாயிலாகவும் பல சுவடிப்பதிப்பு நூல்களை வெளியிட்டு வந்துள்ளது.

இந்நூலகத்தின் முதல் கௌரவக் காரியதரிசியாக *1918*ஆம் ஆண்டு திருவாளர் தி. சாம்பமூர்த்திராவ் அவர்கள் பொறுப்பேற்றார். அடுத்து *1938*ஆம்

ஆண்டு திருவாளர் எஸ். கோபாலன் அவர்கள் பொறுப்பேற்றார். இவரது காலத்தில் தான் சரஸ்வதிமகாலின் பதிப்பு முயற்சி தொடங்கியது எனலாம். இவர் *1963*ஆம் ஆண்டுவரை தொடர்ந்து *25* ஆண்டுகள் இந்நூலகக் கௌரவ காரியதரிசியாகப் பணியாற்றி வந்துள்ளார். இவருக்குப் பிறகு ஓ.ஏ. நாராயணசாமி *(1963-68)*, நீ. கந்தசாமிப்பிள்ளை *(1968-73)*, அ. வடிவேலன் *(1973-79)*, ஆகியோர் கௌரவக் காரியதரிசியாகப் பணியாற்றி வந்துள்ளனர். இவர்களது காலத்திலும் பல நூல்கள் வெளியாகியுள்ளன. *1979*ஆம் ஆண்டுக்குப் பிறகு மாவட்ட ஆட்சித்தலைவரின் மேற்பார்வையில் நிர்வாக அலுவலரைக் கொண்டு இந்நூலகம் செயல்பட்டது. *1986*ஆம் ஆண்டு முதல் மாவட்ட ஆட்சித் தலைவர் அவர்கள் இயக்குநர் பொறுப்புடன் நிர்வாக அலுவலரின் செயல்பாட்டோடு இந்நூலகம் இயங்கிக் கொண்டு இருக்கின்றது. இதற்கிடையில் *1989-91*வரை முனைவர் மு. சதாசிவம் அவர்களை இயக்குநராகக் கொண்டும் செயல்பட்டு வந்துள்ளது.

### சரஸ்வதிமகால் நூலகப் பருவ இதழ்

*1940*ஆம் ஆண்டு சரஸ்வதிமகால் நூல் நிலைய நாத்திங்கள் இதழின் முதற்றொகுதி - முதற் பகுதி வெளியானது. சரஸ்வதிமகால் நூலகத்தின் கௌரவ காரியதரிசியான திருவாளர் எஸ். கோபாலன் அவர்களின் மதிப்பூதியத்தை ஆதாரமாகக் கொண்டே இப்பருவ இதழ் தொடங்கப்பெற்றுள்ளது. *1940*ஆம் ஆண்டு முதல் *1990*ஆம் ஆண்டு வரையிலான முதல் *39* தொகுதிகள் நாத்திங்கள் இதழாகவும்; *1991*ஆம் ஆண்டு *40*வது தொகுதி முதல் *2000* ஆம் ஆண்டு *46*வது தொகுதி வரை முத்திங்கள் இதழாகவும் தொடர்ந்து வெளிவந்து கொண்டு இருக்கிறது. பெயரளவில் முத்திங்கள் இதழ் என்றாலும் நான்கு முத்திங்களையும் சேர்த்து ஆண்டுக்கு ஒன்று என்றே வெளிவந்து கொண்டிருக்கிறது.

இவ்விதழின் பதிப்பாசிரியர்களாக இந்நூலகக் கௌரவ காரியதரிசிகளும், நூலக இயக்குநர்களும், பதிப்புத்துறை மேலாளர் அவர்களும் இருந்து வந்துள்ளனர். இவ்விதழில் சமஸ்கிருதம், தமிழ், தெலுங்கு, மராத்தி, ஆங்கிலம் என ஐந்து மொழிகளில் கட்டுரைகளும், நூல்களும் வெளியாகியுள்ளன. இப்பருவ இதழில் மொழிகளின் ஆதிக்கம் அதிகமாகவே காலங்காலமாக இருந்து வந்துள்ளது. தமிழ்ச் சுவடிப்பதிப்புகள் வெளிவந்த பருவ இதழ்கள், தமிழ்ச் சுவடிப்பதிப்புகள் வெளிவராத பருவ இதழ்கள் எனப் பருவ இதழின் காலகட்டத்தை இரண்டாகப் பகுக்கலாம். *1953* முதல் *1992* வரையிலான (தொகுதி *9* முதல் *40* வரை) காலக்கட்டத்திலும், *1998* முதல் *2000* வரையிலான (தொகுதி *44* முதல் *46* வரை) காலகட்டத்திலும் எனத் தமிழ்ச் சுவடிப்பதிப்பு நூல்கள் *51* வெளியாகியுள்ளன. *1940* முதல் *1952*

வரையிலும் (தொகுதி 1 முதல் 8 வரை), 1993 முதல் 1995 வரையிலும் (தொகுதி 41 முதல் 43 வரை) தமிழ்ச் சுவடிப்பதிப்பு நூல்கள் வெளிவரவில்லை. 1940-1952 வரையுள்ள காலக்கட்டத்தில் ஆங்கிலமும் சமஸ்கிருதமுமே முழுமையாக இப்பருவ இதழில் இடம்பெற்றிருந்தன. ஆனால் இதற்கு மாறாக 1993-1995 வரையுள்ள காலக்கட்டத்தில் சமஸ்கிருதம், தெலுங்கு, மராத்தி ஆகிய நூல்களைப் பற்றிய ஆய்வுகளும், கட்டுரைகளும் தமிழ்மொழியிலேயே வெளிவந்துள்ளன என்பதை நோக்கும் போது இப்பருவ இதழ் இக்காலகட்டத்தில் தமிழ்மொழிக்குக் கொடுத்த முக்கியத்துவம் புலப்படும்.

## தமிழில் பதிப்பு முயற்சி

மேல்நாட்டவரின் வருகையும், தொடர்பும் அச்சுக்கலையை நமக்கு அறிமுகம் செய்தன என்றால் அது மிகையாகாது. முதலில் மரக்கட்டைகளில் எழுத்தைச் செதுக்கிப் பக்கம் பக்கமாக அச்சிட்டனர். பின்னர்த் தனித்தனி எழுத்துகளாகச் செதுக்கி அடுக்கி அச்சிட்டனர். அதற்கும் பிறகு வார்ப்பெழுத்து உருவானது. இதுவே நீண்டகாலம் அச்சுத்துறைக்குப் பயன்பட்டது. இப்பொழுது கணிப்பொறியின் வரவு இவற்றையெல்லாம் ஓரங்கட்டத் தொடங்கிவிட்டது.

தமிழ்மொழியில் பதிப்புப்பணி கி.பி. 1812இல் தான் தொடங்குகின்றது. தொண்டை மண்டலம் சென்னைப்பட்டினத்தில் தஞ்சை நகரம் மலையப்பப்பிள்ளை குமாரன் ஞானப்பிரகாசனால் மாசத்தின சரிதையின் அச்சுக்கூடத்தில் 'திருக்குறள்-நாலடியார்-மூலம்' கி.பி. 1812ஆம் ஆண்டு பதிப்பிக்கப்பெற்றுள்ளது. இப்பதிப்பே இதுவரை பதிப்பு வரலாற்றில் முதலிடம் பெற்றுள்ளது. இப்பதிப்பில் ஏட்டுச் சுவடியில் எழுத்துகள் இருப்பது போலவே இருந்தன. நிறுத்தக் குறிகளோ, ஒற்றைக் கொம்பு இரட்டைக் கொம்பு வேறுபாடுகளோ, மெய்யெழுத்தில் புள்ளிகளோ இல்லை. பதிப்பு நூல்கள் பல வெளிவரவும் பட்டறிவு முதிரவும் எழுத்தின் வடிவம் செப்பமாகியது. குறியீடுகளும் பதிப்புகளில் பயன்படுத்தப்பெற்றன.

தொடக்கக்காலத்தில் தமிழ்மொழியில் பதிப்பு முயற்சியானது தனிமனிதரிடமிருந்தே தொடங்குகிறது. குறிப்பாக, ஞானப்பிரகாசன், எல்லீஸ், அம்பலவாணக் கவிராயர், திருத்தணிகை விசாகப் பெருமாளையர், திருத்தணிகை சரவணப் பெருமாளையர், இராமாநுசக் கவிராயர், வேதகிரி முதலியார், நல்லூர் ஆறுமுக முதலியார், சிந்தாதிரிப்பேட்டை முனிசாமி முதலியார், வ.உ. சிதம்பரனார், கா. பொன்னுசாமி நாட்டார், தண்டபாணி தேசிகர், வளவனூர் முத்துச்சாமி முதலியார், பூவிருந்தவல்லி கந்தசாமி முதலியார், சிந்தாதிரிப்பேட்டை கேசவ முதலியார், மழவை மகாலிங்கையர், தாண்டவராய முதலியார், திரிசிரபுரம் சோடசாவதானம் சுப்பராய செட்டியார்,

சி.வை. தாமோதரம்பிள்ளை, இராவ்பகதூர் ச. பவனாநந்தம்பிள்ளை, கா. நமச்சிவாய முதலியார், பேரா. வையாபுரிப்பிள்ளை, மே.வீ. வேணுகோபாலப்பிள்ளை, சி. கணேசையர், ப. அரங்கசாமிப்பிள்ளை, உ.வே. சாமிநாதையர், தி.ஈ. சீனிவாசராகவாசாரியார், இ.வை. அனந்தராமையர், திருமயிலை சண்முகம் பிள்ளை மற்றும் பலரும் தனியாகச் சுவடிப்பதிப்பு நூல்களை வெளியிட்டுத் தமிழுக்கு அணிசெய்திருக்கின்றனர். இவர்களை அடியொற்றிப் பிற்காலத்தில் பல அமைப்புகள் தோன்றி அதன் மூலம் சுவடிப்பதிப்பு நூல்களை வெளியிட்டுள்ளன. இவற்றில் சென்னை அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகம், தஞ்சை சரஸ்வதிமகால் நூல் நிலையம், மதுரைத் தமிழ்ச்சங்கம் போன்றவை குறிப்பிடத்தக்க அமைப்புகளாகும்.

## நூலக முதற்பதிப்பு நூல்கள்

சென்னை, அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகமும், தஞ்சை சரஸ்வதி மகால் நூல் நிலையமும் பல மொழிச் சுவடிகளைத் தன்னகத்தே கொண்டவை. எனவே, இந்நூலகங்களின் வெளியீடுகளும் பன்மொழி வெளியீடுகளாகவே அமைந்திருக்கும். அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகத்தில் சமஸ்கிருதம், தமிழ், தெலுங்கு, அரபி, பாரசீகம், மராத்தி, கன்னடம், மலையாளம் போன்ற மொழிகளிலும், சரஸ்வதி மகால் நூல் நிலையத்தில் சமஸ்கிருதம், தமிழ், மராத்தி, தெலுங்கு, ஆங்கிலம் போன்ற மொழிகளிலும் வெளியீடுகள் வெளிவந்திருக்கின்றன.

### அ. சென்னை, அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலக முதற் பதிப்பு நூல்கள்

சமஸ்கிருத மொழியின் முதல் வெளியீடு கி.பி. *1921*ஆம் ஆண்டு வெளிவந்துள்ளது. இதுவே இந்நூலகத்தின் முதல் பதிப்பு நூலுமாகும். எம்.ரங்காச்சாரியார் மற்றும் எஸ். குப்புசாமி சாஸ்திரிகள் அவர்களைப் பதிப்பாசிரியராகக் கொண்டு *1921*ஆம் ஆண்டு 'பத்ய சூடாமணி-உரையுடன்' எனும் சமஸ்கிருத நூல் வெளிவந்துள்ளது.

மலையாள மொழியின் முதல் வெளியீடு *1949*ஆம் ஆண்டு வெளிவந்துள்ளது. இவ்வாண்டு இரண்டு மலையாள நூல்கள் வெளியாகியுள்ளன. டாக்டர் என். மாதவமேனன் அவர்களைப் பதிப்பாசிரியராகக் கொண்டு 'கர்ப சிகிச்சா' எனும் ஆயுர்வேத நூலும், பி. நாராயணன் குட்டிமேனன் அவர்களைப் பதிப்பாசிரியராகக் கொண்டு 'கிரியா கர்மம்' எனும் சோதிட நூலும் என இரு நூல்கள் வெளிவந்துள்ளன.

தமிழ்மொழியின் முதல் பதிப்பு *1950*ஆம் ஆண்டு வெளிவந்துள்ளது. இவ்வாண்டு தமிழ்மொழியில் ஒன்பது நூல்கள் வெளிவந்துள்ளன. டி.பி.

பழனியப்பப் பிள்ளை அவர்களைப் பதிப்பாசிரியராகக் கொண்டு 'கப்பல் சாஸ்திர'மும், டாக்டர் சி. துரைராஜன் மற்றும் டாக்டர் சி.எஸ். உத்தமராயன் அவர்களைப் பதிப்பாசிரியராகக் கொண்டு 'அனுபவ வைத்தியம்-தொகுதி *1* மற்றும் *2*ம், தணிகைமணி வ.சு. செங்கல்வராயபிள்ளை அவர்களைப் பதிப்பாசிரியராகக் கொண்டு 'உபதேச காண்டம் - தொகுதி *1,2* மற்றும் *3*ம் தெ.பொ. மீனாட்சிசுந்தரம் பிள்ளை அவர்களைப் பதிப்பாசிரியராகக் கொண்டு 'சிவஞான தீபமும், சி.எம். இராமச்சந்திரஞ் செட்டியார் அவர்களைப் பதிப்பாசிரியராகக் கொண்டு 'சோழன் பூர்வ பட்டய'மும் 'கொங்குதேச ராஜாக்கள் சரித்திர'மும் வெளிவந்துள்ளன.

தெலுங்கு மொழியின் முதல் பதிப்பு *1950*ஆம் ஆண்டு வெளிவந்துள்ளது. இவ்வாண்டு தெலுங்கு மொழியில் ஐந்து நூல்கள் வெளிவந்துள்ளன. இவற்றில் மருத்துவ நூல்கள் நான்கும் தத்துவ நூல் ஒன்றும் அடங்கும். டாக்டர் வெற்றி சங்கர சாஸ்திரி அவர்களைப் பதிப்பாசிரியராகக் கொண்டு 'அசதயோகமுலு', 'வைத்திய நிகண்டு', 'தனுர்வைத்திய விலாசமு' ஆகிய மூன்று வைத்திய நூல்களும், என். வெங்கட்டராவ் அவர்களைப் பதிப்பாசிரியராகக் கொண்டு 'கத்கலாக்கசனா சிரோமணி' எனும் வைத்திய நூலும், வேதம் லக்ஷ்மண நாராயண சாஸ்திரி அவர்களைப் பதிப்பாசிரியராகக் கொண்டு 'யோக தர்சன விஷயம்' எனும் தத்துவ நூலும் வெளிவந்துள்ளன.

அரபு மொழியின் முதல் பதிப்பு *1953*ஆம் ஆண்டு வெளிவந்துள்ளது. டாக்டர் அப்துல்ஹக் மற்றும் முகம்மது யூசுப் கான் ஆகியோரைப் பதிப்பாசிரியர்களாகக் கொண்டு *1953*ஆம் ஆண்டு 'ஷவாகில்-அல்-அவுர்' எனும் நூலும், பாரசீக மொழியில் *1950*ஆம் ஆண்டு நான்கு நூல்களும் வெளிவந்துள்ளன.

மராத்தி மொழியின் முதல் பதிப்பு *1956*ஆம் ஆண்டு வெளிவந்துள்ளது. இவ்வாண்டு தி. சந்திரசேகரன் அவர்களைப் பதிப்பாசிரியராகக் கொண்டு 'பூனாபெட் கைபீது' எனும் வரலாற்று நூல் வெளிவந்துள்ளது.

கன்னட மொழியின் முதல் பதிப்பு *1950*ஆம் ஆண்டு வெளிவந்துள்ளது. இவ்வாண்டு கன்னடமொழியில் ஆறு நூல்கள் வெளிவந்துள்ளன. அவை பின்வருமாறு:-

1. Lokopakara of Camundaraya - Pandit H. Sesha Iyengar (Ed.,)
2. Rattamatam - H. Sesha Iyengar (Ed.)
3. Asvasastra of Abhinavacandra - Dr. P. Srinivasa Rao &

4. Vividhavaidyavisayagalu - Dr. G. Srinivasamurthi & N. Ramachandra Bhat (Ed.)
5. Supasastra - U. Sitaramacarya (Ed.)
6. Sangitaratnakara - M. Mariappa Bhatt (Ed.)

இவை தவிர சமஸ்கிருதம், தமிழ், மலையாளம், கன்னடம், அரபி, பாரசீகம், மராத்தி ஆகிய மொழிகளுக்கான சுவடிகள் விளக்க அட்டவணைகளும், சுவடிகள் அகரவரிசை அட்டவணைகளும் என வெளிவந்துள்ளன.

**ஆ. தஞ்சை, சரஸ்வதிமகால் நூல் நிலைய முதற்பதிப்பு நூல்கள்**

தஞ்சை, சரஸ்வதிமகால் நூல் நிலையத்தில் சமஸ்கிருத மொழியின் முதல் பதிப்பு *1946*ஆம் ஆண்டு வெளிவந்துள்ளது. டாக்டர் வி. ராகவன் அவர்களைப் பதிப்பாசிரியராகக் கொண்டு 'முத்ரா ராக்சச நாடக கதா' எனும் நாடக நூல் வெளிவந்துள்ளது.

தமிழ்மொழியின் முதல் பதிப்பு *1949*ஆம் ஆண்டு வெளிவந்துள்ளது. இவ்வாண்டு தமிழ்மொழியில் இரண்டு நூல்கள் வெளிவந்துள்ளன. டாக்டர் எஸ். வெங்கட்டராஜன் அவர்களைப் பதிப்பாசிரியராகக் கொண்டு 'குன்ம ரோக சிகிச்சை' மற்றும் 'கர்ப்பிணி பாலரோக சிகிச்சை' எனும் இரண்டு மருத்துவ நூல்கள் வெளிவந்தன.

மராட்டி மொழியின் முதல் பதிப்பு *1950*ஆம் ஆண்டு வெளிவந்துள்ளது. இவ்வாண்டு மராட்டி மொழியில் மூன்று நூல்கள் வெளிவந்துள்ளன. அவை, திரு. எ. கிருஷ்ணசுவாமி மகாதீக் அவர்களைப் பதிப்பாசிரியராகக் கொண்டு 'பிரதாப சிம்ம விஜய பிரபந்த' எனும் வரலாற்று நூலும், 'லோக கீத்' எனும் நாட்டுப்பாடலும் வெளிவந்துள்ளன. திரு. தியாகராஜ ஜடவள்ளவர் அவர்களைப் பதிப்பாசிரியராகக் கொண்டு 'தேவந்திர குறவஞ்சி' எனும் நாடக நூல் வெளிவந்துள்ளது.

தெலுங்கு மொழியின் முதல் பதிப்பு *1950*ஆம் ஆண்டு வெளிவந்துள்ளது. இவ்வாண்டு தெலுங்கு மொழியில் ஐந்து நூல்கள் வெளியாகியுள்ளன. மயிராவண சரிதம் எனும் புராண நூலை திரு வி.சுந்தரசர்மா அவர்களும், ஸ்ரீராமாயணமு- தொகுதி *1* எனும் கதைப்பாடலை, திரு.என்.வெங்கட்டராவ் அவர்களும், தாளதேச பிராண பிரதீபிகா எனும் இசை நூலை திரு.கே.வாசுதேவசாஸ்திரி அவர்களும், ஆந்திரா காமண்டகாமு எனும் அரசியல் நூலை டாக்டர் பிரபாகர சாஸ்திரி அவர்களும், பைப்ர நாராயண சரித எனும் நூலை வி.சுந்தரசர்மா மகாதேவ சாஸ்திரி போன்றோரும் பதிப்பாசிரியர்களாக இருந்து வெளியிட்டுள்ளனர்.

இவை தவிர சுவடிகள் விளக்க அட்டவணைகளையும் இந்நூலகம் வெளியிட்டுள்ளது. இவ்வட்டவணைகள் தமிழ்மொழியில் பொருள் வாரியாக வெளிவந்துள்ளன. அதாவது, மருத்துவம், சோதிடம், இலக்கியம், இலக்கணம் போன்ற வகைகளில் இவ்வட்டவணை அமைந்துள்ளது. மேலும் தமிழ், சமஸ்கிருதம், தெலுங்கு, மராத்தி ஆகிய மொழிகளிலும் சுவடிகள் விளக்க அட்டவணைகள் வெளிவந்துள்ளன.

இவ்விரு நூலகங்களிலும் இடம்பெற்றுள்ள அனைத்து மொழிச் சுவடிப் பதிப்புகளின் முதற்பதிப்பைக் கண்டோம். இவ்வெல்லா மொழிச் சுவடிப் பதிப்பு நூல்களின் பதிப்புத் தன்மைகளையும் ஆயின் ஆய்வு விரியும். எனவே, தமிழ்மொழியில் இந்நூலகங்களின் பதிப்பு முயற்சி எவ்வாறு நிகழ்ந்துள்ளது என்பதை மட்டும் இனிக் காண்போம்.

## சுவடி நூலகப் பதிப்பு நூல்கள்

இவ்விரு நூலகங்களிலும் இரண்டு விதமான பதிப்புகள் வெளிவந்துள்ளன. ஒன்று, நூலக வெளியீட்டுப் பதிப்பு நூல்கள்; மற்றொன்று, நூலகப் பருவ இதழ் வெளியீட்டுப் பதிப்பு நூல்கள். நூலக வெளியீட்டுப் பதிப்பு நூல்கள் என்ற முறையில் பல்வேறு வகையான பொருள்களில் தனி நூலாக ஒரே நேரத்தில் வெளியிட்டுள்ளனர். நூலகப் பருவ இதழ் வெளியீட்டுப் பதிப்பு நூல்கள் என்ற முறையில் மிகச் சிறிய நூல்கள் முதல் பெரிய நூல்கள் வரை இதழ்களின் ஒரு பகுதியிலோ அல்லது ஒன்றுக்கும் மேற்பட்ட பகுதிகளிலோ வெளிவந்திருக்கும். இவ்விரண்டிற்கும் மிகவும் வேறுபாடுகள் உண்டு. பருவ இதழ்களில் மூலம் மட்டுமே பெரும்பான்மை வெளிவரும். ஆனால் தனி நூல்கள் அப்படி இல்லை. அடிக்குறிப்புடனும், உரைவிளக்கங்களுடனும், கருத்துரையுடனும் உரையுடனும் எனத் தனி நூலாக்கத்திற்கான அனைத்துக் கட்டுப்பாடுகளுடன் வெளிவரும். மேலும் பருவ இதழ் வெளியீடுகள் சுருக்கமான முன்னுரையை மட்டுமே கொண்டுள்ளதாக வெளிவந்துள்ளன. சரஸ்வதி மகால் நூலகப் பருவ இதழில் வெளியான சில வெளியீடுகளுக்கு மட்டும் விரிவான முன்னுரை பதிப்பாசிரியர்களால் கொடுக்கப்பட்டுள்ளது. இவ்வகையில் குறிப்பாக, முருகர் கதம்பம், வள்ளலார் பிரபந்தங்கள், தஞ்சை வெள்ளைப் பிள்ளையார் குறவஞ்சி போன்றவற்றைக் குறிப்பிடலாம். அதேபோல் அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகப் பருவ இதழில் மு. அருணாசலம் அவர்கள் பதிப்பித்த 'பிரபந்த மரபியல்' எனும் நூல் மட்டும் நீண்டு விரிந்த முன்னுரையைக் கொண்டு வெளிவந்துள்ளது.

அரசினர் கீழ்த்திசைச்சுவடிகள் நூலக வெளியீடுகள் சில கொத்து, திரட்டு என்ற முறையில் வெளிவந்துள்ளவை மூலம் மட்டுமே கொண்டுள்ளன.

இவ்வகையில் பிள்ளைத்தமிழ்க் கொத்து-பாகம் *1, 2;* கலம்பகக் கொத்து, தூதுத் திரட்டு போன்றவற்றைக் குறிப்பிடலாம். தனி நூலாக வெளிவந்துள்ள பிற வெளியீடுகள் எதுவும் மூலம் மட்டும் வெளியிடப்பெற்றதாகத் தெரியவில்லை.

சரஸ்வதிமகால் நூலகப் பருவ இதழில் வெளிவந்த வெளியீடுகள் ஆஃப் பிரிண்ட் (Off-Print) முறையில் வெளிவந்துள்ளன. அதாவது, இதழ் எ*4* அளவிலும் இதில் வெளியாகும் நூல்களும் எ*4* அளவில் தனிப்பக்க எண் கொண்டும் வெளிவந்துள்ளன. இவ்வாறு இதழ்களில் வெளிவரும் நூல்களின் பகுதிகள் மட்டும் கூடுதலாக அச்சடிக்கப்பட்டு வாழ்த்துரை மற்றும் அணிந்துரைப் பகுதிகளைக் கூடுதலாகச் சேர்த்துக் கட்டம் செய்து விற்பனை செய்கின்றனர். ஆஃப் பிரிண்ட் முறையில் வெளிவரும் நூல்கள் மறுபதிப்பாகவும் வெளிவந்துள்ளன. இம்மறுபதிப்பு நூல்கள் டெம்மி அளவில் வெளிவந்துள்ளன.

இதுவரை அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகத் தமிழ்ப் பதிப்பு நூல்கள் *217*ம், சரஸ்வதி மகால் நூலகத் தமிழ்ப் பதிப்பு நூல்கள் *244*ம் ஆக மொத்தம் *461* நூல்கள் இவ்விரு நூலகங்களில் வெளிவந்துள்ளன. இவற்றின் அகரவரிசை பிற்சேர்க்கை *1*இல் தரப்பெற்றுள்ளது.

### மறுபதிப்பு நூல்கள்

அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலக வெளியீட்டுப் பதிப்பு நூல்களும், பருவ இதழ் வெளியீட்டுப் பதிப்பு நூல்களும் இதுவரை மறுபதிப்புப் பெறவில்லை. ஆனால் தஞ்சை சரஸ்வதி மகால் நூல் நிலைய வெளியீட்டுப் பதிப்பு நூல்களில் மறுபதிப்புப் பெற்றவை *45*. அதேபோல் பருவ இதழ் வெளியீட்டுப் பதிப்பு நூல்களில் மறுபதிப்புப் பெற்றவை *24*. ஆக இந்நூலகத்தில் மட்டும் மறுபதிப்புப் பெற்ற நூல்கள் *69*ஆகும். பிற்சேர்க்கை *1*இல் கொடுக்கப்பெற்ற நூல்களின் வரிசை எண்ணை அடிப்படையாகக் கொண்டு மறுபதிப்பு நூல்கள் எவையெவை என இனங்கண்டுள்ளேன். இம்முறையில் நூலக வெளியீட்டுப் பதிப்பு நூல்களான *7, 22, 27, 32, 36, 37, 54, 72, 115, 121, 122, 127, 129, 142, 144, 145, 149, 152, 153, 155, 156, 157, 158, 166, 167, 172, 178, 221, 224, 226, 227, 293, 297, 312, 313, 369, 372, 377, 378, 395, 413, 419, 425, 452, 455* ஆகிய எண்களைப் பெற்ற *45* நூல்களும்; பருவ இதழ் வெளியீட்டுப் பதிப்பு நூல்களான-ஆஃப் பிரிண்ட் பதிப்பு நூல்களான *85, 93, 106, 108, 110, 139, 162, 179, 194, 207, 208, 214, 217, 229, 230, 244, 245, 251, 307, 376, 409, 416, 429, 437* ஆகிய எண்களைப் பெற்ற *24* நூல்களும் மறுபதிப்புப் பெற்றவையாகும்.

இம்மறுபதிப்புகள் நூல்களின் தேவையையொட்டி இரண்டு, மூன்று, நான்கு முறைகூட வெளிவந்துள்ளன. குறிப்பாக மருத்துவ நூல்களே அதிக மறுபதிப்புகளைப் பெற்றுள்ளன. இதுவரை மறுபதிப்பாக வெளிவந்த நூல்கள் எதுவும் முதல் பதிப்பிலிருந்து மாற்றம் எதுவும் பெறவில்லை. திருத்தங்களோ மாற்றங்களோ சேர்க்கைகளோ ஏதுமின்றி இம்மறுபதிப்புகள் வெளிவந்துள்ளன. முன்னுரைப் பகுதி மட்டும் முதல் பதிப்பின் முன்னுரை, இரண்டாம் பதிப்பின் முன்னுரை, மூன்றாம் பதிப்பின் முன்னுரை என முறையாக முன்னுரைப் பகுதிகளை மட்டும் சேர்த்து வெளியிட்டுள்ளனர். அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகப் பதிப்புகள் ஏதும் மறுபதிப்பு வெளிவரவில்லையே என்று இன்றைய காப்பாட்சியர் முனைவர் எஸ்.சௌந்தரபாண்டியன் அவர்களை வினவிய போது, அவர் "இந்நூலகம் தொல்பொருள் ஆய்வுத் துறையின் கட்டுப்பாட்டில் இயங்கி வருகிறது. ஒவ்வொரு பதிப்பும் 500 படிகள் மட்டுமே பதிப்பிக்கப்படுகின்றன. தொடக்கக் காலத்தில் இந்நூலக நூல்களின் விலைகள் மிகக் குறைவு. இப்பொழுது அது பன்மடங்கு அதிகரித்துள்ளது. இதற்குக் காரணம் அச்சுத் தன்மையின் மாற்றம் தான். பிறமொழிகளை அச்சிடுவதற்கு ஆகும் செலவு மிகவும் கூடுதலாகிறது. மேலும் படிகளும் குறைவாக அச்சிடப்படுகின்றன. இதனால் விலை கூடுகிறது. தமிழக நூலக ஆணைக்குழுவிற்கு நூல்கள் அனுப்பப்படுவதில்லை. காரணம், அவர்கள் நிர்ணயம் செய்யும் விலைக்கு எங்களின் 25% கழிவு உட்படுவதில்லை. இதனால் நாங்கள் வெளியிடும் 500 படிகளே பல ஆண்டுகளாக விற்கப்படுவதால் மறுபதிப்புக்கு வழியில்லாமல் போகிறது" என்கின்றார்.

பிற்சேர்க்கை *1*இன் வரிசை எண் *115*இல் கொங்கணர் சரக்கு வைப்பு (நூறு) எனும் நூல் *1951*ஆம் ஆண்டில் வெளிவந்துள்ளது. இதன் மறுபதிப்பு கொங்கணர் சரக்கு வைப்பு *100* என்று எண் கொடுத்து *1962*இல் முதல்பதிப்பு என்று வெளிவந்துள்ளது. இது இரண்டாவது பதிப்பாகலாம். இதனையடுத்து இந்நூல் *1983* மற்றும் *1990*களில் மீண்டும் மீண்டும் வெளிவர முறையே இரண்டு மற்றும் மூன்று எனப் பதிப்பெண் கொடுக்கப்பட்டுள்ளது. இது முறையே மூன்று, நான்கு என இடம்பெற்றிருக்கவேண்டும்.

## தொகுப்பிலும் திரட்டிலும் வெளியான பதிப்பு நூல்கள்

இவ்விரு சுவடி நூலகங்களிலும் தொகுப்பு நூல்களும், திரட்டு நூல்களும் வெளிவந்துள்ளன. ஒரு பொருள் தொடர்பான நூல்களையும், ஓராசிரியரின் நூல்களையும், மிகச் சிறிய நூல்களையும் தொகுப்பாகவும், திரட்டாகவும் இவ்விரு நூலகங்களும் வெளியிட்டுள்ளன. இணைப்பு *1*-இல் கொடுக்கப்பட்டுள்ளன.

1. அகத்தியர் நூல் திரட்டு
   அ. அகத்தியர் கும்மி
   ஆ. அகத்தியர் தர்க்கம் *25*
   இ. அகத்தியர் பச்சை *16*
   ஈ. அகத்தியர் மூலிகை மர்மம்
   உ. அகத்தியர் நாடி

2. அந்தாதிக் கொத்து - பாகம் 1
   அ. கணபதியந்தாதி
   ஆ. திருவரங்கப் பதிற்றுப்பத்தந்தாதி
   இ. சேடமலைப் பதிற்றுப்பத்தந்தாதி
   ஈ. திருவாவினங்குடி பதிற்றுப்பத்தந்தாதி
   உ. திருமங்கை கரும்பேசர் பதிற்றுப்பத்தந்தாதி
   ஊ. திருவெவ்வுளூரந்தாதி
   எ. மதுரை யமக அந்தாதி
   ஏ. சடக்கரவந்தாதி
   ஐ. சுப்பிரமணியரந்தாதி
   ஒ. சௌந்தரியந்தாதி
   ஓ. சித்தரந்தாதி
   ஔ. சிஷ்டரந்தாதி

3. அந்தாதிக் கொத்து - பாகம் 2
   அ. பழனிப் பதிற்றுப்பத்தந்தாதி
   ஆ. மயிலாசலத்தந்தாதி
   இ. தில்லை யமக வந்தாதி
   ஈ. திருத்தணிகை வெண்பாவந்தாதி
   உ. திருச்செந்தில் நிரோட்டக யமக வந்தாதி
   ஊ. திருவரங்கத்தந்தாதி
   எ. திருக்கடன் மல்லைப் பதிற்றுப்பத்தந்தாதி
   ஏ. திருமழிசைப் பதிற்றுப்பத்தந்தாதி
   ஐ. திருஎவ்வுள் பதிற்றுப்பத்தந்தாதி
   ஒ. பாலையசுவாமிகள் பதிற்றுப்பத்தந்தாதி
   ஓ. சித்திர வெண்பாவந்தாதி
   ஔ. திருவரங்கத்தந்தாதி

4. ஐந்து தமிழிசை நாட்டிய நாடகங்கள்
   அ. பூலோக தேவந்திர விலாசம்
   ஆ. சந்திரிகா உறாஸை விலாசம்
   இ. சகசி மன்னன் மீது குறவஞ்சி

ஈ. விஷ்ணு சாகராஜ விலாசம்
உ. காவேரி கல்யாணம்

5. **கலம்பகக் கொத்து**
அ. பேரைக் கலம்பகம்
ஆ. திருமயிலாசலக் கலம்பகம்
இ. ஞான விநோதன் கலம்பகம்

6. **திருப்புல்லாணி எம்பெருமான் மீது பாடிய சிறுபிரபந்தங்கள்**
அ. திருப்புல்லான் செகநாதர் பேரில் கிளைப்பாட்டு
ஆ. திருப்புல்லான் செகநாதர் பேரில் தாலாட்டு
இ. திருப்புல்லான் செகநாதர் பேரில் திருவனந்தல்
ஈ. திருப்புல்லான் செகநாதர் பேரில் நலங்கு

7. **திருமயிலைப் பிரபந்தங்கள்**
அ. திருமயிலை உவமை வெண்பா
ஆ. திருமயிலைக் கோவை
இ. திருமயிலைப் பிள்ளைத் தமிழ்
ஈ. திருமயிலை வெண்பா

8. **தூதுத் திரட்டு**
அ. பெரியதம்பி பிள்ளை பேரில் மான்விடுதூது
ஆ. முத்துவீரப்பப்பிள்ளை பேரில் மான்விடுதூது
இ. வெள்ளைய ராசேந்திரன் துகில்விடுதூது
ஈ. செங்குந்தர் துகில்விடுதூது
உ. சங்கர மூர்த்தி பேரில் மான்விடுதூது
ஊ. மணவை-திருவேங்கடமுடையான் மேகவிடுதூது

9. **பிள்ளைத்தமிழ்க் கொத்து - பாகம் 1**
அ. அரும்பாத்தை வேதவிநாயகர் பிள்ளைத்தமிழ்
ஆ. வைகுந்தநாதன் பிள்ளைத்தமிழ்
இ. இராகவர் பிள்ளைத்தமிழ்
ஈ. தில்லை, சிவகாமியம்மை பிள்ளைத்தமிழ்
உ. புதுவை, திரிபுரசுந்தரி பிள்ளைத்தமிழ்
ஊ. தூத்துக்குடி, பாகம்பிரியாவம்மை பிள்ளைத்தமிழ்
எ. சிவானந்தன் பிள்ளைத்தமிழ்

10. **பிள்ளைத்தமிழ்க் கொத்து - பாகம் 2**
அ. மகர நெடுங்குழைக்காதர் பிள்ளைத்தமிழ்
ஆ. திருவெண்ணெய்நல்லூர் வைகுந்தநாதர் பிள்ளைத்தமிழ்
இ. மணவைத் திருவேங்கடமுடையான் பிள்ளைத்தமிழ்

ஈ. இராமலிங்க சுவாமிகள் பிள்ளைத்தமிழ்
உ. யோகி சாத்தையர் பிள்ளைத்தமிழ்
ஊ. முத்துவீரப்பசுவாமி பிள்ளைத்தமிழ்
எ. வேங்கடேசுவரன் பிள்ளைத்தமிழ்
ஏ. புதுவை அருணாசலம் பிள்ளைத்தமிழ்
ஐ. முருகப்ப தேவர் பிள்ளைத்தமிழ்

**11. மாலைத் தொகுப்பு**

அ. திரிபுரை மாலை
ஆ. மனோன்மணிமாலை
இ. பழனி மாலை
ஈ. கும்பேச்சுர மாலை

**12. முருகர் கதம்பம்**

அ. வருமுருகாற்றுப்படை
ஆ. கதிர்காமவேலவன் தோத்திரம்
இ. செந்தில்வேலவன் தோத்திரம்
ஈ. பழனிவேலவன் தோத்திரம்
உ. பழனி மாலை
ஊ. சுந்தர் காதல்
எ. திருச்செங்கோட்டகவல்

**13. மூன்று தமிழிசை நாடகங்கள்**

அ. மதன சுந்தரப் பிரசாத சந்தான விலாசம்
ஆ. பாண்டிய கேளீ விலாச நாடகம்
இ. புரூரவ நாடகம்

**14. வள்ளலார் பிரபந்தங்கள்**

அ. திருநெறிவிளக்கம்
ஆ. தத்துவ விளக்கம்
இ. வள்ளல் ஞானசாரம்

**15. நம்மாழ்வார் பிரபந்தங்கள்**

அ. நம்மாழ்வார் திருக்கோலக்கவி
ஆ. நம்மாழ்வார் பதம்
இ. நம்மாழ்வார் திருவனந்தல்

இவ்வகையில் அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகமே அதிகமான நூல்களைப் பதிப்பித்திருக்கின்றன. தனி நூலாக வெளிக்கொணர வேண்டியவற்றைக் கூட இந்நூலகம் கொத்து-திரட்டு என்ற பெயரில் பல

நூல்களைத் தொடர்புடைய நூல்களைச் சேர்த்து வெளியிட்டுள்ளன. இவ்வாறு வெளிவந்த நூல்களில் பிள்ளைத்தமிழ்க் கொத்து பாகம் 1 மற்றும் 2 மட்டுமே குறிப்புடன் வெளிவந்து இருக்க, ஏனைய நூல்கள் எல்லாம் மூலம் மட்டுமே வெளிவந்துள்ளன. ஆனால் தஞ்சை சரஸ்சுதிமகால் நூல் நிலையத்தின் வழி வெளியான திரட்டு-கதம்பம்-பிரபந்தங்கள் நாடகங்கள் ஆகிய தொகுப்பு நூல்கள் குறிப்புரையோ உரையோ அடிக்குறிப்போ நீண்ட முன்னுரையோ பெற்று வெளிவந்துள்ளமை குறிப்பிடத்தக்க ஒன்றாகும்.

இவ்விரு நூல் நிலையங்களிலும் வெளியான தொகுப்பு-திரட்டு-பிரபந்தங்கள்-நாடகங்கள்-கதம்பம் ஆகிய நூல்களின் வகைகள் அளவில் மிகச் சிறியனவே. இந்நூல்களைப் பருவ இதழில் வெளியிடாமல் பொருள் ஒற்றுமையால் ஒன்றாக்கி வெளியிட்டுள்ளமை புலப்படுகிறது.

## சுவடி நூலகப் பதிப்பு நூல்களின் வகைப்பாடு

அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகச் சுவடிப்பதிப்பு நூல்களையும், சரஸ்வதிமகால் நூல் நிலையச் சுவடிப்பதிப்பு நூல்களையும் வகைதொகை செய்து பார்க்கும் போது 66 வகையான சுவடிப்பதிப்பு நூல்கள் வெளியாகியுள்ளமை தெரியவருகிறது. இதில் சிற்றிலக்கிய வகைகள் மட்டுமே 44 ஆகும். ஏனையவை மற்ற வகைகளாகும். ந.வீ. செயராமன் அவர்களின் 'சிற்றிலக்கிய வகை அகராதி' எனும் நூலில் 270 வகையான சிற்றிலக்கியங்களைக் குறிப்பிடுகின்றார். அவர் குறிப்பிடும் சிற்றிலக்கிய வகைகளில் இவ்விரு நூலகப் பதிப்புகளாக வெளிவந்தவை 37 மட்டுமே, அவை:- அகவல், அட்டமங்கலம், அந்தாதி, அம்மானை, அனுபூதி, ஆற்றுப்படை, ஆனந்தக்களிப்பு, உலா, ஊஞ்சல், ஊடல், கண்ணி, கலம்பகம், கலித்துறை, காதல், கும்மி, குழிப்பு, குறவஞ்சி, கோவை, சதகம், சிந்து, தாலாட்டு, துதி, தூது, தோத்திரம், நலங்கு, பதம், பதிகம், பத்து, பள்ளு, பிள்ளைத்தமிழ், மஞ்சரி, மடல், மாலை, மும்மணிக்கோவை, வண்ணம், வாக்கியம், வெண்பா ஆகியவையாகும். இவை தவிர கவி, கிளிப்பாடல், கிளைப்பாட்டு, தவசு, திருவனந்தல், முளைப்பாட்டு, விகடம் ஆகிய ஏழு வகையான சிற்றிலக்கியங்களும் வெளியாகியுள்ளன. இதனைக் காணும்போது சிற்றிலக்கிய வகைகளின் எண்ணிக்கை மேலும் கூடுதலாகலாம் என்று துணியலாம். இச்சிற்றிலக்கிய வகைகளைத் தவிர அகராதி, இசை, இலக்கியம், இலக்கணம், உரைநடை, கட்டுமானம், கணக்கு, காவியம், சாத்திரம், சோதிடம், தத்துவம், தனிப்பாடல்கள், நாடகம், நாட்டுப்பாடல், நாலாயிரத்திவ்வியப் பிரபந்தம், நிகண்டு, நீதிநூல்கள், பதினெண்கீழ்கணக்கு, புராணம், மருத்துவம், மொழிபெயர்ப்பு, வரலாறு போன்ற 22 வகைகளிலும் சுவடிப்பதிப்பு நூல்கள் வெளியாகியுள்ளன. இவ்விரு நூலகங்களிலும் வெளியான நூல்களின் பொருளட்டவணை இணைப்பு - 2இல் தரப்பெற்றுள்ளது.

| நூற்பொருள் | சரஸ்வதிமகால் நூலகம் | அகீசு நூலகம் |
|---|---|---|
| அகராதி | | 222, 448 |
| அகவல் | 176, 191, 242, 250, 330 | 400 |
| அட்டமங்கலம் | 107 | |
| அந்தாதி | 22, 101, 367, 391 | 16, 17, 69, 78, 125, 164, 170, 187, 193, 200, 204, 235, 236, 243, 247, 259, 266, 269, 270, 271, 277, 281, 343, 354, 385, 389, 445 |
| அம்மானை | 14, 19, 48, 49, 74, 93, 169, 188, 192, 210, 287, 351, 375, 386, 401, 441, 457, 459 | 173, 394, 398, 412 |
| அனுபூதி | | 408 |
| ஆற்றுப்படை | 427 | |
| ஆனந்தக்களிப்பு | | 430 |
| இசை | 99, 129, 220, 221, 234 | 44, 111, 323 |
| இலக்கியம் | 40, 205, 241, 312, 313 | |
| இலக்கணம் | 12, 41, 54, 55, 56, 57, 58, 59, 60, 61, 62, 162, 292, 293, 416 | 294, 305, 357, 415 |
| உரைநடை | 194 | |
| உலா | 306 | 206 |
| ஊஞ்சல் | | 295 |
| ஊடல் | 279 | |
| கட்டுமானம் | 83, 172, 315, 387, 388 | |
| கணக்கு | 77 | 42, 341, 342 |
| கண்ணி | | 68 |
| கலம்பகம் | | 91, 211, 260, 374 |
| கலித்துறை | | 346, 399 |
| கவி | | 296 |

| | | |
|---|---|---|
| காதல் | *82* | *434* |
| காவியம் | *201, 372* | *352, 436* |
| கிளிப்பாடல் | | *403* |
| கிளைப்பாட்டு | | *253* |
| கும்மி | *24, 380* | *174, 355* |
| குழிப்பு | | *423* |
| குறவஞ்சி | *120, 207, 214* | *53, 406, 435* |
| கோவை | | *84, 262, 373, 397* |
| சதகம் | *105, 275, 311, 337, 422* | *336, 338* |
| சாத்திரம் | *79, 124, 127, 166, 167,* | *177, 350* |
| | *178, 410* | |
| சிந்து | | *80, 185, 347* |
| சோதிடம் | *96, 97, 122, 308, 328, 369,* | *13, 83, 130, 131, 132,133,* |
| | *425, 454, 455, 456* | *134, 135, 161,* |
| தத்துவம் | *137, 182, 208, 217, 224, 251,* | *168, 267, 321, 322,* |
| *334* | | |
| | *358, 360, 440* | |
| தவசு | *95* | |
| தனிப்பாடல்கள் | *226, 227* | *90, 225, 285, 286* |
| தாலாட்டு | *297* | *118, 246, 254* |
| திருவனந்தல் | | *39, 255* |
| துதி | | *324* |
| தூது | *197, 437* | *71, 195, 123, 288, 371,* |
| | | *384, 405, 442* |
| தோத்திரம் | *81, 126, 181, 198, 327,* | *160, 303* |
| | *348, 433* | |
| நலங்கு | | *256* |
| நாடகம் | *18, 20, 47, 72, 104, 128,* | *64, 87, 136, 138, 163,* |
| | *175, 184, 370, 413, 414, 439* | *212, 368* |
| நாட்டுப்பாடல் | *15, 38, 51, 94, 100, 106, 196,* | *73, 185, 190, 209, 300,* |
| | *290, 304, 326, 390* | *310, 314, 446* |

| | | |
|---|---|---|
| மொழிபெயர்ப்பு | *232, 233, 420* | |
| வண்ணம் | *24, 424* | |
| வரலாறு | *179, 377, 458, 460* | *43, 75, 88, 114, 116, 117, 199, 202, 203, 218, 238, 291, 349, 356, 421* |
| வாக்கியம் | | *432* |
| விகடம் | *340* | |
| வெண்பா | *329* | *35, 63, 261, 265, 320* |

இப்பொருளட்டவணையைப் பார்க்கும் போது குறைந்தது வகைக்கு ஒரு நூலும் அதிக பட்சம் அறுபத்து மூன்று நூல்களும் வெளிவந்துள்ளதெனத் தெரிகிறது. இதில் அதிகபட்சமாக மருத்துவ நூல்களே *(63)* வெளிவந்துள்ளன. இவ்வெல்லா வகைக்குமாக இவ்விரு நூலகங்களிலும் நூல்கள் வெளிவரவில்லை. சில வகைகள் அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகத்தில் மட்டுமே வெளிவந்துள்ளன. குறிப்பாக, அகராதி, அனுபூதி, ஆனந்தக்களிப்பு, ஊஞ்சல், கண்ணி, கலம்பகம், கலித்துறை, கவி, கிளிப்பாடல், கிளைப்பாட்டு, கோவை, சிந்து, திருவனந்தல், துதி, நலங்கு, பதம், பதிகம், பத்து, மஞ்சரி, மடல், மும்மணிக்கோவை, வாக்கியம் போன்றவற்றைக் குறிப்பிடலாம். அதுபோலவே சில வகைகள் சரஸ்வதிமகால் நூல் நிலையத்தில் மட்டுமே வெளிவந்துள்ளன. குறிப்பாக, அட்டமங்கலம், ஆற்றுப்படை, ஊடல், கட்டுமானம், தவசு, நிகண்டு, பதினெண்கீழ்கணக்கு, முளைப்பாட்டு, மொழிபெயர்ப்பு, வண்ணம், விகடம் போன்றவற்றைக் குறிப்பிடலாம். ஏனைய வகைகள் எல்லாம் இவ்விரு நூலகங்களிலும் வெளிவந்துள்ளன எனலாம்.

## சுவடி நூலகப் பதிப்பு நூல்களின் தன்மைகள்

இவ்விரு சுவடி நூலகப் பதிப்பு நூல்களின் தன்மைகளைப் பன்னிரண்டு வகைகளாகப் பிரிக்கலாம். அவை,

1. மூலம் மட்டும் கொண்ட சுவடிப்பதிப்பு நூல்கள்
2. மூலமும் உரையும் கொண்ட சுவடிப்பதிப்பு நூல்கள்
3. மூலமும் குறிப்பும் கொண்ட சுவடிப்பதிப்பு நூல்கள்
4. மூலமும் உரையும் கருத்துக்குறிப்பும் கொண்ட சுவடிப்பதிப்பு நூல்கள்
5. பாடலும் உரைநடையும் கொண்ட சுவடிப்பதிப்பு நூல்கள்
6. ஒப்பீடு செய்யப்பெற்ற சுவடிப்பதிப்பு நூல்கள்

7. வானொலியில் சிறப்புரை பெற்ற சுவடிப்பதிப்பு நூல்கள்
8. இதழ்களில் விளம்பரப்படுத்திய சுவடிப்பதிப்பு நூல்கள்
9. பதிப்பு வரலாறு கொண்ட சுவடிப்பதிப்பு நூல்கள்
10. உரைநடையைக் கொண்ட சுவடிப்பதிப்பு நூல்கள்
11. மொழிபெயர்ப்புச் சுவடிப்பதிப்பு நூல்கள்
12. உருவாக்கிய சுவடிகளின் சுவடிப்பதிப்பு நூல்கள்

என்பனவாகும். பிற்சேர்க்கை 1இல் கூறப்பெற்ற 461 நூல்களில் இப்பன்னிரண்டு வகைகளுக்கும் ஒன்றிரண்டு நூல்கள் மட்டும் இங்கு எடுத்துக்காட்டப்பெறுகிறது.

### 1. மூலம் மட்டும் கொண்ட சுவடிப்பதிப்பு நூல்கள்

பதிப்பாசிரியர்கள் குறிப்புரையோ விளக்கவுரையோ கருத்துரையோ உரையோ அடிக்குறிப்போ எதுவும் இன்றிச் சுவடியில் உள்ளதை உள்ளவாறே ஏட்டில் பதிப்பிப்பதே 'மூலம் மட்டும் கொண்ட சுவடிப்பதிப்பு நூல்கள்' என்கிறோம். இவ்வகையில் அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகப் பருவ இதழ்களில் வெளியான பெரும்பாலான நூல்களும், சரஸ்வதிமகால் நூலகப் பருவ இதழில் வெளியான பெரும்பாலான நூல்களும் அடங்கும். இவ்விரு நூலகங்களிலும் தனி நூலாக இவ்வகையில் வெளிவரவில்லை என்றே சொல்ல வேண்டும். எ.கா. **நெஞ்சறி விளக்கம்.** இத்தலைப்பில் இரண்டு நூல்கள் பதிப்பிக்கப்பெற்றுள்ளன. அவை, ஒன்று கணபதிதாசரின் நெஞ்சறிவிளக்கம்; மற்றொன்று, இதிலிருந்து முற்றிலும் வேறுபட்ட ஆசிரியர் பெயர் தெரியாத நெஞ்சறி விளக்கம் ஆகும். கணபதிதாசரின் நெஞ்சறி விளக்க நூல், மனத்தை நோக்கி "நாகநாதரை வணங்கு" என்று கூறுவதாக அமைந்த நூறு இனிய, எளிய செய்யுட்களைக் கொண்டது. ஆசிரியர் பெயர் தெரியாத மற்றொரு நெஞ்சறி விளக்க நூல், 'யோகம், ஞானம்' என்னும் பொருள்களை மிகச் சுருக்கமாக எடுத்துக் கூறுகின்றது. பன்னிரண்டு வெண்பாக்களால் அமைந்துள்ளது. இவ்விரு நூல்களும் மூலம் மட்டுமே பதிப்பாகியுள்ளதைக் காணமுடிகிறது.

### வில்லிபாரதம்-மௌனி சூட்டுச் சருக்கம்

இந்நூல் ஆய்வுக்குரிய பகுதியாகத் தெரிகின்றது. இந்நூல் பதிப்பாசிரியர் இப்பதிப்பு முன்னுரையில் "வில்லிபாரதத்தின் மௌனி சூட்டுச் சருக்கம்' என்ற இத்தலையங்கத்தின் கீழ் இஃது எழுதப்பட்டுள்ளது. 54 செய்யுட்களாலாயது; முற்றுப்பெற்றுமிருக்கிறது. இஃதுள்ள இவ்வோலையேட்டுப் பிரதியினது ஏடுகளின் தொடரெண்களும் அடிதொட்டுக் கடைவரை ஒரு

பான்மையனவாகவே காண்கின்றன. அதாவது ஒன்று முதல் *367* ஏடுகள் இப்பிரதியிலுள்ளன. அவற்றுள் *362*ஆம் ஏட்டினது பின்புறத்தோடு பதினெட்டாம் போர்ச்சருக்கம் முடிய அடுத்தஏடான *363*ஆம் ஏட்டினது முதற்பக்கத்திலேயே இச்சருக்கமும் தொடங்கப்பட்டு *367*ஆம் ஏட்டினது முதற்பக்கத்தோடு முடிக்கப்பட்டுள்ளது. இக்காரணங்களால் இதுவும் வில்லிபாரதத்தைச் சார்ந்ததாகவேயிருத்தல் வேண்டுமென்பது துணிபு" என்கிறார். இந்நூலும் மூலம் மட்டுமே வெளிவந்துள்ளது.

### 2. மூலமும் உரையும் கொண்ட சுவடிப்பதிப்பு நூல்கள்

மூலமும் உரையும் கொண்ட சுவடிப்பதிப்பு நூல்களை இரண்டு வகையாகப் பகுக்கலாம். ஒன்று, சுவடியிலேயே மூலமும் உரையும் கொண்டிருக்கும் சுவடியைப் பதிப்பிப்பது; மற்றொன்று, சுவடியில் உள்ள மூலத்திற்குப் பதிப்பாசிரியர் எழுதிய உரையுடன் பதிப்பிப்பது. இவ்விரு வகைகளிலும் இவ்விரு நூலகங்களில் பல சுவடிப்பதிப்பு நூல்கள் பதிப்பாகியுள்ளன.

சுவடியிலேயே மூலமும் உரையும் கொண்ட நூலாகத் தொல்காப்பியத்தை எடுத்துக்கொள்வோம். இத்தொல்காப்பியத்திற்கு இளம்பூரணர், நச்சினார்க்கினியர், தெய்வச்சிலையார், கல்லாடர், பேராசிரியர், சேனாவரையர், அதிரையர் போன்றோரின் உரைகள் தொல்காப்பிய மூலத்தோடு சுவடியிலேயே காணப்படக் கூடியவையாகும். இவ்வகைப்பட்ட தொல்காப்பியத்தை அதிரையர் உரையுடன் வ. வேணுகோபால் அவர்கள் தஞ்சை சரஸ்வதிமகால் நூலகம் வழியாக *1989*ஆம் ஆண்டு பதிப்பித்திருக்கிறார். தொல்காப்பியம் எழுத்ததிகாரம் நச்சினார்க்கினியர் உரையை இராம. கோவிந்தசாமிபிள்ளை அவர்கள் தஞ்சை சரஸ்வதிமகால் நூலகம் வழியாக *1967*ஆம் ஆண்டு பதிப்பித்திருக்கிறார். தொல்காப்பியம் சொல்லதிகாரம் கல்லாடர் உரையை டிபி. மீனாட்சிசுந்தரம் அவர்கள் அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகம் வழியாக *1971*ஆம் ஆண்டு பதிப்பித்திருக்கிறார். இம்மூலமும் உரையும் கொண்ட இப்பதிப்புகளில் பதிப்பாசிரியரின் அடிக்குறிப்புகளும் இடம் பெற்றிருக்கும்.

சுவடியில் உள்ள மூலத்திற்குப் பதிப்பாசிரியரின் உரையுடன் வெளிவந்த நூல்கள் பல. அவற்றுள், மு. அருணாசலம் அவர்கள் பதிப்பித்த 'பிரபந்த மரபியல்' எனும் நூலும் ஒன்று. இந்நூல் அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகப் பருவ இதழில் வெளிவந்து பிறகு தனிநூலாக வெளியிடப்பெற்றுள்ளது. இந்நூல் வெளிவந்த பருவ இதழில் இந்நூல் தவிர வேறொரு செய்தியும் வெளிவரவில்லை. இந்நூல் தெளிவான முன்னுரையுடன் காணப்படுகிறது. இலக்கணங்களின் வகைப்பாடுகள் பற்றி விரிவாக ஆராய்ந்து

*46* பக்க முன்னுரையைத் தந்துள்ளார் இந்நூலின் பதிப்பாசிரியர் மு. அருணாசலம் அவர்கள். நூலுக்குள் ஒவ்வொரு பிரபந்தத்திற்குமெனத் தலைப்புகளையும், விளக்கக் குறிப்புகளையும், இருதலைப்பகரக்குறிக்குள் மாற்றம் செய்யப்பட்ட எழுத்துகளையும் கொடுத்துள்ளார். இந்நூலின் பிற்பகுதியில், பிற்குறிப்பாக நூலோடு தொடர்புடைய பிறசெய்திகளையும்; நூற்றாண்டு தோறும் பிரபந்த வளர்ச்சி பற்றிய குறிப்பு; அனுபந்தம் *1*இல் ஐந்திலக்கணமும் பாட்டியல் நெறியும்; அனுபந்தம் *2*இல் பிரபந்த மரபியல் கூறும் *96* பிரபந்தங்களின் அட்டவணை; அனுபந்தம் *3*இல் பிரபந்த மரபியல் - சிதம்பரப்பாட்டியல் ஒப்புமை மற்றும் செய்யுள் முதற்குறிப்பு அகராதி போன்றன இடம்பெற்றுள்ளன.

### 3. மூலமும் குறிப்பும் கொண்ட சுவடிப்பதிப்பு நூல்கள்

சுவடியில் உள்ள மூலத்திற்குப் பதிப்பாசிரியரின் அடிக்குறிப்புடன் பதிப்பாகும் நூலையே 'மூலமும் குறிப்பும் கொண்ட சுவடிப்பதிப்பு நூல்கள்' என்கிறோம். இவ்வகையில் இவ்விரு நூல் நிலையப் பதிப்புகள் பல வெளிவந்துள்ளன. இவற்றுள், கதிர்காமச் சிந்து எனும் நூலும் ஒன்று. முப்பத்தொரு செய்யுட்களைக் கொண்ட இந்நூலின் ஆசிரியர் பெயர் தெரியவில்லை. இந்நூலைப் பூ. சுப்பிரமணியம் அவர்கள் அடிக்குறிப்புடன் பதிப்பித்திருக்கிறார். இவர்தம் பதிப்புரையில், "குறிஞ்சிக் கடவுளாம் முருகனின் ஞானசக்தியாகிய வேலாயுதத்தை வைத்து வழிபடும் வழக்கமமைந்த ஈழநாட்டு முருகனின் திருத்தலங்களில் ஒன்று கதிர்காமம். செப்போடு வேய்ந்த சிறிய கொட்டகை வடிவிலமைந்த கதிர்காம வேலனின் ஆலயம் மாணிக்க கங்கை எனும் ஆற்றினருகிலமைந்து விளங்குவதாகும். ஆண்டுதோறும் சிறப்புற நடைபெறும் ஆடிவேல் விழாவில் எந்திரவடிவிலமைந்த முருகனின் பெட்டகம் காட்டுயானையால் மேலேற்றப்பட்டுப் பவனிவருங் காட்சியும் பிறவுமாகிய சிறப்புகளை நேரில் கண்டு களித்து ஆண்டவனின் திருப்பணியில் தம் வயமிழந்த இந்நூலின் ஆசிரியர், தாம் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகமென, முருகனைத் தாம் வழிபடுமாற்றால் பாடிய இக்கதிர்காமச் சிந்து மிகவும் எளிய நடையுடைத்தாயினும், முருகனின் எழிலும் எளிமையும், மறனும் திறனும், வடிவும் வரலாறும் நிறைந்த பெருமைகளனைத்தினையும் தன்னகத்தே கொண்டிலங்குகிறது" (அகீசு நூலகப் பருவ இதழ், தொகுதி *17*, பகுதி *1*, *1965*, ப. *76*) என்பதால் இந்நூலைப் பற்றி நன்கு அறியமுடிகிறது.

### 4. மூலமும் உரையும் கருத்துக்குறிப்பும் கொண்ட சுவடிப்பதிப்பு நூல்கள்

இவ்வகையில் 'அருங்கலச்செப்பு' என்னும் நீதிநூல் பதிப்பாகியுள்ளது. *180* குறட்பாக்களைக் கொண்ட இந்நூலின் ஆசிரியர் பெயரும் உரையாசிரியர்

பெயரும் தெரியவில்லை. உரையானது உரைநடையில் அமையாமல் ஒவ்வொரு தமிழ்ச் சொல்விற்கும் சமஸ்கிருதத்தில் பொருள் தரும் வகையில் அமைந்துள்ளது. ஒவ்வொரு குறட்பாவிற்குக் கீழேயே பதிப்பாசிரியரால் கருத்துக்குறிப்பு சேர்க்கப்பட்டுள்ளது. அதாவது, மூலமும் உரையும் கொண்ட ஒரு சுவடியைப் பதிப்பாசிரியர் பதிப்பிக்கும் போது சுவடியில் உள்ள மூலத்திற்காக எழுந்த உரையை மேலும் விளக்கவோ விரிக்கவோ முற்படும் போது பதிப்பாசிரியரால் கருத்துக்குறிப்பு அவ்வச் செய்யுட்குக் கீழேயே சேர்க்கப்படுவதாகும். 'அருங்கலச் செப்பு' எனும் நூலின் பதிப்பாசிரியர் பூ. சுப்பிரமணியம் அவர்கள் முதல் *165* குறட்பாக்களுக்கும், ர.ந. சம்பத் அவர்கள் *166* முதல் *180* வரையுள்ள குறட்பாக்களுக்கும் கருத்துக்குறிப்பு எழுதியுள்ளார்கள்.

## 5. பாடலும் உரைநடையும் கொண்ட சுவடிப்பதிப்பு நூல்கள்

மூலத்திலேயே பாடலும் உரைநடையும் அமைந்ததை இவ்வகைக்குள் அடக்கலாம். அதாவது, மூல நூலாசிரியரே நூலின் அமைப்பைப் பாடலும் அதனைத் தொடர்ந்து உரைநடை (வசனம்)யும் என மாறிமாறி அமைப்பதையே பாடலும் உரைநடையும் கொண்ட சுவடி என்கிறோம். இவ்வகையில் 'விராலிமலை சுப்பிரமணிய சுவாமி குறவஞ்சி நாடகம்' எனும் நூல் பதிப்பாகியுள்ளது. இந்நூலாசிரியர் பெயர் பிள்ளைப்பெருமாள் கவிராயர் ஆவர். இதனை 'விராலிமலை வேலவர் குறவஞ்சி' என்றும் அழைப்பர். இந்நூல் பதிப்பாசிரியர் திரு. மு. பசுபதி அவர்கள் நூல் முன்னுரைக்கு இடர்ப்படும் தலைப்பில் விராலிமலை வேலவர் குறவஞ்சி என்றும், நூல் தொடங்குகையில் 'விராலிமலை சுப்பிரமணிய சுவாமி குறவஞ்சி நாடகம்' என்றும் குறித்துள்ளார். இந்நூல், திருச்சிராப்பள்ளி மாவட்டத்தைச் சேர்ந்த விராலிமலை என்னும் தலத்தில் அமர்ந்துள்ள முருகவேளைப் பாட்டுடைத் தலைவராகக் கொண்டு பாடப்பெற்றுள்ளது. இந்நூல் பல்வேறு வகையான பாக்களையும் இடையிடையே வசனத்தையும் கொண்டுள்ளது.

## 6. ஒப்பீடு செய்யப்பெற்ற சுவடிப்பதிப்பு நூல்கள்

ஒரு சுவடியோடு மற்றொரு சுவடியையோ அச்சு நூலையோ காகிதப் பிரதியையோ ஒத்துப் பார்த்துப் பதிப்பிக்கப்பெறுவதையே 'ஒப்பீடு செய்யப்பெற்ற சுவடிப்பதிப்பு நூல்' என்கிறோம். இவ்வகையில் இவ்விரு நூல் நிலையங்களிலும் பதிப்புகள் நிகழ்ந்திருக்கின்றன. இவ்வொப்பீடுகள் அந்தந்த நூல் நிலையங்களில் உள்ள சுவடியையோ காகிதப் பிரதியையோ அச்சுப் புத்தகத்தையோ மட்டுமே ஒத்துப் பார்த்திருக்கின்றனர். வேறு நூலகப் பிரதிகளை ஒத்துப் பார்க்கவில்லை என்பது தெரிகிறது. அரசினர் கீழ்த்திசைச்

சுவடிகள் நூலக வெளியீடான 'பர்த்ருஹரி சிருங்கார சதகம் மற்றும் பர்த்ருஹரி நீதி சதகம்' எனும் நூல்களும், சரஸ்வதி மகால் நூலக வெளியீடாக 'திருஞானசம்பந்தர் பிள்ளைத்தமிழ்' எனும் நூலும் குறிப்பிடத்தக்கனவாம்.

பர்த்ருஹரி சிருங்கார சதகம் மற்றும் பர்த்ருஹரி நீதிசதகம் எனும் இவ்விரு நூல்களும் வடமொழி நூலான 'சதகத்திரயம்' எனும் நூலின் மூன்று பகுதிகளில் முதல் இரண்டு பகுதிகளின் முறையான தமிழ்மொழிபெயர்ப்பே யாகும். இந்நூலின் தமிழ்மொழிபெயர்ப்பாளர் சுவாமிநாத தேசிகர் ஆவர். வடமொழியில் பதிப்பான நூலைக் கொண்டும், இந்நூல்நிலையத்திலேயே இருக்கும் இரண்டு பிரதிகளைக் கொண்டும் ஒப்பிட்டு இந்நூல் பதிப்பிக்கப்பட்டுள்ளது.

"சரஸ்வதி மகாலில் திருஞானசம்பந்தர் பிள்ளைத்தமிழ்ச் சுவடிகள் நான்கு உள்ளன. அவற்றின் எண்களாவன: *444, 445, 447, 564(எ)*. இவற்றில் *447, 564(எ)* ஆகிய எண்களுள்ள இரண்டு சுவடிகளும் மிகச் சிதைந்தும், பூச்சி அரித்தும் ஏடுகள் முறிந்துமுள்ளன. இதனால், இவற்றை ஒப்பு நோக்க இயலவில்லை. மற்ற இரு சுவடிகளையும் ஒப்பு நோக்கிச் சிறந்தபாடம் கொடுக்கப்பட்டுள்ளது. அதிக பாடபேதங்கள் ஒப்பு நோக்குகையில் தென்பட்டன. *444*ம் எண்ணுள்ள சுவடியில் சிறுதேர்ப்பருவம் தவிர்த்து ஏனைய ஒன்பது பருவங்களும் உள்ளன. ஆகையால் இப்பருவத்தில் *445*ஆம் எண் சுவடியில் உள்ள பாக்களை அப்படியே தந்துள்ளோம். சில பருவங்களில் பாக்கள் முன்னுக்குப் பின்னாக மாற்றி எழுதப்பட்டுள்ளன. ஆனால் பாக்களில் எவ்வித மாற்றமும் இல்லை. முத்தப் பருவத்திலும் சிறுபறைப் பருவத்திலும் ஒன்பது பாடல்களே உள்ளன. வருகைப் பருவத்தில் பதினோரு பாக்கள் உள்ளன" *(ம. சீராளன்*, திருஞானசம்பந்தர் பிள்ளைத்தமிழ், முகவுரை, தொகுதி *20*, பகுதி *1*, சரஸ்வதி மகால் நூலகப் பருவ இதழ், *1966*, ப.*4)* என்னும் பதிப்பாசிரியரின் குறிப்பால் இந்நூல் ஒப்பீடு செய்யப்பெற்ற தன்மையினை அறியமுடிகிறது.

## 7. வானொலியில் சிறப்புரை பெற்ற சுவடிப்பதிப்பு நூல்கள்

சில நூல்கள் பதிப்பாவதற்கு முன்னரே அந்நூல் பற்றிய செய்திகளை தகவல் தொடர்புச் சாதனங்கள் வழி அறிமுகப்படுத்திப் பதிப்பிக்கப்பெற்ற தன்மையையும் காணமுடிகிறது. தகவல் தொடர்புச் சாதனங்களில் வானொலியும் ஒன்று. வானொலியில் அறிமுகப்படுத்தி வெளியிட்ட நூல்கள் மூன்று. அவை மூவர் அம்மானை, எக்காலக்கண்ணி, கோதைநாச்சியார் தாலாட்டு ஆகியனவாகும். இந்நூல்கள் அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகப் பருவ இதழில் பதிப்பாவதற்கு முன்னரே இந்நூலகத்தைச் சேர்ந்தவர்களால் சென்னை வானொலியில் நூலின் சிறப்பியல்புகள் குறித்து உரையாற்றப் பெற்றுள்ளது. மூவர் அம்மானையின் சிறப்பியல்புகள் குறித்து

தி. சந்திரசேகரன் அவர்கள் *28.4.1951*இலும், எக்காலக்கண்ணியின் சிறப்பியல்புகள் குறித்து வரா. கல்யாணசுந்தரம் அவர்கள் *14.6.1952*இலும், கோதைநாச்சியார் தாலாட்டின் சிறப்பியல்புகள் குறித்து வி.எஸ். கிருஷ்ணன் அவர்கள் *20.9.1952*இலும் உரையாற்றியுள்ளனர். இவ்வுரைகளுக்குப் பிறகே இந்நூல்கள் பதிப்பிக்கப் பெற்றுள்ளன. அதாவது, மூவர் அம்மானை *1953*இலும், எக்காலக்கண்ணி *1953*இலும், கோதைநாச்சியார் தாலாட்டு *1953*இலும் என இம்மூன்று நூல்களும் இந்நூலகப் பருவ இதழ் வாயிலாக வெளிவந்துள்ளதை அறியமுடிகிறது.

### 8. இதழ்களில் விளம்பரப் படுத்திய சுவடிப்பதிப்பு நூல்கள்

வானொலியில் உரையாற்றி அறிமுகப்படுத்தி நூல்களைப் பதிப்பித்தது போல் இதழ்களில் விளம்பரப்படுத்தியும் நூல்களைப் பதிப்பித்திருக்கின்றனர். இவ்வகையில் தஞ்சை சரஸ்வதிமகால் நூல் நிலையச் சுவடிகளான தஞ்சை வெள்ளைப்பிள்ளையார் குறவஞ்சி, பட்டினத்தார் வெண்பா, வலைவீசுபுராணம் ஆகிய மூன்றையும் தொடக்கக் கால இந்நூலகப் பருவ இதழில் அறிமுகப்படுத்தி இருக்கின்றனர். *1962*ஆம் ஆண்டு தஞ்சை வெள்ளைப்பிள்ளையார் குறவஞ்சியும், *1980*ஆம் ஆண்டு வலைவீசு புராணமும் இதுவரை வெளியிடப்பெற்றுள்ளன. பட்டினத்தார் வெண்பா மட்டும் இன்னும் வெளியாகவில்லை.

### 9. பதிப்பு வரலாறு கொண்ட சுவடிப்பதிப்பு நூல்கள்

இவ்விரு நூலகங்களிலும் வெளியான நூல்களில் பெரும்பான்மையான நூல்கள் சுவடிகளிலிருந்து முதல்முறை வெளிவந்ததாகவே இருப்பதால் பதிப்பு வரலாறு இந்நூல்களுக்குக் கூறமுடியாது. எனினும், சில நூல்கள் பதிப்பு வரலாற்றுக்கு உட்படுகின்றன. இவ்வகையில் 'இலக்கண தீபம்' எனும் நூலைக் குறிப்பிடலாம். இந்நூல், தமிழ்மொழியிலுள்ள இலக்கண வகைகளை விரிவுபடக் கூறும் முறையிலே அமைந்துள்ளது. எழுத்திலக்கணம் முதலாக அணியிலக்கணம் இறுதியாக ஐந்திலக்கணங்களிலும் காணப்பெறும் பிரிவுகளனைத்தும் விளங்கக் கூறப்பட்டுள்ளன. இதில் மொத்தம் *15* செய்யுட்கள் உள்ளன. *13, 14, 15*ஆம் எண்களுள்ள செய்யுட்கள் முறையே தலை, இடை, கடைச்சங்கங்கள் இருந்த இடங்கள், காலம், அக்காலத்தில் வாழ்ந்த தமிழ்ப்புலவர் பெயர்கள், அரங்கேற்றப்பட்ட நூல்கள் முதலியவற்றைக் கூறுகின்றன.

இந்நூல், ஏற்கெனவே மதுரைத் தமிழ்ச்சங்கத்து செந்தமிழ்த் தொகுதி *4,* பகுதி *6,* ஏப்ரல்-மே *1916,* பக். *238-245*இல் *1-14* பாடல்களை நாராயணையங்கார் அவர்களால் பதிப்பிக்கப்பெற்றுள்ளது. செந்தமிழில் இந்நூல் பதிப்பாகிச் சுமார் *40* ஆண்டுகள் கழித்துச் சென்னை அரசினர்

கீழ்த்திசைச் சுவடிகள் நூலகப் பருவ இதழில் (தொகுதி *8*, பகுதி *1*) வி.எஸ். கிருஷ்ணன் அவர்களைப் பதிப்பாசிரியராகக் கொண்டு வெளிவந்துள்ளது. செந்தமிழில் பதிப்பான விவரத்தை இப்பதிப்பாசிரியர் எங்கும் குறிப்பிடவில்லை. எனவே, இவர் முன் பதிப்பைக் கண்ணுறவில்லையோ என்ற எண்ணம் உண்டாகிறது.

### 10. உரைநடையாகக் கொண்ட சுவடிப்பதிப்பு நூல்கள்

பொதுவாகச் சுவடிகள் என்றால் எல்லாம் செய்யுட்களாகத் தான் இருக்கும் என்று எண்ணுகின்றனர். உரைநடையில் அமைந்த சுவடிகளும் தமிழில் இருக்கத்தான் செய்கின்றன. மூல நூல் செய்யுளாகவோ நூற்பாவாகவோ இருக்கும் போது அதற்கு உரையாசிரியர்கள் உரை வரைய முற்படுவர். இவ்வாறு இவர்கள் உரை வரையும் போது மூலத்தோடு சேர்த்து உரை வரைவதும், மூலம் இல்லாமல் மூலத்தின் செய்யுள் எண்ணையோ/ நூற்பா எண்ணையோ முதலில் கொடுத்து உரை மட்டும் தனியே எழுதுவதும் உண்டு. மேலும் நாட்டுப்புறக் கதைகள், வரலாற்று ஆவணங்கள் போன்றவையும் உரைநடையில் எழுதப்பெற்று இருக்கின்றன. குறிப்பாக இந்நூல்கள் காகிதப் பிரதியிலேயே பெரும்பாலும் எழுதப்பெற்றன.

அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலக வெளியீடுகளில் கேரளதேச வரலாறு, கொங்கு மண்டல வரலாறு, தொண்டை மண்டல வரலாறு/ சோழ மண்டல வரலாறு போன்ற வரலாற்று நூல்களும்; சரஸ்வதி மகால் நூலக வெளியீடான 'சுமிருதி சந்திரிகை', மோடிப் பலகணி 'சிவபாரத சரித்திரம்' போன்ற நூல்களும் குறிப்பிடத்தக்கனவாம். இங்குச் 'சுமிருதி சந்திரிகை'யை மட்டும் அறிவோம். 'ஸ்மிருதி' என்ற சொல்லுக்குப் பொருள் 'நினைத்துப்பார்த்துச் சொல்வது' (வேதம்) என்பதாகும். 'சந்திரிகை' என்ற சொல் 'நிலவொளி' எனப்பொருள்படும். ஆகவே 'சுமிருதி சந்திரிகை' என்பது வேதக்கருத்துகளை இனிய எளிய முறையில் அறிவுறுத்தும் நூல் என்று பொருள் தரும். இந்நூல், மக்கள் வாழ்வதற்கு வேண்டிய ஒழுக்க நெறிகளைக் கூறுவதாகும். இன்ன இன்னார், இப்படி இப்படி நடக்கவேண்டும்; அப்படி நடக்கத் தவறினால், இன்ன இன்ன தண்டனைகள் கொடுக்கப்படல் வேண்டும் என்பன இதில் கூறப்பட்டுள்ளன. இந்நூல் மூன்று பாகங்களாக உள்ளது. பழங்காலத்தில் கையினால் செய்யப்பட்ட காகிதங்களில் கடுக்காய் மையினால் இந்நூல் எழுதப்பட்டுள்ளது.

### 11. மொழிபெயர்ப்பு நூல்கள்

பிறமொழிகளிலிருந்து தமிழ்மொழிக்குப் பெயர்க்கப்பெற்ற ஓலைச்சுவடிகளும் காகிதச்சுவடிகளும் இன்று ஏராளமாகக் கிடைக்கின்றன.

பிறமொழிச் சுவடிகளை இன்றும் மொழிபெயர்க்கின்றனர். நூல்களைப் பிறமொழியிலிருந்து மொழிபெயர்த்து வெளியிடும் தன்மையை சரஸ்வதிமகால் நூலகம் மட்டுமே பெற்றுள்ளது. அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகத்தில் இம்மொழிபெயர்ப்பு நூல்கள் வெளிவரவில்லை. இவ்வகையில் சரஸ்வதிமகால் நூலகம் சோதிடம், மருத்துவம் தொடர்பான நூல்களை மொழிபெயர்த்துத் தமிழ்மொழியில் வெளியிட்டுள்ளது. குறிப்பாகக் கர்ப்பிணி ரக்ஷை, குழந்தைகள் பராமரிப்பு போன்ற மருத்துவ நூல்களும், காலப்பிரகாசிகை என்ற சோதிட நூலும் இவ்வகைக்குள் அடங்கும். மேலும், ஆயுர்வேத உபதேசங்கள்-பாகம் *1* மற்றும் *2*உம் இவ்வகைக்குள் அடங்கும்.

மனிதன் நோயற்றவனாய் நீடூழி வாழ்வதற்குப் பின்பற்ற வேண்டியதாக சரகஸம்ஹிதா, ஸுஸ்ருத ஸம்ஹிதா, பேலஸம்ஹிதா, காச்யப ஸம்ஹிதா, அஷ்டாங்கஸங்கிரஹம், அஷ்டாங்கஹிருதயம், சாரங்கதரஸம்ஹிதா, பாவப்பிரகாசம், மானஸோல்லாஸம், சிகித்ஸா திலகம், க்ஷேம குதூஹலம், போஜன குதூஹலம் முதலிய ஆயுர்வேத நூல்களிலும், மனுஸ்மிருதி போன்ற மற்ற நூல்களிலும் பல இடங்களில் கூறப்பட்டிருக்கும் அரிய அம்சங்களை ஒன்றுகூட்டி வரிசைப்படுத்தி எல்லோருக்கும் பயன்படுமாறு விரிவான மொழிபெயர்ப்புடன் 'ஆயுர்வேத உபதேசங்கள்' என்னும் நூலை சி. ராஜராஜேச்வர சர்மா அவர்கள் மொழிபெயர்க்க சரஸ்வதிமகால் நூலகம் இதழ்களின் வழியாகவும் தனிநூலாகவும் வெளியிட்டுள்ளது. மேலும் இம்மொழிபெயர்ப்பாசிரியரே 'கர்ப்பிணி ரக்ஷை' எனும் நூலை மேற்கூறப்பெற்ற ஆயுர்வேத நூல்களில் கூறப்பட்ட - கருத்தரித்தவளைச் சிறந்த முறையில் பேணிக் காக்கப் பின்பற்றப்படவேண்டிய அரிய அம்சங்களை ஒன்றுகூட்டி எல்லோருக்கும் பயன்படுமாறு விரிவான மொழிபெயர்ப்புடனும், ஆங்காங்கு அனுபவத்தில் கண்ட உண்மைகளுடனும் இந்நூலையும் மொழிபெயர்த்து சரஸ்வதிமகால் நூலகம் வழி இதழ்களிலும் தனியாகவும் வெளியிட்டுள்ளார்.

## 12. அனுபவச் சுவடிப்பதிப்பு நூல்கள்

அனுபவத்தில் கண்ட உண்மைகளை ஒன்று திரட்டி எழுதப்பெற்ற நூல்கள் இவ்வகையில் அடங்கும். இத்தன்மையில் சரஸ்வதிமகால் நூலகம் மட்டுமே பல மருத்துவ நூல்களை வெளியிட்டுள்ளது. குறிப்பாக, அனுபவ வைத்திய முறைகள், அனுபவ வைத்தியம் - தொகுதி *1, 2, 3, 4* சரபேந்திரர் வைத்திய முறைகள் தொகுதி *1* முதல் *16* போன்றவற்றைக் குறிப்பிடலாம். சில சித்த மருத்துவர்களின் அனுபவங்களை 'அனுபவ வைத்தியம்' என்ற முறையில் வெளியிட்டுள்ளனர். சரபேந்திரர் பல மருத்துவர்களைச் சரஸ்வதி மகால் நூல் நிலையத்தில் பணிக்கு அமர்த்திப் பல நோய்களுக்கான சிகிச்சை முறைகளை எழுதவைத்திருக்கிறார். இம்முறையில் இரணரோக சிகிச்சை,

கர்ப்பிணி ரோக சிகிச்சை, பால ரோக சிகிச்சை, காஸ சிகிச்சை, சூளை ரோக சிகிச்சை, குட்ட ரோக சிகிச்சை, நயன ரோக சிகிச்சை, நீரிழிவு சிகிச்சை, பாண்டு சிகிச்சை, காமாலை சிகிச்சை, பித்தரோக சிகிச்சை, பேதிமுறைகளும் அதிசார சிகிச்சையும், வாதரோக சிகிச்சை, விஷ ரோக சிகிச்சை, ஜீவ ரோக சிகிச்சை, க்ஷயரோக சிகிச்சை, உளமாந்தைரோக சிகிச்சை போன்ற நோய்களுக்கான சிகிச்சைகள் எழுதப்பெற்று *1949* முதல் இந்நூல்கள் ஒவ்வொன்றாக பல்வேறு ஆண்டுகளில் வெளிவந்துள்ளன. இந்நூல்கள் பல மறுபதிப்புகளையும் கண்டுள்ளன. வேறெந்தச் சுவடி நூலகங்களிலும் இல்லாத இத்தன்மை இந்நூலகத்தில் மட்டுமே காணப்படுகின்றது.

### சுவடி நூலகப் பதிப்பாசிரியர்கள்

இவ்விரு சுவடிப் பதிப்பு நூலகங்களில் பதிப்பாசிரியர்களின் நிலைகள் மாறுபட்டுள்ளன. அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகப் பதிப்பாசிரியர்கள் அந்நூலகத்தில் பணியாற்றுபவர்களாகவும் அந்நூலகத்தோடு நெருங்கிய பிற துறைகளில் (தொல்பொருள் ஆய்வுத்துறை, தமிழ் வளர்ச்சித்துறை போன்ற அரசு துறைகள்) பணியாற்றுபவர்களாகவும் இருந்துள்ளனர். தனிநபர் எவரும் இந்நூலகப் பதிப்பாசிரியர்களாக இருக்கவில்லை. ஆனால், சரஸ்வதிமகால் நூலகப் பதிப்பாசிரியர்கள் தனிநபர்களாகவும், நூலகப் பணியாளர்களாகவும் இருந்துள்ளனர். அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகக் காப்பாட்சியரே பெரும்பாலான நூல்களுக்குப் பதிப்பாசிரியராக இருந்துள்ளார். ஆனால் சரஸ்வதி மகால் நூலகத்தில் நூலைப் பதிப்பு செய்பவர்கள்தான் பதிப்பாசிரியராக இருந்துள்ளனர். பொதுவாகச் சரஸ்வதிமகால் வெளியீடுகளில் பெரும்பான்மையான பதிப்பாசிரியர்கள் தனிநபர்களாகவே இருக்கின்றனர். இத்தனி நபர்களை இந்நூலகம் 'Guest Editor' என்கின்றது. இவ்வாறு இவ்விரு நூலகங்களிலும் வெளியான *461* நூல்களை *114* பதிப்பாசிரியர்கள் பதிப்பித்திருக்கின்றனர். ஒரு நூலைப் பதிப்பித்த பதிப்பாசிரியர் முதல் *76* நூல்களைப் பதிப்பித்த பதிப்பாசிரியர் (தி. சந்திரசேகரன்) வரை இவ்விரு நூலகப் பதிப்பாசிரியர்கள் இருந்துள்ளனர். ஒரு நூலை ஒரே பதிப்பாசிரியரும்; ஒரு நூலை இரண்டு பதிப்பாசிரியர்களும் பதிப்பித்திருக்கின்றனர். ஒரு நூலை இரண்டு பதிப்பாசிரியர்கள் பதிப்பிக்கும் தன்மை பெரும்பான்மையும் சரஸ்வதிமகால் நூலகத்தில் காணப்படுகின்றது.

ஒரு நூலைப் பதிப்பித்த இரு பதிப்பாசிரியர்களும், இரண்டு நூல்களைப் பதிப்பித்த இரு பதிப்பாசிரியர்களும் என இருவகையினர் உள்ளனர். ஒரு நூலைப் பதிப்பித்த வகையில் டி.எஸ். அம்ருதலிங்கம் பிள்ளை & எஸ். வெங்கட்டராஜன், சி.என். குப்புசாமி & சி.எஸ். பார்வதி, ச. சாம்டேனியல்

& ஏ. ஜோசப்பின், பி. சாம்பமூர்த்தி & சித்தூர் சுப்பிரமணிய பிள்ளை, கீ. ராமச்சந்திர ஐயர் & எஸ். சாமிநாத சாஸ்திரி, டி.வி. வரதராஜன் & என். சீனிவாசன், கே. வாசுதேவ சாஸ்திரி & கே.எஸ். சுப்ரமண்ய சாஸ்திரி, ராஜலட்சுமி ஜினகுமார் & சி.கோ. தெய்வநாயகம், போன்றோரும்; இரண்டு நூல்களைப் பதிப்பித்த வகையில் வி.ஜி. சந்திரன் & நளினி சந்திரன், சி. துரைராஜன் & சி.எஸ். உத்தமராயன், ஆர்.கே. பார்த்தசாரதி & பூ. சுப்பிரமணியம், எஸ். முத்துரத்ன முதலியார் & எம்.ஆர். கந்தசாமி பிள்ளை, கே. வாசுதேவ சாஸ்திரி & எஸ். வெங்கட்டராஜன் போன்றோரும் அடங்குவர்.

மேலும் ஒரு நூலைப் பதிப்பித்தவர்களும், இரண்டு நூல்களைப் பதிப்பித்தவர்களும், மூன்று நூல்களைப் பதிப்பித்தவர்களும், நான்கு நூல்களைப் பதிப்பித்தவர்களும், ஐந்து நூல்களைப் பதிப்பித்தவர்களும், ஆறு நூல்களைப் பதிப்பித்தவர்களும், எட்டு நூல்களைப் பதிப்பித்தவர்களும், ஒன்பது நூல்களைப் பதிப்பித்தவர்களும், பத்து நூல்களைப் பதிப்பித்தவர்களும், பதினொரு நூல்களைப் பதிப்பித்தவர்களும், பன்னிரண்டு நூல்களைப் பதிப்பித்தவர்களும், பதினேழு நூல்களைப் பதிப்பித்தவர்களும், இருபத்தெட்டு நூல்களைப் பதிப்பித்தவரும், முப்பத்திரண்டு நூல்களைப் பதிப்பித்தவரும், எழுபத்தாறு நூல்களைப் பதிப்பித்தவரும் எனப் பதினைந்து நிலைகளில் இவர்கள் அடங்குவர்.

நா. அரங்கராசன், மு. அருணாசலம், ஐ.எம். அஜுதீன், சி.எம். இரமேஷ், எஸ்.என். இராகவன், எஸ்.வி. இராதாகிருஷ்ண சாஸ்திரி, டி. இராமகிருஷ்ண அய்யங்கார், வி.ஆர். இராமச்சந்திர தீட்சிதர், எஸ். இராமலிங்கம் பிள்ளை, ஆர்.வி. இராஜகோபால ஐயங்கார், எம். இராஜமாணிக்கம், எஸ். இராஜலட்சுமி, எம். இராஜாக்கண்ணு, ஜ. இராஜு முதலியார், டி.எஸ். கங்காதரன், கே. காசிநாதன், வே. கோபாலய்யங்கார், மு. சடகோபராமாநுஜம்பிள்ளை, சத்தியபாமா காமேஸ்வரன், உ.வே. சாமிநாதையர், பொ. சாம்டேனியல், பி.சாம்பமூர்த்தி, சீதா, பா. சீனிவாசன், வி. சீனிவாச்சாரி, எஸ். சுதர்சனன், சுந்தரவரதாச்சாரியார், கே.எஸ். சுப்பிரமணிய சாஸ்திரிகள், என். சுப்பிரமணியன், டி.என். சுப்பிரமணியன், எஸ். சுவாமிநாத சாஸ்திரி, நா. செயப்பிரகாசு, எம். சௌந்தரராஜன், எஸ். தங்கவேல்நாடார், ஆர். தியாகராஜன், திருமலை ஸ்ரீ சைலா சர்மா, எம். துரைசாமி ஐயங்கார், எம்.ஏ. துரைரங்கசாமி, வி.பி. நடராஜ சாஸ்திரி, கே. நடேசன், மீ.அமு. நாசீர் அலி, பத்மாவதி, வி.எஸ். பரமசிவம், பி.ஆர். புருஷோத்தம நாயுடு, எம். மருதமுத்து, லக்ஷ்மிநாராயண உபாத்தியாயர், நா. விசுவநாதன், ஆர். விஸ்வநாதன், கே.எம். வெங்கட்ராமையா, எம்.வி. வேணுகோபால பிள்ளை, ஸ்வரண காளீஸ்வரன், கி.வா. ஜகந்நாதன் போன்றோர் ஒரு நூலைப் பதிப்பித்த பதிப்பாசிரியர்களாவர்.

சு. கணபதிராவ், கிருஷ்ணா சஞ்சீவி, வி. குஞ்சிதபாதம், சி.என். குப்புசாமி, பி.எஸ். சுலோசனா, கோ. சேதுராமன், மு. சௌரிராஜன், எஸ். தியாகராஜன், நாவல்பாக்கம் தேவநாதாச்சாரியார், ப.வெ. நாகராஜன், டி.பி. பழனியப்பப்பிள்ளை, டி.பி. மீனாட்சிசுந்தரம், முத்தம்மாள் கௌரிநாதன், இ.பா. வேணுகோபால், மு.கு. ஜகந்நாதராஜா போன்றோர் இரண்டு நூல்களைப் பதிப்பித்த பதிப்பாசிரியர்களாவர்.

சி.ஜி. இராஜன், எம்.எஸ். இராஜன், எஸ். கிருஷ்ணமூர்த்தி சாஸ்திரிகள், என். சீனிவாசன், வ.சு. செங்கல்வராய பிள்ளை, சி.கோ. தெய்வநாயகம், எம். நந்தகுமார், த. பெரியாண்டவன், நடாத்தூர் வேங்கடாசாரியன் போன்றோர் மூன்று நூல்களைப் பதிப்பித்த பதிப்பாசிரியர்களாவர். சி.எம். இராமச்சந்திரஞ் செட்டியார், எ. கிருஷ்ணசாமி மஹதிக் ராவ் சாகிப், இரா. திலகம், சி. ராஜராஜேஸ்வர சர்மா, கே. வாசுதேவ சாஸ்திரி போன்றோர் நான்கு நூல்களைப் பதிப்பித்த பதிப்பாசிரியர்களாவர். கி. கோதண்டபாணி, பூ. சுப்பிரமணியம், அ.மா. பரிமளம், எஸ். முத்துரத்ன முதலியார் போன்றோர் ஐந்து நூல்களைப் பதிப்பித்த பதிப்பாசிரியர்களாவர். அடிகளாசிரியர், வரா. கல்யாணசுந்தரம், சி. கோவிந்தராசனார், ச. பாலசுந்தரம் போன்றோர் ஆறு நூல்களைப் பதிப்பித்த பதிப்பாசிரியர்களாவர். த. கிருட்டினமூர்த்தி, ய. மணிகண்டன் போன்றோர் எட்டு நூல்களைப் பதிப்பித்த பதிப்பாசிரியர்களாவர்.

வி.எஸ். கிருஷ்ணன், ம. சீராளன் போன்றோர் ஒன்பது நூல்களைப் பதிப்பித்த பதிப்பாசிரியர்களாவர். வ. வேணுகோபாலன் அவர்கள் பத்து நூல்களைப் பதிப்பித்த பதிப்பாசிரியராவர். ச. அரங்கராசன், தி.வே. கோபாலையர் போன்றோர் பதினொரு நூல்களைப் பதிப்பித்த பதிப்பாசிரியர்களாவர். இரா. கோவிந்தசாமிபிள்ளை பன்னிரண்டு நூல்களையும், ச. திலகம், மு. பசுபதி மற்றும் எஸ். வெங்கட்டராஜன் போன்றோர் பதினேழு நூல்களையும், வீ. சொக்கலிங்கம் இருபத்தெட்டு நூல்களையும், சு. சௌந்தரபாண்டியன் முப்பத்திரண்டு நூல்களையும், தி. சந்திரசேகரன் எழுபத்தாறு நூல்களையும் பதிப்பித்திருக்கின்றனர்.

## அறியவருவன

சுவடிப்பதிப்பு வரலாற்றில் அதிகமான தமிழ் நூற் பதிப்புகளை *(சுமார் 250)* வெளியிட்ட பெருமை சரஸ்வதிமகால் நூல் நிலையத்தையே சாரும்.

இவ்விரு நூல் நிலையச் சுவடிப்பதிப்பு நூல்கள் எல்லாம் *99%* முழுமை பெற்ற சுவடிப்பதிப்பு நூல்களாகவே உள்ளன.

இவ்விரு நூலகங்களிலும் பல்வேறு வகையான நூல்கள் பதிப்பாகியுள்ளன.

சில நூல்கள் இவ்விரு நூலகங்களிலும் பதிப்பாவதற்கு முன்னரே தகவல் தொடர்புக் கருவிகளின் மூலம் மக்களுக்கு அறிமுகம் செய்யப்பெற்றுள்ளன.

பனையோலை, காகிதச்சுவடி, அச்சுநூல் போன்றவை இந்நூலகங்களின் பதிப்பிற்கு மூலங்களாகப் பயன்பட்டுள்ளன.

அந்தந்த நூலகச் சுவடிகள் மட்டுமே அந்தந்த நூலகப் பதிப்புகளாக வெளிவந்துள்ளன.

சரஸ்வதிமகால் நூலகத்தில் மட்டும் 'Off-Print Method' உண்டு.

இவ்விரு நூலகங்களும் பருவ இதழ்களை வெளியிட்டு வருகின்றன. இவற்றில் சுவடிப்பதிப்பு நூல்களையும் வெளியிட்டு வருகின்றன.

சரஸ்வதிமகால் நூலகத்தில் மட்டும் 'Guest Editor Method' நடைமுறையில் உள்ளது.

சரஸ்வதிமகால் நூலகப் பதிப்புகள் மட்டுமே மறுபதிப்புகள் பெற்றுள்ளன.

இவ்விரு நூல் நிலையங்களில் பன்மொழிச் சுவடிகள் இடம்பெற்று உள்ளதைப் போல் வெளியீடுகளும் பன்மொழியில் அமைந்துள்ளன.

அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகப் பருவ இதழ்ச் சுவடிப்பதிப்பின் முன்னுரைகள் சுருக்கமான முறையில் நூலின் தொடக்கத்திலேயே அமைய, சரஸ்வதிமகால் நூலகப் பருவ இதழ்ச் சுவடிப்பதிப்பின் முன்னுரைகள் நூலின் இறுதிப் பகுதியை அடுத்து அமைந்துள்ளன. இம்முன்னுரைகள் மிகவும் விரிவாக உள்ளன. அகீசு நூலகப் பருவ இதழில் வெளிவந்த 'பிரபந்த மரபியல்' மட்டும் மிகமிக விரிவான முன்னுரையைப் பெற்றுள்ளது.

அகீசு நூலகப் பருவ இதழில் வெளியான நூல்கள் எல்லாம் ஒரே பகுதியில் பெரும்பாலும் பதிப்பாகியிருக்க, சரஸ்வதிமகால் நூலகப் பருவ இதழில் வெளியான நூல்கள் மட்டும் பல பகுதிகளில் வெளிவந்துள்ளன.

சுவடிப்பதிப்பில் பாடலெண் பாடலின் இறுதி அடியின் வலப்பக்கத்தில் கொடுப்பதும், பாடலின் முதலடியின் இடப்பக்கத்தில் கொடுப்பதும் வழக்கம். இப்பாடலெண்கள் சுவடியிலுள்ள எண்களாயின் அடைப்புக்குறி இல்லாமலும், சுவடியிலில்லாத எண்களாயின் அடைப்புக்குறிக்குள்ளும் இடப்படுதல் முறையாக உள்ளது. இம்முறையிலிருந்து அகீசு நூலகப் பருவ இதழ்ச் சுவடிப்பதிப்பு நூல்களில் இடம்பெறும் பாடலெண் வைப்பு முறை சிலவற்றிற்கு மாறுபடுகின்றன. பல சுவடிப்பதிப்புகளில் பாடலெண் கொடுப்பதில் பதிப்பாசிரியருக்குப் பதிப்பாசிரியர் மாறுபடுகிறார்.

## முடிவுரை

'சுவடி நூலகங்களின் பதிப்பு முயற்சி' என்பது கடலைப் போன்றது. எனவே, இங்கு இரண்டு பெருஞ் சுவடி நூலகங்கள் மட்டும் ஆய்வுக்கு உட்படுத்தப்பெற்றன. அனைத்துச் சுவடி நூலகங்களின் பதிப்பு முயற்சியை மேற்கொள்வார்க்கு இவ்வாய்வு அடிப்படையாக அமையும். ஒவ்வொரு நூலகப் பதிப்பையும் முழுமையாக ஆராய்ந்தால் ஒவ்வொன்றும் ஒரு தனி ஆய்வாகலாம். அவ்வளவு பொருண்மை அடங்கியுள்ளது. சுவடிப்பதிப்பு வரலாற்றில் இவ்விரு நூலகங்களின் வெளியீடுகள் பெரும்பங்கு வகிக்கும் என்பதில் ஐயமில்லை. பெரும்பான்மையான *99%* பதிப்பு நூல்கள் முதற்பதிப்பு நூல்களாகவே அமைந்துள்ளன. இவ்விரு நூலகப் பதிப்புகளில் மூலம் மட்டும் கொண்ட சுவடிப்பதிப்புகளுக்கு வருங்காலத்தவர் உரைகண்டு வெளியிட்டால் தமிழுலகம் மிகுந்த பயன்பெறும் என்பது உறுதி.

## பயன்பட்ட நூல்கள்/இதழ்கள்


1. அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் விளக்க அட்டவணைத் தொகுதிகள், அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகம், சென்னை.

2. அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகத் தமிழ் வெளியீடுகள், அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகம், சென்னை.

3. அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகப் பருவ இதழ்கள் - தொகுதி *1-27*, அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகம், சென்னை.

4. கல்கத்தா தேசிய நூலகச் சுவடிகள் அட்டவணை.

5. சரஸ்வதிமகால் நூலகச் சுவடிகள் விளக்க அட்டவணைத் தொகுதிகள், சரஸ்வதிமகால் நூல் நிலையம், தஞ்சை.

6. சரஸ்வதிமகால் நூலகத் தமிழ் வெளியீடுகள், சரஸ்வதிமகால் நூல் நிலையம், தஞ்சை.

7. சரஸ்வதிமகால் நூலகப் பருவ இதழ்கள் - தொகுதி *1-46*, சரஸ்வதிமகால் நூல் நிலையம், தஞ்சை.

8. சாமிநாதையர் நூல் நிலையச் சுவடிகள் விளக்க அட்டவணைத் தொகுதிகள், உ.வே. சாமிநாதையர் நூல் நிலையம், சென்னை.

9. சிற்றிலக்கிய வகை அகராதி, ந.வீ. செயராமன், பாரிநிலையம், சென்னை, *1983*.

10. சுவடிக்கலை, இரா. இளங்குமரன், அரிமாப் பதிப்பகம், சேலம், 1991.

11. சுவடியியல், பூ. சுப்பிரமணியம், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1991.

12. தமிழ்ப் பல்கலைக்கழகச் சுவடிகள் விளக்க அட்டவணை - தொகுதிகள் 1-6, தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சை.

## பிற்சேர்க்கை - 1

### நூற்பட்டியல்

1. அகத்தியர் கும்மி, டாக்டர் ச. அரங்கராசன் (பதி.), சரஸ்வதி மகால் நூலக வெளியீடு, தஞ்சை, 1996.

2. அகத்தியர் தர்க்கம் 25, டாக்டர் ச. அரங்கராசன் (பதி.), சரஸ்வதி மகால் நூலக வெளியீடு, தஞ்சை, 1996.

3. அகத்தியர் நாடி, டாக்டர் ச. அரங்கராசன் (பதி.), சரஸ்வதி மகால் நூலக வெளியீடு, தஞ்சை, 1996.

4. அகத்தியர் நூல் திரட்டு, டாக்டர் ச. அரங்கராசன் (பதி.), சரஸ்வதி மகால் நூலக வெளியீடு, தஞ்சை, 1996 (இதில் அகத்தியர் கும்மி, அகத்தியர் தர்க்கம் 25, அகத்தியர் பச்சை 16, அகத்தியர் மூலிகை மர்மம், அகத்தியர் நாடி ஆகிய ஐந்து நூல்கள் இடம்பெற்றுள்ளன).

5. அகத்தியர் பச்சை 16, டாக்டர் ச. அரங்கராசன் (பதி.), சரஸ்வதி மகால் நூலக வெளியீடு, தஞ்சை, 1996.

6. அகத்தியர் மூலிகை மர்மம், டாக்டர் ச. அரங்கராசன் (பதி.), சரஸ்வதி மகால் நூலக வெளியீடு, தஞ்சை, 1996.

7. அகத்தியர் 100 (பொருளுரையுடன்), டாக்டர் ச. அரங்கராசன் (பதி.), சரஸ்வதி மகால் நூலக வெளியீடு, தஞ்சை, முதற்பதிப்பு 1988, இரண்டாம் பதிப்பு 1993.

8. அகத்தியர் (லோக மாரணம்) 110, டாக்டர் ச. அரங்கராசன் (பதி.), சரஸ்வதி மகால் நூலக வெளியீடு, தஞ்சை, 1990.

9. அகத்தியர் 2000 - முதல் பாகம், டாக்டர் எஸ். வெங்கட்டராஜன் (பதி.), சரஸ்வதி மகால் நூலக வெளியீடு, தஞ்சை, 1958.

10. அகத்தியர் 2000 - இரண்டாம் பாகம், டாக்டர் எஸ். வெங்கட்டராஜன் (பதி.), சரஸ்வதி மகால் நூலக வெளியீடு, தஞ்சை, 1958.

11. அகத்தியர் 2000 - மூன்றாம் பாகம், டாக்டர் எஸ். வெங்கட்டராஜன் (பதி.), சரஸ்வதி மகால் நூலக வெளியீடு, தஞ்சை, 1963.

12. அகப்பொருள் விளக்கவுரை, நாற்கவிராச நம்பி (ஆசி.), இராம. கோவிந்தசாமி பிள்ளை (பதி.), சரஸ்வதிமகால் நூலக வெளியீடு, தஞ்சை, 1962.

13. அண்டகோள விலாசம், வேம்பத்தூர் முத்துவேங்கடசுப்பையன் (ஆசி.), தி. சந்திரசேகரன் (பதி.), அகீசு நூலக வெளியீடு, சென்னை, 1954.

14. அதிரியர் அம்மானை, பொ. சாம் டேனியல் (பதி.), சரஸ்வதிமகால் நூலக வெளியீடு, தஞ்சை, 1986.

15. அதிரூபவதி கல்யாணம், வ. வேணுகோபாலன் (பதி.), சரஸ்வதிமகால் நூலக வெளியீடு, தஞ்சை, 1985.

16. அந்தாதிக்கொத்து-பாகம் 1, தி. சந்திரசேகரன் (பதி.), அகீசு நூலக வெளியீடு, சென்னை, 1956 (இதில் கணபதியந்தாதி, திருவரங்கப் பதிற்றுப்பத்தந்தாதி, சேடமலைப் பதிற்றுப்பத்தந்தாதி, திருவாவினன்குடி பதிற்றுப்பத்தந்தாதி, திருமங்கை கரும்பேசர் பதிற்றுப்பத்தந்தாதி, திருவெவ்வுளூரந்தாதி, மதுரை யமக வந்தாதி, சடக்கர வந்தாதி, சுப்பிரமணியரந்தாதி, சௌந்தரியந்தாதி, சித்தரந்தாதி, சிஷ்டரந்தாதி ஆகிய 12 அந்தாதி நூல்கள் இடம்பெற்றுள்ளன).

17. அந்தாதிக்கொத்து-பாகம் 2, தி. சந்திரசேகரன் (பதி.), அகீசு நூலக வெளியீடு, சென்னை, 1958 (இதில் பழனிப்பதிற்றுப்பத்தந்தாதி, மயிலாசலத்தந்தாதி, தில்லை யமக வந்தாதி, திருத்தணிகை வெண்பாவந்தாதி, திருச்செந்தில் நிரோட்டக யமக வந்தாதி, திருவரங்கத்தந்தாதி, திருக்கடன் மல்லைப் பதிற்றுப்பத்தந்தாதி, திருமழிசைப் பதிற்றுப்பத்தந்தாதி, திருஎவ்வுள் பதிற்றுப்பத்தந்தாதி, பாலையசுவாமிகள் பதிற்றுப்பத்தந்தாதி, சித்திர வெண்பாவந்தாதி, திருவரங்கத்தந்தாதி ஆகிய 11 அந்தாதி நூல்கள் இடம்பெற்றுள்ளன).

18. அரவான் களப்பலி - இசை நாடகம், கவிஞர் வையாபுரிச்சித்தர் (ஆசி.), கோ. சேதுராமன் (பதி.), சரஸ்வதிமகால் நூலக வெளியீடு, தஞ்சை, 1986.

19. அரிச்சந்திரன் அம்மானை, ய. மணிகண்டன் (பதி.), சரஸ்வதிமகால் நூலக வெளியீடு, தஞ்சை, 1995.

20. அரிச்சந்திரன் நாடகம், ச. திலகம் (பதி.), சரஸ்வதிமகால் நூலக வெளியீடு, தஞ்சை, 1985.

21. அருங்கலச்செப்பு, பூ. சுப்பிரமணியம் (பதி.), அகீசு நூலகப் பருவ இதழ், சென்னை, தொகுதி 20, பகுதி 1 மற்றும் 2, 1972.

22. அருணகிரி அந்தாதி - பொழிப்புரையுடன், குகை நமசிவாய தேசிகர் (ஆசி.), அடிகளாசிரியர் (பதி.), சரஸ்வதிமகால் நூலக வெளியீடு, முதற்பதிப்பு 1967, இரண்டாம் பதிப்பு 1992.

23. அருணாச்சல புராணம், எஸ். இராஜலட்சுமி (பதி.), சரஸ்வதிமகால் நூலக வெளியீடு, தஞ்சை, 1986.

24. அருணாசலேசர் மீது வண்ணமும் தாது வருஷத்து கரிப்புக் கும்மியும், என். ஸ்ரீநிவாசன் (பதி.), சரஸ்வதிமகால் நூலக வெளியீடு, தஞ்சை, 1985.

25. அரும்பாத்தை வேதவிநாயகர் பிள்ளைத்தமிழ் - குறிப்புரையுடன், தி. சந்திரசேகரன் (பதி.), அகீசு நூலக வெளியிடு, சென்னை, 1956.

26. அலங்கார நூல், முனைவர் சு. சௌந்தரபாண்டியன் (பதி.), அகீசு நூலகப் பருவ இதழ், சென்னை, தொகுதி 24, 1997.

27. அனுபவ வைத்திய முறைகள், டி.வி. வரதராஜன் & ச. திலகம் (பதி.), சரஸ்வதிமகால் நூலக வெளியீடு, முதற்பதிப்பு 1986, இரண்டாம் பதிப்பு 1989.

28. அனுபவ வைத்தியம் - தொகுதி 1, டாக்டர் சி. துரைராஜன் & டாக்டர் சி.எஸ். உத்தமராயன் (பதி.), அகீசு நூலக வெளியீடு, சென்னை, 1950.

29. அனுபவ வைத்தியம் - தொகுதி 2, டாக்டர் சி. துரைராஜன் & டாக்டர் சி.எஸ். உத்தமராயன் (பதி.), அகீசு நூலக வெளியீடு, சென்னை, 1950.

30. அனுபவ வைத்தியம் - தொகுதி 3, டாக்டர் சி. என். குப்புசாமி & டாக்டர் வி.எஸ். பார்வதி (பதி.), அகீசு நூலக வெளியீடு, சென்னை, 1951.

31. அனுபவ வைத்தியம் - தொகுதி 4, டாக்டர் சி. என். குப்புசாமி (பதி.), அகீசு நூலக வெளியீடு, சென்னை, 1952.

32. ஆசிரிய நிகண்டு, வீ. சொக்கலிங்கம் (பதி.), சரஸ்வதிமகால் நூலக வெளியீடு, தஞ்சை, முதற்பதிப்பு 1975, இரண்டாம் பதிப்பு 1997.

33. ஆத்திசூடித் திறவுகோல், தி. சந்திரசேகரன் *(பதி.)*, அகீசு நூலகப் பருவ இதழ், சென்னை, தொகுதி *2*, பகுதி *1*, *1949*.

34. ஆத்திசூடிப்புராணம், முத்தம்பல வாத்தியார் *(ஆசி.)*, வீ. சொக்கலிங்கம் *(பதி.)*, சரஸ்வதிமகால் நூலக வெளியீடு, தஞ்சை, *1977*.

35. ஆத்திசூடி வெண்பா, வரா. கல்யாணசுந்தரம் *(பதி.)*, அகீசு நூலகப் பருவ இதழ், சென்னை, தொகுதி *3*, பகுதி *1*, *1950*.

36. ஆயுர்வேத உபதேசங்கள் - பாகம் *1*, சி. ராஜராஜேஸ்வர சர்மா *(மொழி.)*, சரஸ்வதிமகால் நூலகப் பருவ இதழ், தஞ்சை, தொகுதி *19* முதல் *21* பகுதி *3* வரை, *1966-1968 (*இந்நூல் *1968, 1980, 1990, 1998* ஆகிய ஆண்டுகளில் முறையே தனிப்பதிப்புகளாக வெளிவந்துள்ளது*)*.

37. ஆயுர்வேத உபதேசங்கள் - பாகம் *2*, சி. ராஜராஜேஸ்வர சர்மா *(மொழி.)*, சரஸ்வதிமகால் நூலகப் பருவ இதழ், தஞ்சை, தொகுதி *22* முதல் *23* பகுதி *1* வரை, *1968-1969 (*இந்நூல் *1969, 1980, 1990, 1998* ஆகிய ஆண்டுகளில் முறையே தனிப்பதிப்புகளாக வெளிவந்துள்ளது*)*.

38. ஆலம்நபி கதைப்பாட்டு, மீ.அமு. நாசீர் அலி *(பதி.)*, சரஸ்வதி மகால் நூலக வெளியீடு, தஞ்சை, *1989*.

39. ஆழ்வார் திருவனந்தல், த. கிருட்டினமூர்த்தி *(பதி.)*, அகீசு நூலகப் பருவ இதழ், சென்னை, தொகுதி *14*, பகுதி *1*, *1961*.

40. ஆனந்தகாண்டம், எஸ்.வி. இராதாகிருஷ்ண சாஸ்திரி *(பதி.)*, சரஸ்வதி மகால் வெளியீடு, தஞ்சை, *1952*.

41. ஆனந்தரங்கன் கோவை, என். சுப்பிரமணியன் *(பதி.)*, அகீசு நூலக வெளியீடு, சென்னை, *1955*.

42. ஆஸ்தான கோலாஹலம், திருமலை ஸ்ரீ சைலாசர்மா *(பதி.)*, அகீசு நூலக வெளியீடு, சென்னை, *1951*.

43. இடங்கை வலங்கையர் வரலாறு, சு. சௌந்தரபாண்டியன் *(பதி.)*, அகீசு நூலக வெளியீடு, சென்னை, *1995*.

44. இராகத்தாள பிரத்தாரம், சு. சௌந்தரபாண்டியன் *(பதி.)*, அகீசு நூலக வெளியீடு, சென்னை, *1995*.

45. இராகவர் பிள்ளைத்தமிழ் - குறிப்புரையுடன், தி. சந்திரசேகரன் *(பதி.)*, அகீசு நூலக வெளியீடு, சென்னை, *1956.*

46. இராமதேவர் சூத்திரம் *(*அஷ்டாங்க பட்சிணி, வாலை பூஜை*)*, டாக்டர் எம்.எஸ். ராஜன் *(*பதி.*)*, சரஸ்வதிமகால் நூலக வெளியீடு, தஞ்சை, *1991.*

47. இராமநாடக கீர்த்தனைகள், ச. பாலசுந்தரம் *(*பதி.*)*, சரஸ்வதிமகால் நூலக வெளியீடு, தஞ்சை, *1997.*

48. இராமய்யன் அம்மானை, சி.எம். இராமச்சந்திரசெட்டியார் *(*பதி.*)*, சரஸ்வதிமகால் நூலக வெளியீடு, தஞ்சை, *1950.*

49. இராமர் அம்மானை, அ.மா. பரிமணம் *(*பதி.*)*, சரஸ்வதிமகால் நூலக வெளியீடு, தஞ்சை, *1981.*

50. இராமலிங்க சுவாமிகள் பிள்ளைத்தமிழ் - குறிப்புரையுடன், தி. சந்திரசேகரன் *(*பதி.*)*, அகீசு நூலக வெளியீடு, சென்னை, *1959.*

51. இராயர் அப்பாச்சி கதைகள், ய. மணிகண்டன் *(*பதி.*)*, சரஸ்வதிமகால் நூலக வெளியீடு, தஞ்சை.

52. இராஜகோபால மாலை, ய. மணிகண்டன் *(*பதி.*)*, சரஸ்வதிமகால் நூலக வெளியீடு, தஞ்சை.

53. இரிஷிவிந்தக் குறவஞ்சி, ஆர்.கே. பார்த்தசாரதி & பூ. சுப்பிரமணியம் *(*பதி.*)*, அகீசு நூலகப் பருவ இதழ், சென்னை, தொகுதி *17,* பகுதி *2, 1965,* தொகுதி *18,* பகுதி *1, 1968.*

54. இலக்கணக்கொத்து - மூலமும் உரையும், திருவாவடுதுறை சுவாமிநாத தேசிகர் *(*ஆசி.*)*, தி.வே. கோபாலையர் *(*பதி.*)*, சரஸ்வதிமகால் நூலக வெளியீடு, முதற்பதிப்பு *1973,* இரண்டாம் பதிப்பு *1990.*

55. இலக்கண விளக்கம் - எழுத்ததிகாரம், தி.வே. கோபாலையர் *(*பதி.*)*, சரஸ்வதிமகால் நூலக வெளியீடு, தஞ்சை, *1971.*

56. இலக்கண விளக்கம் - சொல்லதிகாரம், தி.வே. கோபாலையர் *(*பதி.*)*, சரஸ்வதிமகால் நூலக வெளியீடு, தஞ்சை, *1971.*

57. இலக்கண விளக்கம் - பொருளதிகாரம் - அகத்திணையியல் முற்பகுதி, தி.வே. கோபாலையர் *(*பதி.*)*, சரஸ்வதிமகால் நூலக வெளியீடு, தஞ்சை, *1972.*

58. இலக்கண விளக்கம் - பொருளதிகாரம் - அகத்திணையியல் பிற்பகுதி, தி.வே. கோபாலையர் *(பதி.)*, சரஸ்வதிமகால் நூலக வெளியீடு, தஞ்சை, *1972*.

59. இலக்கண விளக்கம் - பொருளதிகாரம் - அணியியல், தி.வே. கோபாலையர் *(பதி.)*, சரஸ்வதிமகால் நூலக வெளியீடு, தஞ்சை, *1973*.

60. இலக்கண விளக்கம் - பொருளதிகாரம் - செய்யுளியல், தி.வே. கோபாலையர் *(பதி.)*, சரஸ்வதிமகால் நூலக வெளியீடு, தஞ்சை, *1974*.

61. இலக்கண விளக்கம் - பொருளதிகாரம் - பாட்டியல், தி.வே. கோபாலையர் *(பதி.)*, சரஸ்வதிமகால் நூலக வெளியீடு, தஞ்சை, *1974*.

62. இலக்கண விளக்கம் - பொருளதிகாரம் - புறத்திணையியல், தி.வே. கோபாலையர் *(பதி.)*, சரஸ்வதிமகால் நூலக வெளியீடு, தஞ்சை, *1972*.

63. இலக்குமி வெண்பா, இ.பா. வேணுகோபால் *(பதி.)*, அகீசு நூலகப் பருவ இதழ், சென்னை, தொகுதி *9*, பகுதி *2*, *1956*.

64. உத்தரராமாயண நாடகம், தி. சந்திரசேகரன் *(பதி.)*, அகீசு நூலக வெளியீடு, சென்னை, *1960*.

65. உபதேசகாண்டம் - தொகுதி *1*, ஞானவரோதய பண்டாரம் *(ஆசி.)*, வ.சு. செங்கல்வராயபிள்ளை *(பதி.)*, அகீசு நூலக வெளியீடு, சென்னை, *1950*.

66. உபதேசகாண்டம் - தொகுதி *2*, ஞானவரோதய பண்டாரம் *(ஆசி.)*, வ.சு. செங்கல்வராயபிள்ளை *(பதி.)*, அகீசு நூலக வெளியீடு, சென்னை, *1950*.

67. உபதேசகாண்டம் - தொகுதி *3*, ஞானவரோதய பண்டாரம் *(ஆசி.)*, வ.சு. செங்கல்வராயபிள்ளை *(பதி.)*, அகீசு நூலக வெளியீடு, சென்னை, *1950*.

68. எக்காலக்கண்ணி, வி.எஸ். கிருஷ்ணன் *(பதி.)*, அகீசு நூலகப் பருவ இதழ், சென்னை, தொகுதி *6*, பகுதி *1*, *1953*.

69 எட்டெட்டந்தாதி, மு. பசுபதி *(பதி.)*, அகீசு நூலகப் பருவ இதழ், சென்னை, தொகுதி *7*, பகுதி *2*, *1954*.

70. எண்ணெய் வாகடம், ச. அரங்கராசன் (பதி.), சரஸ்வதிமகால் நூலக வெளியீடு, தஞ்சை, 1989.

71. எலிவிடுதூது, இபா. வேணுகோபால் (பதி.), அகீசு நூலகப் பருவ இதழ், சென்னை, தொகுதி 8, பகுதி 2, 1955.

72. ஐந்து தமிழிசை நாட்டிய நாடகங்கள், வ. வேணுகோபாலன் (பதி.), சரஸ்வதிமகால் நூலக வெளியீடு, தஞ்சை, 1980, திருத்திய பதிப்பு 1990 (இதில் பூலோக தேவேந்திர விலாசம், சந்திரிகா ஹாஸை விலாசம், சகசி மன்னன் மீது குறவஞ்சி, விஷ்ணு சாகராஜ விலாசம், காவேரி கல்யாணம் ஆகிய ஐந்து தமிழிசை நாட்டிய நாடகங்கள் இடம் பெற்றுள்ளன).

73. ஐயனார் கதை (வில்லுப்பாட்டு), சு. சௌந்தரபாண்டியன் (பதி.), அகீசு நூலகப் பருவ இதழ், சென்னை, தொகுதி 27, 2000.

74. கஞ்சனம்மானை, கி. கோதண்டபாணி (பதி.) சரஸ்வதிமகால் நூலக வெளியீடு, தஞ்சை, 1976.

75. கட்டபொம்மன் வரலாறு, தி. சந்திரசேகரன் (பதி.), அகீசு நூலக வெளியீடு, சென்னை, 1960.

76. கட்டிமகிபன் பள்ளு, வி.எஸ். கிருஷ்ணன் (பதி.), அகீசு நூலகப் பருவ இதழ், சென்னை, தொகுதி 13, பகுதி 1&2, 1960.

77. கணக்கதிகாரம், சத்தியபாமா காமேஸ்வரன் (பதி.), சரஸ்வதிமகால் நூலக வெளியீடு, தஞ்சை, 1998.

78. கணபதி அந்தாதி, தி. சந்திரசேகரன் (பதி.) அகீசு நூலக வெளியீடு, சென்னை, 1956.

79. கணபதி உபாசனை அல்லது மஹாகணபதி விதானம், எஸ். கிருஷ்ணமூர்த்தி சாஸ்திரிகள் (பதி.), சரஸ்வதிமகால் நூலக வெளியீடு, தஞ்சை, 1998.

80. கதிர்காமச் சிந்து, பூ. சுப்பிரமணியம் (பதி.) அகீசு நூலகப் பருவ இதழ், சென்னை, தொகுதி 17, பகுதி 1, 1965.

81. கதிர்காமவேலவன் தோத்திரம், வீ. சொக்கலிங்கம் (பதி.), சரஸ்வதிமகால் நூலகப் பருவ இதழ், தஞ்சை, தொகுதி 17, பகுதி 2, 1963, பகுதி 3, 1964.

82. கந்தர் காதல், வீ. சொக்கலிங்கம் (பதி.), சரஸ்வதிமகால் நூலகப் பருவ இதழ், தஞ்சை, தொகுதி 18, பகுதி 3, 1965.

83. கப்பல் சாஸ்திரம், டிபி. பழனியப்பப்பிள்ளை (பதி.), அகீசு நூலக வெளியீடு, சென்னை, 1950.

84. கப்பற்கோவை, உ.வே. சாமிநாதையர் (பதி.), அகீசு நூலக வெளியீடு, சென்னை, 1958.

85. கமலாலய அம்மன் பிள்ளைத்தமிழ், வைத்தியநாத தேசிகர் (ஆசி.), வீ. சொக்கலிங்கம் (பதி.) சரஸ்வதிமகால் நூலகப் பருவ இதழ், தஞ்சை, தொகுதி 21 பகுதி 2, 1968 மற்றும் தொகுதி 22, 1969.

86. கருணாகரமாலை, முத்துப்புலவர் (ஆசி.), மு. பசுபதி (பதி.) அகீசு நூலகப் பருவ இதழ், சென்னை, தொகுதி 9, பகுதி 1, 1956.

87. கருப்பர் குளுவ நாடகம், முத்தப்பச் செட்டியார் (ஆசி.) சு. சௌந்தர பாண்டியன் (பதி.) அகீசு நூலக வெளியீடு, சென்னை 1992.

88. கர்நாடக ராஜாக்கள் சவிஸ்தர சரித்திரம், வி.ஆர். இராமச்சந்திர தீட்சிதர் (பதி.), அகீசு நூலக வெளியீடு, சென்னை 1952.

89. கர்ப்பினி ரக்ஷை, சி. ராஜராஜேச்வர சர்மா (மொழி.), சரஸ்வதிமகால் நூலகப் பருவ இதழ், தஞ்சை, தொகுதி 23, பகுதி 2&3, 1970.

90. கர்மயோக ஞானயோக விளக்கப்பாடல், தி. சந்திரசேகரன் (பதி.), அகீசு நூலகப் பருவ இதழ், தொகுதி 20, பகுதி 2, 1972.

91. கலம்பகக் கொத்து, தி. சந்திரசேகரன் (பதி.), அகீசு நூலக வெளியீடு, சென்னை, 1960 (இதில் பேரைக் கலம்பகம், திருமயிலாசலக் கலம்பகம், ஞான விநோதன் கலம்பகம் ஆகிய மூன்று கலம்பக நூல்கள் உள்ளன)

92. களாபூரணோதயம், மு.கு. ஜகந்நாதராஜா (பதி.), சரஸ்வதிமகால் நூலக வெளியீடு, தஞ்சை, 1995.

93. காஞ்சிமன்னம்மானை, ம.சீராளன் (பதி.), சரஸ்வதிமகால் நூலகப் பருவ இதழ், தஞ்சை, தொகுதி 23, பகுதி 1, 1969 முதல் தொகுதி 24, பகுதி 2, 1971 வரை வெளிவந்துள்ளது.

94. காத்தவராயன் சுவாமி பேரில் கும்மிப்பாடல், ச. திலகம் (பதி.), சரஸ்வதிமகால் நூலகப் பருவ இதழ், தஞ்சை, தொகுதி 42, 1994.

